# காப்பியக் கம்பரும் புரட்சிக் கவிஞரும்

டாக்டர் சிலம்பொலி

சு. செல்லப்பன்

கம்பன் கழகம், சென்னை

இந்நூலின் சொற்பொழிவுப் படிவம் ஏவி. எம். ஆடியோ ஒலிப்பதிவு நாடாவாக எல்லா இடங்களிலும் கிடைக்கும்.

எண் : 45B 252 & 253

# காப்பியக் கம்பரும் புரட்சிக் கவிஞரும்

[அமரர் ஏவி. எம். அறக்கட்டளை
நினைவுச் சொற்பொழிவு, 1989]



டாக்டர் சிலம்பொலி
சு. செல்லப்பன்

வெளியீடு
கம்பன் கழகம்
சென்னை-85

முதற் பதிப்பு : 1989

முதற் பதிப்பின் விற்பனை உரிமை :



வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு,
தியாகராயநகர்,
சென்னை-600 017.

விலை : ரூ. 16-00

(இந்நூலின் முதற் பதிப்பு மட்டும்
ஏவி. எம். அறக்கட்டளை
நிறுவனத்தாரால் வெளியிடப்படுகிறது.)

மேலட்டை ஓவியம் : உகி

மாருதி பிரஸ்,
173, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை-6000 014.

# பதிப்புரை

சென்னை கம்பன் கழகம் 1975இல் நிறுவப்பெற்றது. திரு. ஏவி.மெய்யப்பன் அவர்கள் 12-8-1976 அன்று இயற்கை அடைந்தமை வரையில், கழகத்தின் துணைத் தலைவர்களுள் ஒருவராக இருந்துவந்தார்கள்.

சினிமாத் துறையில் பெரும் பெயர் பெற்றிருந்த அவர்கள் கம்பன் கழகத்தோடு தொடர்பு கொண்டதிலிருந்து கழகத்தின் வளர்ச்சியிலும், கம்பனுடைய கவிநயத்தைப் பருகுவதிலும், முழுமையான ஈடுபாடு கொண்டிருந்தார்கள். ஒவ்வோர் ஆண்டும் தாம் தலைவராக இருந்த ஏவி.எம். அறக்கட்டளையினுடைய ஏவி.எம். இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் கம்பன் விழா நிரந்தரமாக நடைபெறுவதற்கு வழிவகுத்ததோடு, கழகத்திற்கு அவ்வப்போது தேவையான உதவிகள் அனைத்தையும் நிறைந்த உள்ளத்துடனும், மட்டற்ற மகிழ்ச்சியுடனும் செய்து வந்தார்கள்.

அன்னாருடைய மறைவுக்குப்பின், அமரர் ஏவி.எம். அவர்களின் குடும்பத்தினர், அதே ஈடுபாட்டையும், அக்கறையையும் காட்டி வருகிறார்கள். அமரர் ஏவி.எம். அவர்களுடைய நினைவில் ஆண்டுதோறும் கம்பனைப் பற்றிச் சென்னைக் கம்பன் கழகத்தின் ஆதரவில், ஒரு நினைவுச் சொற்பொழிவு நடக்க வேண்டுமென்று விரும்பி, அதற்கு ஆவன செய்வதற்கு முன்வந்தார்கள்.

அந்தத் திட்டத்தின்படி அமரர் ஏவி.எம். அவர்களின் இவ்வாண்டு (ஆறாம் ஆண்டைய) நினைவுச் சொற்பொழிவு 1989, ஜூலைத் திங்கள் 28, 29 தேதிகளில் ஏவி.எம். இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடைபெற்றது.

சொற்பொழிவை டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கள் 'காப்பியக் கம்பரும் புரட்சிக் கவிஞரும்' என்ற தலைப்பில் நிகழ்த்தினார்கள்.

முதல் நாளான 28-7.89 வெள்ளிக்கிழமை அன்று, திருமதி சரோஜினி வரதப்பன் அவர்கள் தலைமை ஏற்றுத் தொடங்கி வைத்தார்கள்.

இரண்டாம் நாளான 29-7-89 சனிக்கிழமை அன்று, நீதிபதி திரு எஸ். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

இந்த நினைவுச் சொற்பொழிவின், நூல் வடிவமே இது. இதனை நூல் வடிவாக்கி. அச்சிடும் பொறுப்பையும், அமரர் ஏவி.எம். குடும்பத்தினரே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தச் சொற்பொழிவினை ஏற்பாடு செய்து, அதனைக் கம்பன் கழகத்தின் மூலம் நிறைவேற்றிய ஏவி.எம். குடும்பத்தார்க்கு எங்கள் மனம் கனிந்த நன்றி.

கம்பன் கழகம்

# முன்னுரை

திரு. ஏவி. எம். மெய்யப்பச் செட்டியார் அவர்கள் திரைப்படத் துறையில் தனித்த புகழுக்கு உரியவராக விளங்கியவர்; நாட்டுப் பற்று, இலக்கியப் பற்று என்னும் இரு கை விசி எழில் நடையிட்டவர்; விடுதலைப் போராட்ட வெந்தழலில் 'கலை நெய்' வார்த்துக் கனன்றிடச் செய்தவர்; பாரதியார் பாடல்கள் பலவற்றைத் திரைப்படங்கள் வாயிலாக ஒலிக்கச் செய்து சிறப்புச் செய்தவர். பாரதியார் பாடல்களை நாட்டுடைமையாக்க வேண்டுமெனத் தமிழ்நாடு அரசு விழைந்தபோது அவற்றை வெளியிடுவதற்கான முழு உரிமையையும் பெற்றிருந்த திரு. ஏவி. எம். அவர்கள் அரசிடம் தொகை எதுவும் பெறாமலேயே உரிமையை மனமுவந்து விட்டுக் கொடுத்த மாண்பாளர்; இலக்கியங்களையும், இலக்கியச் சான்றாளர்களையும் மதித்துப் போற்றும் மாமனிதர். அவர் நினைவாக அவர்தம் குடும்பத்தினர் ஆண்டுதோறும் சென்னைக் கம்பன் கழகம் வாயிலாக நடத்தி வருகின்ற அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் ஆறாவது பொழிவினை ஆற்றுகின்ற வாய்ப்பு எனக்குக் கிடைத்தமைக்கு எல்லையற்ற மகிழ்ச்சி கொள்கின்றேன்.

இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவுக்கு என்ன தலைப்புக் கொடுப்பது? என்று சிந்தித்திருந்தேன். இரண்டாண்டுகளுக்கு முன் புதுச்சேரி கம்பன் கழக விழாவில் 'கம்பனும் பாரதிதாசனும்' என்ற தலைப்பில் அரை மணி நேர அளவில் சொற்பொழிவாற்றினேன். அதையே விரிவாக?அறக்கட்டளைச் சொற்பொழிவாக்கலாம் என நண்பர்கள் ஊக்க உரை தந்தனர். எனவே, "காப்பியக்

கம்பரும் புரட்சிக் கவிஞரும்" என்னும் இத்தலைப்பு உருப் பெற்றது.

கம்பனும் பாரதிதாசனும் இரு துருவங்களாகக் கருதப் படுபவர்கள்; இரு வேறு கொள்கைகட்கு முன்னோடிகளாக நிற்பவர்கள். இவர்களை இணைத்துப் பேசுவது எவ்வாறு? என்ற வினா எழுந்தது. உலக உருண்டையில் தென் முனையும், வடமுனையும் நேர் எதிரானவையாகவும் இணைக்க முடியாதவையாகவும் இருந்தபோதிலும் அவற்றை இணைத்து, நிரைகோடுகள் (Longtitude) உருவாக்கப் பட்டிருக்கின்றன அல்லவா? உலகக் கோளத்திலுள்ள அந்நிரைகோடுகளைப் போன்றதே இச்சொற்பொழிவு.

உலக உருண்டையில் சிற்றெறும்பு ஒன்று ஊர்வது போன்றதே இம்முயற்சி. துருவங்களிடையே பயணத்தை முடிக்கின்ற ஆற்றல் சிற்றெறும்புக்கு இல்லை. எனினும், வல்லார் வழி காண்பர் என்ற நம்பிக்கையுண்டு.

கம்பனில் ஊறித் திளைத்த அறிஞர் பலர் இருக்கின்ற போதிலும், இப்பணியினை ஆற்ற எனக்கு வாய்ப்பளித்த, சென்னைக் கம்பன் கழகத் தலைவர் மாண்பமை நீதியரசர் மு. மு. இஸ்மாயீல் ஐயா அவர்களுக்கும், கம்பன் கழகத் தாருக்கும், ஏவி. எம். குடும்பத்தினருக்கும் குறிப்பாகத் திருமதி இராஜேசுவரி மெய்யப்பன், திரு. ஏவி.எம். சரவணன் ஆகிய பெருமக்கட்கும் உரிய வேளையில் சீரிய முறையில் அச்சிட்டுத் தந்த 'மாருதி' அச்சகத்தார்க்கும் என் நெஞ்சு நிறை நன்றியை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

அன்பன்

சு. செல்லப்பன்

## பொருளடக்கம்

# 1. காப்பியக் கம்பரும் புரட்சிக் கவிஞரும்

கம்பனும் பாரதிதாசனும் எனும் இத் தலைப்பே பலருக்கு வியப்புக்குரியதாகத் தோன்றும்! கம்பன் இராமாயணம் பாடியவன்.

பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து—கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே—நூலின்
நன்னயம் முற்றும் தெளிகுவமே[1]

என இராமாயணத்தைப் பாவலர்கள் பாராட்டுகின்ற சிறப்பு ஒரு பக்கம். இராமாயணம் நடந்த கதை அன்று. ஆரியர்களை உயர்த்தி, திராவிடர்களைப் பழிக்க வால்மீகியால் எழுதப்பட்ட நெடுங்கதை. அதில் ஆரியர்கள் கடவுளர்களாகவும் தேவர்களாகவும் போற்றப்பட்டுள்ளனர். திராவிடர்கள் அரக்கர்களாக வும் குரங்குகளாகவும் கரடிகளாகவும் சித்தரிக்கப் பட்டுள்ளனர். "எனவே, ஆராய்ச்சியாளர்களின் முடிவு இராமாயணம் ஆரியக் கதை என்பதும், ஆரிய திராவிடப் போராட்ட விவரம் என்பதும் ஆகும். அதனைக் கம்பர் எழுதியுள்ள முறை, தமிழர் ஆரியத்தை ஏற்றுக்கொள்ளும் தூண்டுகோலாகவும், தமிழினம் ஆரிய இனத் தலைமையிடம் தோற்றுவிட்டது என்பதை ஒப்புக்கொள்ளச் செய்வதாகவும் இருப்பதால் இந்

---

1. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, மலரும் மாலையும், பக். 18

நூலைப் படித்திடும் தமிழினம் தன்னம்பிக்கை, தன்மானம் இழந்துவிடுகின்றது. தமிழினம் புத்துயிர் பெற இத்தகைய ஆரியக் கதை அகற்றப்பட வேண்டும்" என இராமாயணத்திற்கு எதிரான கண்டனக் குரல் ஒரு பக்கம்.[1] பாராட்டுவோர், கண்டிப்போர் என்னும் இவ்விரு சாரார்கள் இரண்டாவது சொல்லப்பட்ட பிரிவினரைச் சார்ந்தவர் பாரதிதாசன்.

தென்திசையைப் பார்க்கின்றேன் என்சொல்வேன் என்றன்
சிந்தையெலாம் தோள்களெலாம் பூரிக்குது அடடா!
அன்றந்த இலங்கையினை ஆண்ட மறத்தமிழன்
ஐயிரண்டு திசைமுகத்தும் தன்புகழை வைத்தோன்
குன்றெடுக்கும் பெருந்தோளான் கொடைகொடுக்கும் கையான்
குள்ளநரிச் செயல்செய்யும் கூட்டத்தின் கூற்றம்
என்தமிழர் மூதாதை என்தமிழர் பெருமான்
இராவணன்காண் அவன்நாமம் இவ்வுலகம் அறியும்!

வஞ்சக விபீஷணனின் அண்ணன் என்றுதன்னை
வையத்தார் சொல்லும்ஒரு மாபழிக்கே அஞ்சும்
நெஞ்சகனை, நல்யாழின் நரம்புதனைத் தடவி
நிறையஇசைச் செவியமுது தரும்புலவன் தன்னை,
வெஞ்சமரில் சாதல்வர நேர்ந்திடினும் சூழ்ச்சி
விரும்பாத பெருந்தகையைத் தமிழ்மறைகள் நான்கும்
சஞ்சரிக்கும் நாவானை வாழ்த்துகின்ற தமிழர்
தமிழர்என்பேன் மறந்தவரைச் சழக்கர்எனச் சொல்வேன்!

வீழ்ச்சியுறு தமிழகத்தில் எழுச்சி வேண்டும்;
விசையொடிந்த தேகத்தில் வன்மை வேண்டும்;

---

1. பேரறிஞர் அண்ணா, தீ பர்வட்டும், பக். 11

சூழ்ச்சிதனை வஞ்சகத்தைப் பொறாமை தன்னைத்
தொகையாக எதிர்நிறுத்தித் தூள்தூ ளாக்கும்
காழ்ச்சிந்தை மறச்செயல்கள் மிகவும் வேண்டும்;
கடல்போலச் செந்தமிழைப் பெருக்க வேண்டும்;
கீழ்ச்செயல்கள் விடவேண்டும்; இராவ ணன்தன்
கீர்த்திசொல்லி அவன்நாமம் வாழ்த்த வேண்டும்[1]

என இராவணனை உயர்த்தியும் வீடணனைப் பழித்தும் கம்பனுக்கு மாறான கருத்துடன் பாடியுள்ளவர் பாவேந்தர்.

இவ்வாறு இருவேறு கருத்துகள் இருந்தபோதிலும் இவ்விரு பெரும் கவிஞர்களை ஒப்புநோக்கி, அவர்தம் கவியுள்ளத்தை உணர்ந்து தெளிய இப்பொழிவு பயன் பட வேண்டுமென்பதே நோக்கம்.

இவ்விரு கவிஞர்களும் தாம்தாம் வாழ்ந்த காலத்தில் கவியுலகில் தனிச் சிறப்புப் பெற்றுத் திகழ்ந்திருக் கின்றனர்.

கம்பர் கவிச்சக்ரவர்த்தி என்று பாராட்டப் படுகிறார். பாரதிதாசன் பாவேந்தர் எனச் சிறப்பிக்கப் பெறுகிறார்.

கருத்தளவில் மாறுபடுபவர்கள்கூட இவ்விருவரின் கவித்திறத்தைப் பாராட்டிப் போற்றிடத் தவறவில்லை. "உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றபொழுது தமிழ் நாட்டுப் புலவர் பெருமக்களுக்கெல்லாம் சென்னைக் கடற்கரையில் சிலைகள் வைத்த நேரத்தில் கம்பருக்கும் ஒரு சிலை வைத்துள்ள நாங்கள் கம்பனைப் பாராட்டத்

1. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, பக். 174

தவறியவர்களல்லர்—கம்பனுடைய தமிழைப் பாராட்டத் தவறியவர்களல்லர் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்...எரிப்பதிலே பலவகை உண்டு. அடுப்பெரிப்பது நல்ல அறுசுவையான உணவு கிடைப்பதற்காக; விளக்கு எரிப்பது வீட்டில் ஒளி கிடைப்பதற்காக; அதைப் போலவே கம்பராமாயணத்தை எரிக்க வேண்டுமென்று கூறியதும், கம்பனுடைய கவியுள்ளத்தை மட்டும் புலவர்கள் நாட்டு மக்களிடத்திலே எடுத்துச் சொல்லவேண்டும் என்பதற்காகத்தான் என்பதைப் புலவர் பெருமக்கள் புரிந்து கொண்டார்கள். ஆகவே புலவர்கள் புரிந்து கொண்ட பிறகு அந்தக் காரியத்தைச் செய்ய வேண்டியதில்லை என்றுதான் அந்த முயற்சி கைவிடப்பட்டது"[1] என டாக்டர் கலைஞர் அவர்கள் 1969 ஏப்ரல் திங்களில் நடைபெற்ற காரைக்குடி கம்பன் விழாவில் எடுத்துரைத்துள்ளார்கள். இதேபோன்றுதான் பாரதிதாசனின் தன்மான இயக்கக் கொள்கைகளிலிருந்து மாறுபட்டவர்கள்கூட, அவருடைய புலமைத் திறத்தைப் பாராட்டத் தவறியதில்லை. "அவர் பாட்டின் கருத்தை விரும்பாதவர்களும் சொற்களைக்கொண்டு மயக்கும் மகேந்திர சாலத்தில் மயங்காதிருக்கமுடியாது"[2] என்கிறார் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்.

அரசியலில் அவன்கொள்கை தனையொப் பாத
அவர்களுமன் னோன்கவிதை யின்பத் தாழ்ந்தார்;
விரசுமெந்தக் கருத்தெனினும் விளக்கெண் ணெய்போல்
மெதுவாக வழவழயெனச் சொல்ல மாட்டான்;

---

1. டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி, மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்று, பக்.23
2. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், அனுக்கதிர், பாவேந்தர் மலர் 1964, ப. 13

உரைசெய்யும் வேகத்தில் பகைவர் நெஞ்சம்
உள்நடுங்கக் கவிச்சவுக்கை வீசல் உண்டு;
தரைசெய்யும் வாழ்வினிலே கவிகள் சில்லோர்
தாமிருப்பார்; அவருள்ளே சிறந்தான் அம்மா[1]

என்கிறார் அறிஞர் கி. வா. ஜகந்நாதன்.

கம்பர், புரட்சிக் கவிஞர் ஆகிய இருவருமே எவருக்கும் அஞ்சாத நெஞ்சுரம் படைத்தவர்களாய் விளங்கியுள்ளனர். கம்பர் எழுதியதாக ஒரு தனிப் பாடல் உண்டு. இராமாயணம் எழுதிய கம்பர் அவர் அல்லர் என்று சொன்னாலும் கம்பர் பெயரால் வழங்கும் அப் பாடல் கவிஞர் ஒருவரின் உள்ள உறுதியையும் மன வலிமையையும் நன்கு புலப்படுத்துகிறது. தன்னை யாதரித்த சோழ மன்னனிடம் கம்பர் மாறுபாடு கொண் டார். வெகுண்ட மன்னன் கம்பரைத் தன் நாட்டைவிட்டு வெளியேறும்படிக் கூறினானாம்! அப்போது கம்பர் "நீ மட்டும்தான் அரசனோ? வளம் பொருந்திய நாடு உன்னுடையது மட்டும்தான் என்பதுன் எண்ணமோ? புலவனாகிய என்னை விரைந்து ஏற்று ஆதரிக்காத அரசனும் உண்டோ? குரங்கை ஏற்றுக்கொள்ளாத கொம்பும் உண்டோ?" என வினாக் கணைகளைத் தொடுத்ததாக ஒரு பாடல் உண்டு.

மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ?
உன்னையறிந் தோதமிழை ஓதினேன்—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ? உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?[2]

1. கி. வா. ஜகந்நாதன், சுடர், பாரதிதாசன் மலர் 1966
2. தனிப்பாடல் திரட்டு, கா. சு. பிள்ளை பதிப்பு, முதற்றொகுதி, பக். 84

குரங்கை ஏற்றுக்கொள்ளாத கொம்பு இல்லாதது போன்று புலவர்களை ஏற்றுக்கொள்ளாத அரசர்களும் இல்லை என்று கூறிய கம்பர் துணிவை இங்குக் காண்கிறோம்.

பாரதிதாசனும் இத்தகைய மனத்துணிவுடையவரே! "தமிழாசிரியராக முப்பத்தெட்டு ஆண்டுகள் பணியாற்றிய அவர் இரண்டொரு முறைகள் மட்டுமே ஊதிய உயர்வு பெற்றுள்ளார். இதற்காக அவர் வருந்தியதில்லை. அரசின் போக்குக்கெல்லாம் தலையசைப்பதும் ஊரில் அவ்வப்போது ஏற்படும் ஆட்சி மாற்றத்திற்கேற்பத் தம்மை மாற்றிக்கொள்வதும் அவருக்குப் பிடிக்காது. பணியிலிருந்து ஓய்வு பெற்றபோது அவர் நாட்குறிப்பில் ஒரு பாடலை எழுதியுள்ளார்.

> எட்டுப் பதினொன்று நாற்பத்தா றிட்ட எழிலுறுநாள்
> விட்டுப் பிரிந்ததென் ஆசிரியப்பணி—மேலும்எனைக்
> கட்டுப் படுத்துவ தொன்றில்லை திங்கட் கடைசிதொறும்
> தட்டாது வந்திடும் ஐம்பான் வெண்பொற்காசு சம்பளமே!

முப்பத்தெட்டாண்டுகள் ஆசிரியப் பணிபுரிந்து ஓய்வு பெற்ற நாளை 'எழிலுறு நாள்' என ஏத்திப்பாடி மகிழ்கிறார்."[1] கட்டுப்பாடு நீங்கிய களிப்பும் உரிமை உணர்வின் எழுச்சியும் பாடலில் கொப்புளித்திடக் காண்கிறோம்!

கவிவளத்தாலும் காலத்தை வென்ற திறத்தாலும் இறவாப் புகழ் எய்தியுள்ள இவ்விரு கவிவேந்தர்களை இனி ஒப்பிட்டுக் காண்போம்!

---

1. மன்னர் மன்னன், கறுப்புக் குயிலின் நெருப்புக் குரல்கள், பக். 48

## 2. நிறைவாய்க் கண்ட மனம்

பாரதிதாசன் தொடக்க காலத்தில் பக்திப் பாடல்கள் எழுதுபவராகவும் புராண இதிகாசங்களை மதிப்பவராகவும் இருந்திருக்கிறார். பாடல் எழுதும் ஆற்றல் பெற்றிருந்த அவரிடம், பாடல் எழுதித் தருமாறு கேட்டவர்கட்கெல்லாம், அவர்கள் விரும்பியவண்ணம் எழுதியும் தந்திருக்கிறார். அப்போதெல்லாம் இராமாயணத்தில் அவருக்கு ஈடுபாடு இருந்திருக்கிறது. இந்தியத் திருநாட்டைப் பாராட்டும் அவர், இது சீதையைப் பெற்றெடுத்த சிறப்புக்குரியதென்றும், கம்பனைச் சம்பத்தாகப் பெற்ற பெருமைக்குரியதென்றும் பாடுகின்றார்.

நாதந்தி னாதந்தி
நாதந்தி னாதந்தி
நாதந்தி னாதந்தி—தந்தினாதந்தி
நாதந்தி னாதந்தினா

என்ற சந்தத்தில்,

கலை கற்ற தாய் செல்வ
நிலை பெற்ற தாய், காடு
மலை பெற்றதாய் எங்கள்தாய்—எனிற்பாரதத்தாய்
புலையற்ற தெய்வி கத்தாள்

என பாரதத்தைப் பாராட்டும் பாடலிலே,

சீதைக்குத் தாய்இவர்
மாதுக்குத் தாய் நல்அ
சோதைக்குத் தாய் எங்கள்தாய்—எனிற்பாரதத்தாய்
நீதங்கொள் தெய்விகத்தாள்

கம்பற்குத் தாய் காளி
நம்பற்குத் தாய் மற்ற
சம்பத்தின் தாய் எங்கள்தாய்—எனிற்பாரதத்தாய்
இம்பர்க்குத் தெய்விகத்தாள்[1]

என இராமாயணத் தலைவியையும், கம்பனையும் போற்றிப் பாடியிருக்கக் காண்கிறோம். அவருக்குப் பாரதத்தின் போற்றுதற்குரிய பெண்டிராகச் சீதையும், அசோதையும் தெரிகின்றனர்; புலமையாளர்களாகக் கம்பனும் காளிதாசனும் காட்சியளிக்கின்றனர்.

"மது மக்களைக் கெடுப்பது, மது அரக்கனை நாட்டை விட்டே ஓட்டவேண்டும்" என்னும் கருத்துடைய பாடல்களைப் பாரதிதாசன் பாடியிருக்கிறார். மதுவைக் குடித்து அழிந்த குடியர்கள் "இம்மது எங்களை மோசம் செய்ய வந்தது என்பது தெரியாது ஏமாந்தோம்! பொய் மானைக் கண்டு இராமன் ஏமாந்து மயங்கியதுபோல நாங்களும் இக் கள்ளின் போதையால் குடும்பத்தோடு கெட்டலைந்தோம். புத்தி வந்தது. இனித் தவறியும்இதனைத் தொடமாட்டோம்" என்று பாரத தேவியிடம் தம் தெளிவு கூறுகிறார்கள்.

அம்மா இனிக்குடிக்க மாட்டோம் அதன்தீமை
கைம்மேற் கனி போலக் கண்டு விட்டோம் ஏழைகள்
(அம்மா)

---

1. தேச சேவகன் இதழ், 7-11-1922

பொய்ம்மானைப் பின்பற்றி இராமன் புரிந்ததுபோல்
இம்மதுவின் மாயங்கண் டிடறித் தலை கவிழ்ந்தோம்
(அம்மா)[1]

என்னும் இப்பாடலில் பாவேந்தர், இராமாயணக் கதை நிகழ்ச்சியை மக்களுக்கு நல்லறிவு கொளுத்த எடுத்தாண்டுள்ளார்.

பாரததேசம் பல பெருமைகளைக் கொண்டது. நீதி காத்த மன்னர்களும், சிந்தை தெளிந்த ஞானியரும் இந்த மண்ணில் வாழ்ந்திருக்கின்றனர். அவர்கள் நம் மூதாதையர் என்று சொல்லும்போதே நெஞ்சிலே ஒரு பக்தி பிறக்குது—செவியிலே ஒரு சத்தியம் கேட்குது. அவர்களுடைய பெருமையைப் பாட நினைக்கும் போதே வாயில் ஆண்மை தொனிக்குது. இக்கவிதை யாண்மைக்குக் கம்பனும் காளிதாசனும் காரணரா கின்றனர். அத்தகைய புலவர்களால் பெருமை பெறுவது நம் நாடு.

கம்பன் அருங்கவி காளியின் நற்கன
வார்ந்ததுவும் இந்தத் தேசமே![2]

கம்பன் வாக்கினைப் படித்து ஆழ்ந்ததாலே பாரதிதாசனுக்கு அந்த நாளில்—அதாவது அவர் சுயமரியாதை இயக்கக் கவியாக மாறும் முன்னர் அருந்ததி, சீதை, திரௌபதி ஆகியவர்களே கற்புக்கரசி களாகத் தோற்றமளிக்கின்றனர். ஆகவே பாடுகிறார்,

1. தேசசேவகன் இதழ் 21-11-1922
2. ” 20-2-1923

கற்பின் அருந்ததி சீதை திரௌபதி
காதலறம் செயும்போதிலே—அவர்
பொற்புறு நெஞ்சிற் சுவைநினைந்தால்—இன்பு
போந்திடு தென்னுள மீதிலே[1]

எனப் பாரததேவி தன் மாணவர்க்குக் கூறுவதுபோல ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

பிறவியில் உயர்வும் தாழ்வும் சொல்லல் மடமை—இந்தப்
பிழைநீங் குவதே உயிருள்ளாரின் கடமை.........
தேசத்தினர்கள் ஓர்தாய் தந்திடு சேய்கள்—இதனைத்
தெளியா மக்கள் பிறரை நத்தும் நாய்கள்......
சித்தத்தினிலே இருளைப் போக்கும் சொல்லைக்—
கேளீர்
செனனத்தாலே உயர்வும் தாழ்வும் இல்லை
உறுதி உறுதி உறுதி
ஒன்றே சமூகம் என்றெண்ணார்க்கே—இறுதி (உறுதி)[2]

எனப் பாடியுள்ள பாவேந்தர் முன்னாளில்—தன் பிந்திய சுயமரியாதைக் கொள்கைப் பிடிப்புக்கு வரும் முன்னர்—நால் வருணப் போக்கை ஏற்றுப் பாடுகிறார்.

தேவர்கள் என்பார் யார் என்பதற்கு ஒரு பாடலில் விளக்கம் சொல்கிறார்.

தேவர்கள் யார்என்று கேட்பீர்—வீரம்
சேர்ந்திடும் வாய்மை படைத்தவர் தேவர்;
ஆவதும் தீவதும் எண்ணா(து)—அறம்
ஆண்மைத் தனத்தில் இயற்றுவர் தேவர்;
வில்லைப் பிடிக்கின்ற தோளும்—நல்ல
வேதம் படிக்கின்ற மேலான நெஞ்சும்,

1. தேச சேவகன் - 20-2-1923
2. பாரதிதாசன், பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 1, பக். 161

நல்ல வியாபார நோக்கும்—விதை
நட்டுப் பயிர்செய்யும் தாய்போன்ற அன்பும்
நாலும் நலங்குதல் இன்றி—ஒரு
நாயும் எறும்பும் அழுங்குரல் இன்றிச்
சீலம்படத் தங்கள் நாட்டைத்—திறம்
செய்து முடித்தவர் தேவர்கள் என்பேன்.[1]

இம்மாதிரிப் பாடல்களெல்லாம் அவர் தன்மான இயக்கம் சாராமுன் பாடப்பட்டவை.

இத்தகைய தேவர்க்கு விடுதலை தந்திடத் தேவி ஒவ்வொருவர்க்கு ஒவ்வோர் ஆயுதம் தந்தாள். அரக்கர்களால் கொடுமைப்படுத்தப்பட்ட அவர்களை விடுதலை செய்ய இந்திரன் தோளுக்கு வச்சிரப் படையைக் கொடுத்தாள்; அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரம் கொடுத்தாள்; இழந்த தன் மனைவியை மீட்க இராமனுக்கு வில்லைக் கொடுத்தாள்; உலகில் அதர்மத்தை அழித்துத் தர்மத்தை நிலைநாட்டக் கண்ணனுக்குச் சக்கரம் தந்தாள்; தேவர் விடுதலைக்காக இவ்வாறு படைக்கலம் தந்த தேவி, இந்தியர் விடுதலைக்கு 'இதோ உங்கள் படைக்கலம்' எனக் காட்டினாள். எங்கே என்று ஆவலோடு கேட்டோர்க்கு இராட்டையைக் காட்டினாள்.

தேவர்க்கு விடுதலை தந்திடத் தேவி
இந்திரன் தோளுக்கு வச்சிரம் ஈந்தனள்;
பார்த்தனுக் களித்தது பாசுப தாஸ்திரம்;
இராமனின் உரிமையைக் காப்பதற் கென்றே
இராமனின் தோளினில் வில்லொன்றை இட்டனள்;

1. தேச சேவகன், 24-4-1923

கண்ணன் கையிற் சக்கரம் அளித்தனள்
கண்ணன் உலகைப் பகைகொன்று காத்தனன்;
'இதோஉம் விடுதலை' என்றனள் நாமெலாம்
எங்கென்று கேட்டதில் இராட்டினம் காட்டினாள்.[1]

இந்தியத் திருநாட்டை இளைஞர்கட்கு அறிமுகப் படுத்த விடுகவியாக ஒரு பிள்ளைப் பாட்டுப் பாடுகிறார்.

தலையிலே கங்கை இருக்கிறது—சிவன் அல்ல!
காலடியிலே குமரிப்பெண் கிடக்கிறாள்—இராமன் அல்ல
கணக்கற்ற வயது உண்டு—கிழவி அல்ல
கலைக்கெல்லாம் பிறப்பிடம்—கலைமகள் அல்ல
மக்கட்குலத்தைப் பெற்றெடுத்த பெருமை உண்டு—
பிரமன் அல்ல

தலையிலே கங்கை, காலடியில் மங்கை, கணக்கற்ற வயது, கலைகளின் பிறப்பிடம், மக்கட் குலத்தின் தோற்றம் என்னும் இத்தனை அடையாளங்களும் பொருந்திய அவளுக்கு 'மங்கை' என்ற பெயரும் உண்டு. அவள் யாரென்று சொல்லுங்கள்?

கங்கைநதி தலையுண்டு சிவனா ரல்ல!
காலடியில் குமரியுண்டு இராம னல்ல!
சங்கையற்ற வயதுண்டு கிழவி யல்ல!
சாத்திரத்தின் ஊற்றனையாள் கலைமா தல்ல!
எங்குலத்தைப் பெற்றதுண்டு பிரம னல்ல!
ஏற்றுண்ணும் எண்ணமில்லை; இருமாப் பல்ல!
மங்கையென்று பாடிடுவார் புலவ ரெல்லாம்
மற்றிதனை இன்னதென வழுத்து வீரே![2]

1. தேச சேவகன், 31-7-1923
2. தேச சேவகன், 24-4-1923

இவ்வாறாகத் தொடக்க காலத்தில் இராமாயணக் கதையில் ஆழ்ந்திருந்த பாவேந்தர், கவிஞருள் சம்பத்தானவன் கம்பன்; அக் கம்பன் அருங்கவியால் இந் நாடு பெருமை கொள்ளுகிறது எனக் கம்பனைப் பாராட்டியுள்ளார். கற்பிற் சிறந்தவள் சீதை; இராமன் தன் வில்லின் ஆற்றலால் சீதையை மீட்டனன் என இராமாயணத் தலைவன் - தலைவியை வியந்து போற்றி யுள்ளார். மாரீசன் மாய மானாய் வந்த இராமாயண நிகழ்ச்சியைச் சுட்டி, கவர்ச்சியைக் கண்டு மயங்கி அழியும் நிலை மாறவேண்டும் என்கிறார். இராமன் கால் பட்டதும் கல்லாய்க் கிடந்த அகலிகை பெண்ணுருப் பெற்றாள் என்னும் இராமாயணக் கிளைக் கதையும் அவரால் எடுத்தாளப்பட்டுள்ளது.

இறையருள் சுரக்கும் சிறந்த பாடல்களை எழுதும் சுப்புரத்தினக் கவிஞரைக் காண விழைந்த பாகவதர் ஒருவர் புதுவையிலிருந்த பாரதியாரிடம் தம் விழைவைத் தெரிவித்தார். ஆலங்குப்பம் என்னும் சிற்றூரில் அவர் ஆசிரியராக இருப்பதாகவும் அங்குச் சென்று அவரைக் காணலாமெனவும் பாரதியார் தெரிவித்தார். ஆலங் குப்பம் வந்த பாகவதர் கனக சுப்புரத்தினத்தைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். ஆத்திகக் கோலத்தோடுள்ள ஒரு பெரியவரைக் காணப்போகிறோம் என்ற ஆவலில் பாகவதர் வந்தார். கனக சுப்புரத்தினமோ இளைய வராய்க் கையில் பீடியுடன் காணப்பட்டார். புதுவை திரும்பிய பாகவதர் தம் ஏமாற்றத்தைப் பாரதியாரிடம் கூற, பாரதியாரோ "உமக்குத் தேவையான பாடலை எழுதித் தரக் கேளும். உடனே சுப்பு எழுதித் தருவான்" என்று கூறினாராம். இராமாயணத்தைத் தாம் 'கதா காலட்சேபம்' செய்ய விரும்புவதாகவும் அதற்கு இசை யும் இலக்கிய நயமும் பொருந்திய பாடல்கள் தேவை

எனவும் பாகவதர் கூற, உடனே 'இந்திராதியர் தொழும்' என்று தொடங்கும் பாடலுடன் பல்வேறு பாடல்களைக் கனக சுப்புரத்தினம் எழுதி அளித்தார். இப் பாடல்களைப் பெற்றுக்கொண்டு இசையரங்கு நிகழ்த்தியவர் பெலாப்புத்தூர் சீனிவாச பாகவதர் என்று கவிஞரின் மகன் திரு. மன்னர் மன்னன் எழுதியுள்ளார்.[1] இராமாயண கதா காலட்சேபப் பாடல்களையும் பாவேந்தர் தொடக்க காலத்தில் எழுதியிருக்கிறார் என்பது இதனால் தெரிகிறது.

காலப்போக்கில் தந்தை பெரியாரின் கொள்கைகள் புரட்சிக் கவிஞரைக் கவர்ந்தன. பகுத்தறிவுக் கொள்கை களில் அவர் நெஞ்சம் பதியலாயிற்று. அதனால் புராணங்கள், இதிகாசங்கள் பற்றிய அவருடைய தொடக்க காலக் கருத்திலும் மாற்றம் நேரலாயிற்று.

1. மன்னர் மன்னன், கறுப்புக் குயிலின் நெருப்புக் குரல் கள், பக். 93-94

## 3. கனலாய்த் தெறித்த சினம்

கம்பராமாயணம் தமிழ்நாட்டில் எதிர்ப்புக்குரிய ஒரு நூலாக அமைந்தது. எதிர்ப்பு கம்பனுடைய கவித்திறமை குறித்ததன்று; அவன் படைத்த கதை பற்றியது.

இராமாயணம் ஆரிய திராவிடப் போரைக் குறிப்பது என வரலாற்றாசிரியர்கள் கருத்துரைக்கின்றனர். "இந்தியாவின் இரு பெரும் இதிகாசங்களான இராமாயணமும், மகாபாரதமும் இந்திய - ஆரியர்கள் இந்தியாவில் வேரூன்றித் தங்கள் ஆதிக்கத்தை விரிவு படுத்தத் தொடங்கியபோது நடைபெற்ற படையெடுப்புகள், உள்நாட்டுப் போர்கள் ஆகியவை பற்றிச் சொல்வன. இராமாயணம் ஆரியர்கள் தென்னாட்டில் பரவியதைக் குறிக்கும் கதைகளுள் ஒன்று" என நேரு பெருமகனார் தன் மகளுக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.[1] "ஆரியர்கள் இந்தியாவினுள் குடியேறியது இன, அரசியல் சிக்கல்களைத் தோற்றுவித்தது. ஆரியர்களால் முறியடிக்கப்பட்ட திராவிடர்கள் என்ற இனத்தினர் நீண்ட பாரம்பரியம் மிக்க நாகரிகப் பின்னணியைக் கொண்டிருந்தனர். ஆயினும் ஆரியர்கள் அவர்களைவிட மிக உயர்ந்தவர்களாகத் தங்களைக் கருதினர். ஆதலின் இரு இனத்தாரிடையே பெரும்

1. Jawaharlal Nehru, Discovery of India, PP. 99&107

பிளவு ஏற்படலாயிற்று" என்றும் நேரு மற்றொரு கடிதத்தில் எழுதியுள்ளார்.[1]

இவ்விரு இனத்தாரக்கும் இடையே வேறுபாடு ஏற்படப் பண்பாடுகளே காரணமாயின. "ஆரியர்கள் வேள்வி செய்தனர். தமிழர்கள் வேள்வியை எதிர்த்தனர். இதனால் ஆரியர்க்கும் தமிழர்க்கும் பெரும் போர் மூண்டது. இங்ஙனம் மூண்ட பெரும் போர்களின் வரலாறுகளே பின்னர்ப் புராணங்களிலும், இதிகாசங் களிலும் எழுதி வைக்கப்பட்டன. ஆரியரின் இத்தகைய வெறியாட்டு வேள்விகளை அழித்து வந்த சூரன், இராவணன் முதலான நிகரற்ற தமிழ் வேந்தர்களே ஆரியர்களால் அரக்கரென்று இகழ்ந்து பேசப்படுவார் ஆயினர்"[2] என்பார் மறைமலையடிகளார்.

ஆரியர்கள் தாங்கள் வெறுத்தொதுக்கிய திராவிடர் களை அரக்கர்கள் என்றும் குரங்குகளென்றும் பழிக்க லாயினர்.

"இராமாயணத்தில் இருந்து பண்டைத் தமிழர் வாழ்க்கை, நாகரிகம் பற்றி அரைகுறையாகவே அறிய முடியும். பண்டைத் தமிழர் பண்பாடு பற்றிப் பெரிதும் விருப்பு வெறுப்புக்குட்பட்ட கூற்றாகவே இராமாயணம் இருக்குமென்பதை நாம் மறந்து விடக்கூடாது. ஆரியர் கள் பெரிதும் அஞ்சிய பகைவர்களாக அரக்கர்கள் இருந்தனர். ஆகவே ஆரியர்கள் அவர்களை அருவருப் புருவினர்களாகவும், கொடுமையாளர்களாகவும் எடுத்

---

1. Jawaharlal Nehru, Discovery of India, P. 84
2. மறைமலையடிகள், வேளாளர் நாகரிகம் (5-ம் பதிப்பு), பக்.78

துரைப்பது இயல்பாயிற்று"[1] என்கிறார் பி.டி. சீனிவாச அய்யங்கார்.

இராமாயணத்தில் கூறப்படும் வடபுலத்தார் தென்புலத்தார் போன்ற தோற்றத்துடன் தென்னாட்டில் ஊடுருவலாயினர். "அயோத்தியா காண்டம் 93ஆம் சருக்கத்தில் வால்மீகி முனிவர் பரத நம்பி கூற்றாக 'நம் போர்வீரர்கள் மேகங்களைப் போன்ற கறுத்த கேடயங்களுடன் தென்னாட்டாரைப் போலத் தலைக்கணியாகப் பூக்களைச் சூடுகின்றனர்' என்று கூறுகின்றனர். தமிழரசர் போருக்குச் செல்லும் போது அதற்கென ஒருவகைப் பூவும் தங்குலத்திற்கென்று ஓர் அடையாளப் பூவும் ஆக இருவகைப் பூவுடையர்; போர்த் தொழில் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பூச்சூடிச் செல்லுதல் தமிழர் மரபு. நிலங்கள் அவ்வந் நிலத்திற் குரிய பூப்பெயரானே வழங்கப்பட்டன. இதனால் தென்னாட்டார் பூவணிவதிற் கொண்டுள்ள விருப்பம் வெளியாம். இதனாலேயே வான்மீகர் 'நம் போர் வீரர் தென்னாட்டாரைப்போலத் தலைக்கணியாகப் பூக்களைச் சூடுகின்றனர்' எனக் கூறிப் போந்தார்" என மு. இராகவையங்கார் விளக்குகிறார்.[2]

---

1. P.T.Srinivasa Iyengar, History of the Tamils, P.63: From the Ramayana we can but get a very meagre idea of the life and culture of the early Tamils. We ought to remember that the Ramayana can but be a highly prejudiced witness with regard to this question. The Raksasas, being the dreaded enemies of the Aryas are naturally described as ogres in bodily shape and monsters of cruelty.

2. மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, பக். 13&14

மேலும், இரு இனத்தாரிடையே மொழியாலும் வேற்றுமை மிக்கிருந்தது என்பதையும் அவர் தெளிவு படுத்துகிறார். 'வாதாவி இல்வலர் கதையை இராமபிரான் தம்மிளவற்கு எடுத்துரைக்குமிடத்தே, இல்வலன் பிராமண வேடம் தரித்துத் தம்மவர்க்குரிய தல்லாத சமஸ்கிருத மொழியைப் பேசிக்கொண்டு வந்ததாகக் கூறுவதால் அவ் வரக்கர்க்கு வடமொழி அந்நிய மொழியாயிருந்தது என்பது விளங்கும்' என்றும் இராகவையங்கார் தெளிவுபடுத்துகிறார்.[1]

ஆரிய முனிவர்களால் ஆரியம் தென்னாட்டில் நிலைநிறுத்தப்பட்டதையே இராமாயணம் விவரிக்கிற தெனலாம். வில்பிரைய்து நோயல் என்பார் "இராவணன் என்பது தென்னாட்டு மன்னர்களுக்குரிய பொதுப் பெயர். அது பத்துத் தலை அரக்கனைக் குறிப்பதன்று. ஆரியக் குடியேற்றம் ஆரிய அரசர்களால் வலுப்படுத்தப் பட்டது என்றாலும், ஆரிய முனிவர்கள் புலம் பெயர்ந்து குடியேறி ஆரியரல்லாதாரிடையே எழுந்த எதிர்ப்புகளை யும் தொல்லைகளையும் பொருட்படுத்தாது தங்கள் கடவுள்களையும், சடங்குகளையும் நுழைத்து வேள்வி களைத் தொடர்ந்து கடைப்பிடித்தபோதுதான் நடை முறையில் ஆரியக் குடியேற்றம் முழுமை பெற்றது" என்கிறார்.[2]

---

1. மு. இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, பக். 14

2. Wilfried Noelle, Dravidian Studies-A Review, P.19: Ravana was a common title of south Indian kings and was not a ten headed monster. The Aryan colonisation, though it was consolidated by the Kshatriya princes, actually began with the migration

"இராமாயணத்தின் முக்கியப் பெயர்களான சீதை, இராமன் என்ற சொற்கள் வேதத்தில் முறையே படைச்சால், நீர் என்று பொருள்பட ஒரோவிடத்து வருகின்றனவென்றும், ஆரியர் என்ற சொல்லின் மூலப் பொருள் ஏருடையாரென்றும், அவ் ஏருடையாரி என்னும் பேருடையார் முன் காடுகளாக இருந்த இடங் களை உழுது, படைச்சால்களாக்கி, நீர் பாய்ச்சிப் பயிருண்டாக்கி, நாடுகளாக்கி ஆரிய நாகரிகத்தைப் பரவச் செய்ததை அந்நூல் குறிப்பால் உணர்த்தி, அவ் வாரியர்கள் வடக்கேயிருந்து பூர்வ குடிகளை வெற்றி கொண்டு தென்னிந்தியாவைக் கடந்து இலங்கை வரை வெற்றியாளர்களாகச் சென்று, அரசுகள் அமைத்ததை வெளிப்படையாகப் புலப்படுத்துகிறதென்றும், அதனால் அது ஆரியரது வீரத்தையும் வெற்றியையும் மேம்படுத்த ஆரியக் கவி ஒருவர் கற்பனை நயங்களோடு ஒன்பான் சுவையும் மலியப் புனைந்து காட்டியதோர் கற்பனைக் கதையென்றும் கூறுகின்றனர். அப்படியானால் வான்மீக இராமாயணம் என்பது ஆரியக் கவிஞரொருவர் தமது சாதி வீரரது வெற்றிப் பிரதாபத்தை விதந்து கூறுவ தாகும்' என்று குறிப்பிடுகிறார் திரு. வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார்.[1]

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

and settlement of the sages and rishis who introduced gods and rituals among the non-Aryans and pursued their routine of sacrifices and sacraments, inspite of harass ment and provocation.

1. Pandit D. Savariroyan (Editor), The Tamilian Antiquary, Vol.I, No.II, PP. 1-2

"இராமன் ஒரு தனிப்பட்ட மனிதனே ஆயினும் அவனைத் தென்னிந்தியாவில் நாசிக் வரை குடியேறி யிருந்த ஆரிய மக்களின் பிரதிநிதியாகவே கருத வேண்டும். நாசிக்கிற்குத் தெற்கே அரக்கர்கள் அரசும், கிழக்கே குரங்குகள் அரசும் இருந்தன. இக் குரங்குகளை யும், அரக்கர்களையும் விலங்குகளாகவோ வெறுப்புக்குரிய உருவினராகவோ நாம் நோக்கக்கூடாது. இராமாயண காலத்தில் தெற்கில் இருந்த இரு முக்கியமான இனத்த வர்களை இவை குறிக்கின்றன. அரக்கர்கள் வலிமை வாய்ந்தவர்கள். ஆரியர்களுடைய மீமனிதத்தன்மையை எதிர்த்தார்கள். ஆரிய மயமாக்கும் முயற்சிகளை நெடுங் காலமாகவே முறியடித்து வந்தார்கள். குரக்கினம் எனப்படுவோர் அரக்கர்களைவிட நாகரிகத்தில் குறைந்தவர். அவர்களிடையேயும் அரசமைப்பு இருந்தது. அவர்கள் காய் கனிகளை உண்டுவந்தனர். ஆரியக் கொள்கைக்காட்பட்ட வடபுல அரசர்களின் ஆற்றலை அவர்கள் அறிந்திருந்தனர். அவர்களுடைய மொழியையும் கற்றனர். அனுமன் இராம, இலக்குவனர் களை விளிக்கும்போது சமஸ்கிருதத்தில் பேசியதாக விவரிக்கப்பட்டுள்ளது. ஆகவே அக் குரக்கினத்தார் ஆரியர்களின் கொள்கைகட்கு எளிதில் அடிமையாயினர். ஆரியர்கள் அரக்கர்களோடு தொடுத்த போரில் குரக் கினத்தார் ஆரியர்கட்கு வலிமை வாய்ந்த துணையாக இருந்தனர்"[1] என்று தென்னிந்தியாவில் ஆரியர் குடியேறிய வரலாற்றை இராமாயணம் கொண்டு விளக்குகிறார் திரு. பி. வி. நாணுப்பிள்ளை.

1. P.V.Nanu Piilay, The Ramayana-An Historical study, Tamilian Antiquary, Editor pandit D. Savariroyan, Vol.I, No. VII, PP. 15—17

ஆரிய - திராவிடப் போரின் விளைவால் எழுந்தது இராமாயணம் என்பது வரலாற்றாசிரியர் கூற்றுகளால் உறுதிப்படுகிறதாதலின் இக் கதையைத் திராவிட இயக்கத்தினர் எதிர்ப்பது இயல்பேயாம்! அதனாற்றான், "இராமாயணக் கதை 'திராவிடரை இழிவுபடுத்துவதற் காகவே ஆரியர்களால் கற்பனை செய்யப்பட்ட கட்டுக் கதை' என்றும், 'ஆரியர்களுக்குத் திராவிடர்கள்மீது இருந்த வெறுப்பைக் காட்டுவதற்கென்றே ஆரியரால் புனையப்பட்ட கதை' என்றும், மற்றும் பலவாறாகச் சரித்திர ஆசிரியர்கள் முதல் ஆய்வாளர்கள் உட்படப் பார்ப்பனராலும், வெளிநாட்டு அறிஞர்களாலும், சுயமரியாதை உணர்ச்சியுள்ள தமிழறிஞர்களாலும் ஆதாரங்களுடன் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிப் பட்ட நிலையிலுள்ள இராமாயணத்தைக் கடவுள் கதை யாகப் பாவித்து, பாமர மூட மக்களிடம் புலவர்கள் புகுத்தி, அதில் பயன்பெறுகிறார்கள் என்றால்—இதற்கு எதை ஒப்பிடுவது? இப் புலவர்களுக்கு எதை உதாரண மாக்குவது? தோழர்களே! சிந்தியுங்கள்! நன்றாய்ச் சிந்தியுங்கள்! புலவர்களுக்குப் புத்தி, மானம் இல்லாவிட் டாலும் நீங்களாவது கொளுத்துங்கள் இராமா யணத்தை" எனச் சீற்றத்தோடு எழுதுகிறார் பெரியார் ஈ.வே.ரா.[1] கம்பன் இளங்கோவைப்போலத் தமிழ் நாட்டுக் கதை ஒன்றை எடுத்துத் தன் புலமையை வெளிப்படுத்தியிருக்கலாம். தமிழினத்தை இழிவு செய்யும் நோக்குடன் எழுந்த ஒரு கதைக்கு மெருகூட்டி யிருக்க வேண்டாம் என்பது இராமாயண எதிர்ப் பாளர்களின் வாதம்!

---

1. பெரியார் ஈ. வே. ரா., விடுதலை - தலையங்கம், 27-10-1972

"லெனின் 'சமயம் மக்களுக்கு அபின் போன்றதாகும்' என்று கூறிச் சென்றார். சமுதாயப் புரட்சிசெய்ய விரும்பிய பாரதிதாசனுக்கு லெனினுடைய இந்தச் சொற்கள் தாரக மந்திரமாக அமைந்துவிட்டன. எனவே, தமிழ் நாட்டில், தமிழரிடத்தில், தமிழர் வாழ்வில் உள்ள தவறுகளை, குறைகளைப் போக்க வேண்டுமானால் தமிழர்கள் சமய நம்பிக்கையிலிருந்து விடுபட வேண்டுமென்று முடிவுக்கு வந்திருக்கிறார் புரட்சிக் கவிஞர்.

சமயம் ஒழிய வேண்டும்; சமயத்தின் ஆணிவேராக இருக்கின்ற நம்பிக்கைகள் ஒழிய வேண்டும்; இந்த நம்பிக்கையை வளர்ப்பதற்குரிய சாத்திர, புராண, இதிகாசப் பகுதிகள் ஒழிய வேண்டும் என்ற அழுத்தமான முடிவுக்கு வந்தார் பாரதிதாசன்."[1] மக்களிடம் மண்டிக் கிடக்கும் மூடப் பழக்கவழக்கங்களை முறியடிப்பதைவிடுத்துப் புராணப் பொழிவுகள் என்ற பெயரால் மடமையை வளர்க்கிறார்களே என அவர் கொண்ட ஆத்திரத்தின் வெளிப்பாடே அவருடைய 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' என்னும் கதைப்பாடல்!

குப்பன் ஒரு வேட இளைஞன். வஞ்சி என்பாளைக் காதலிக்கிறான். சஞ்சீவி பர்வதத்தின் உச்சியில் உள்ள இரண்டு பச்சிலைகளைப் பற்றிக் குப்பன் அவளிடம் சொல்லியிருந்தான். ஒன்றைத் தின்றால் இவ்வுலக மக்கள் பேசுவது நன்றாகக் கேட்கும். மற்றொன்றை வாயிற் போட்டால், இருந்த இடத்தில் இருந்தவாறே உலகில் எங்கு நடப்பதையும் கண்ணெதிரில் காணலாம். 'அம் மூலிகையைப் பறித்துத் தந்தால்தான் உயிர்

1. அ.ச. ஞானசம்பந்தம், இன்றைய இலக்கியம், பக். 97-98

வாழ்வேன் என்றாள்' வஞ்சி. மலைமேல் ஏறுவதால் உள்ள இன்னல்களை எடுத்துரைத்தான் குப்பன். வஞ்சியோ, தானே தனியாய்ச் செல்வதாகவும், மூலிகையைத் தேட முடியாவிட்டால் மலையின் மேலிருந்து கீழே விழுந்து இறந்துவிடப் போவதாகவும் உறுதியாகச் சொன்னாள். குப்பன் வஞ்சியை அழைத்துச் சென்று மூலிகைகளைப் பறித்துத் தந்தான். முதலில் பேச்சைக் கேட்டறியும் மூலிகையைத் தின்றார்கள். பிரெஞ்சுக்காரர், அமெரிக்கர், இங்கிலாந்து நாட்டினர் பேசிய பேச்சுகளையெல்லாம் கேட்டனர். பின்னர், குப்பன் தன் தாய்நாட்டார் பச்சைப் பசுந்தமிழில் பேசுவதைக் கேட்டுக்கொண்டே வஞ்சியை முத்தமிடப் போகையில் 'ஐயையோ' என்ற அலறுமொழி காதில் விழுந்தது. சத்தம் வரும் வழியே காதைச் செலுத்தினார்கள்.

ஓர்நொடியில் சஞ்சீவி பர்வதத்தை ஓடிப்போய்
வேரொடு பேர்த்துவர வேண்டுமே ஐயாவே!

என்னும் பேச்சைக்கேட்டார்கள். சஞ்சீவி பர்வதத்தை வேரோடு பறித்தெடுக்கப் போகிறார்களா? அந்த மலை மீது தானே நாமிருக்கிறோம் எனக் குப்பன் நடுங்கினான். வஞ்சி நகைத்து "மணாளரே! மலையைப் பெயர்க்கும் மனிதரும் இல்லை; மலையும் அசையாது; மனம் பதறாதீர்" என்று சொல்லி முடிக்கும் முன்பு

நன்றாக உங்களுக்கு ராமன் அருளுண்டு
வானம் வரைக்கும் வளரும் உடலுண்டே
ஏனிங்கு நின்றீர் எடுத்துவரு வீர்மலையை

என்ற சத்தம் காதில் விழுந்தது. குப்பன் "மங்கையே மலையைப் பெயர்க்க வருபவன் இராமன் அருள்

உள்ளவனாம்; வானம் மட்டும் அங்கம் வளர்வானாம்! மலையைப் பெயர்த்துவர அவனுக்கு ஆணையிடுகின்றார்களே! நம்மையும் சேர்த்துத் தூக்கிப் போய்விடுவானே! உடனே இறங்கிவிடுவோம்" என்று துடித்தான். வஞ்சியோ "இராமன் அருளாவது! சஞ்சீவியைத் தூக்குவதாவது! இதிலே கொஞ்சமாவது உண்மையிருந்தால் நாம் இன்று கொத்தடிமைகளாகவா இருப்போம்?" என்றாள். அதற்குள் அஞ்சுகின்ற குப்பனை மேலும் அஞ்சச் செய்தது ஒரு பெருஞ்சத்தம்.

அம்மலையை ஓர் நொடியில் தூக்கிவந்து ஐயாவே
உம்எதிரில் வைக்கின்றேன் ஊஹுஹு ஊஹுஹு

குப்பன் குடலறுந்து போனதுபோல் பதைத்தான். "பஞ்சு மூட்டையைப்போல் பாவி அவன் தூக்கிச் செல்வானே! நாம் எப்படிப் பிழைப்பது? வஞ்சி சுகித்திருக்க எண்ணினையே! சாக்காடு வந்ததடி! நான் சொன்னதையெல்லாம் கேட்காமல் வம்பு செய்தாயே! முத்தம் கொடுத்து நேரத்தைக் கெடுத்தாயே! செத்து மடியும் போது முத்தம் ஒரு கேடா? தூக்கிப் போய்த் தூளாக்கிக் கடலிலே போட்டுவிடுவானே! நாம் எவ்வாறு பிழைப்போம்? சிந்தித்து ஒரு வழி சொல்லேன்" என்று வேண்டினான். வஞ்சி சொன்னாள்:"உலகம் தோன்றியது முதல் இன்றுவரை மலையைத் தூக்கும் மனிதன் இருந்ததில்லை. இனியொருவன் பிறக்கப் போவதுமில்லை. ஒரு மனிதன் வானத்துக்கும் பூமிக்கும் எப்படி நீண்டு வளரமுடியும்? இதெல்லாம் பொய். காதல் உண்மை. நான் உம்மை மருவுவதும் மெய்யே. இந்த உலகத்தை ஒரு சிற்றெறும்பு கையால் எடுத்தது என்று சொன்னால் அதற்காக ஐயோ என்றஞ்சுவதா? பயத்திலிருந்து மீளுங்கள். முத்தத்தைப்பெற்று இன்பமடையுங்

கள்'' என்றுரைத்தாள்; குப்பனோ குன்று பெயர்ந்த தென்று மனமழிந்தான்.

> இந்நேரம் போயிருப்பார் இந்நேரம் பேர்த்தெடுப்பார்!
> இந்நேரம் மேகத்தில் ஏறிப் பறந்திடுவார்!
> உஸ்என்று கேட்குதுபார் ஓர்சத்தம் வானத்தில்;
> விஸ்வரூபம் கொண்டு மேலேறிப் பாய்கின்றார்;

என்னும் மொழி கேட்டான் குப்பன். 'ஐயோ' என்று மட்டும்தான் அவனால் சொல்ல முடிந்தது. உண்மை தெரிந்தும் அதனை உரைக்காதிருக்கின்ற வஞ்சி, சிரித்த வண்ணம் 'மனத்தைத் தளரவிடாதீர்கள்! இனிமேல் சொல்வதையும் காது கொடுத்துக் கேளுங்கள்' என்றாள். அப்போது 'இப்படியாக அனுமார் எழும்பிப் போய் சாம்பவந்தன் சொன்னதுபோல சஞ்சீவி பர்வதத்தைக் கொஞ்ச நேரத்தில் இலங்கையிலே கொண்டு வந்து வைத்தார். உடனே மலை மருந்தின் சக்தியால் இராம, இலக்ஷ்மணர் பிழைத்தெழுந்தனர்' என்ற பேச்சுக் கேட்டது. அடடே! மலை அசைந்ததே தெரிய வில்லையே! தூக்கி வந்து இலங்கையில் வைத்து விட்டானாமே! இலங்கையில் நாம் எப்படிப் பிழைப்பது? என்று நடுங்கினான் குப்பன். நடுங்குகின்ற அவனிடம் வஞ்சி 'இன்னும் கொஞ்சம் பொறுங்கள்' என்றாள். 'செத்தவர் உயிர்பெற்றார். அனுமார் சஞ்சீவி மலையை எடுத்துப் பழையபடி இருந்த இடத்தில் வைத்துத் திரும்பினார். இராம, இலக்ஷ்மணர்க்குத் தெண்டமும் போட்டு நின்றார்' எனப் பேச்சுத் தொடர்ந்தது. குப்பன் சிரித்தபடி சொன்னான் : ''வஞ்சி அப்போதே நான் நினைத்தேன் ஆபத்து எதுவும் இராதென்று. நான் நினைத்தபடியே நடந்துவிட்டது பார்த்தாயா!'' என்றவனிடம் ''கொஞ்சம் பொறுங்கள்! இதுவரை இங்கு

என்ன நடந்தது சொல்லுங்கள்" என்றாள்! குப்பன் சொன்னான் : "நாம் இங்கே வந்தோமா? அந் நேரம் அனுமார் மலையைத் தூக்கி இலங்கைக்குப் பறந்தார். இராம, இலக்ஷ்மணர் உயிர் பிழைத்ததுமே பழையபடி மலையைத் தூக்கி வந்து முன்பு இருந்த இடத்திலேயே வைத்துவிட்டார்.

கண்ணே! மலையைக் கடுகளவும் ஆடாமல்
கண்ணாடிப் பாத்திரத்தைக் கல்தரையில்
வைப்பதுபோல்

தந்திரமாய் வைத்துவிட்டாரே! அதுதான் பெரிய ஆச்சரியம்" என்றான். அதற்குள் ஒரு சத்தம்:

இம்மட்டும் இன்று கதையை நிறுத்துகின்றேன்;
செம்மையாய் நாளைக்குச் செப்புகின்றேன்
மற்றவற்றைச்
சத்திய ராமாயணத்திற் சத்தான இப்பகுதி
உத்தியாய்க் கேட்டோர் உரைத்தோர்எல் லாருமே
இங்குள்ள போகங்கள் எல்லாம் அனுபவிப்பர்;
அங்குள்ள வைகுந்தம் அட்டியின்றிச் சேர்வார்கள்
ஜானகீ காந்தஸ் மரனே! ஜயஜய ராம்!,

குப்பன் "பெண்ணே! இது என்ன என்றான். முன்பு கேட்ட ஐயையோ தொடங்கி இதுவரைக்கும்

ராமாயணம் சொல்லி நாளைக் கழிக்கின்ற
ஏமாந்தார் காசுக்கு எசமானன் என்றுரைக்கும்
பாகவதன் சொன்னான் பலபேரைக் கூட்டியே!
ஆகியதும் இந்த அரிய உழைப்புக்குப்
பத்தோ பதினைந்தோ பாகவதன் பெற்றிடுவான்,

பாகவதர் சொல்லிக்கொண்டிருந்த இராமாயணக் கதைதான் காதில் விழுந்துகொண்டிருந்தது; பேச்சைக் கேட்கும் மூலிகையைத் தின்றிருந்ததால் அது அவர்கட்குக் கேட்டது என்பதை விளக்கினாள். காட்சியை நேரில் காணுகின்ற பிறிதொரு மூலிகையை உண்டனர். காட்சி தெரிந்தது. தெரு ஒன்றில்,

மாளிகையின் உள்ளே மனிதர் கூட்டத்தையும்
ஆளிவாய்ப் பாகவதன் அங்கு நடுவிலே
உட்கார்ந் திருப்பதையும் ஊர்மக்கள் சொல்வதையும்
பட்டைநாமக் காரப் பாகவதன் ரூபாயைத்
தட்டிப்பார்க் கின்றதையும் சந்தோஷம் கொள்வதையும்

கண்டார்கள். கண்டு கடகடவென்றே சிரித்தார்கள். அப்பொழுது வஞ்சி சொல்வாள்:

வானளவும் அங்கங்கள் வானரங்கள் ராமர்கள்
ஆனது செய்யும் அனுமார்கள் சாம்பவந்தர்
ஒன்றல்ல; ஆயிரம் நூல்கள் உரைக்கட்டும்.
விஸ்வருபப் பெருமை, மேலேறும் வன்மைகள்,
உஸ்என்ற சத்தங்கள், அஸ்என்ற சத்தங்கள்,
எவ்வளவோ நூலில் எழுதிக் கிடக்கட்டும்;
செவ்வைக் கிருபை செழுங்கருணை அஞ்சலிக்கை
முத்தி முழுச்சுவர்க்கம் முழுதும் உரைக்கட்டும்;
இத்தனையும் சேரட்டும், என்னபயன் உண்டாம்?
உள்ள பகுத்தறிவுக் கொவ்வாத ஏடுகளால்
எள்ளை அசைக்க இயலாது. மானிடர்கள்
ஆக்குவதை ஆகாது அழிக்குமோ? போக்குவதைத்
தேக்குமோ? சித்தம் சலியாத் திறன்வேண்டும்.
மக்கள் உழைப்பில் மலையாத நம்பிக்கை
எக்களிக்க வேண்டும் இதயத்தில்! ஈதன்றி
நல்லறிவை நாளும் உயர்த்தி உயர்த்தியே
புல்லறிவைப் போக்கிப் புதுநிலை தேடல்வேண்டும்.

மக்கள் உழைக்காமுன் மேலிருந்து வந்திடுமோ?
எக்கா ரணத்தாலும் இன்மையிலே உண்மையுண்டோ?

இலக்கியங்கள் மக்களின் முயற்சியைத் தூண்டுவனவாய், உழைப்பின் மேன்மையை உணர்த்துவனவாய், பகுத்தறிவைப் பரப்புவனவாய், நல்லறிவை நாளும் உயர்த்துவனவாய் இருக்கவேண்டும் எனும் பாவேந்தரின் கொள்கை வஞ்சியின் இப் பேச்சில் வெளிப்படக் காண்கிறோம். இராமாயணம் பற்றிப் பேசுபவர்கள் இந் நோக்கில் பேசாமல்—அதாவது இராமாயணத்தை வாழ்க்கை வழிகாட்டியாகக் கொள்ளாமல்—மேலுலக வழிகாட்டியாகக் கொண்டு பூசைப் பொருளாக மாற்றிவிட்ட தன்மையையே பாவேந்தர் இங்குச் சாடியிருக்கிறார்.

நாடு எத்துணை வளங்களுடையதாயினும் மூடப் பழக்க வழக்கங்கள் முறியடிக்கப்படாத வரை அவற்றால் பயனேதுமில்லை. நமது இலக்கியங்கள் நல்லறிவை ஊட்டுவனவாயிருக்க வேண்டும். நம்பத்தகாதவற்றை நம்பவைத்து நலிவுண்டாக்குபவையாய் இருக்கக்கூடாது என்ற நோக்கில் 'இராமாயணக் கதையைப் பாகவதர்கள் பேசும் போக்கை' எள்ளல் முறையில் எடுத்துக்காட்டப் பாரதிதாசன் 'சஞ்சிவி பர்வதத்தின் சாரலைப்' படைத்திருக்கிறார்.

நல்ல இமயம், நலங்கொழிக்கும் கங்கைநதி,
வெல்லத் தமிழ்நாட்டின் மேன்மைப் பொதியமலை,
செந்நெல் வயல்கள், செழுங்கரும்புத் தோட்டங்கள்,
தின்னக் கனிகள், தெவிட்டாப் பயன்மரங்கள்,
இன்பம் செறிந்திருக்கும் இப்பெரிய தேசத்தில்
முப்பத்து முக்கோடி மாந்தர்கள் மொய்த்தென்ன?
செப்பும் இயற்கை வளங்கள் செறிந்தென்ன?

மூடப் பழக்கம் முடிவற்ற கண்ணுறக்கம்
ஓடுவ தென்றோ? உயர்வதென்றோ?

என்ற ஏக்கமே பாவேந்தரைச் சஞ்சீவி பர்வதத்தின் சாரலைப் பாட வைக்கிறது.[1]

இராமாயணத்தை, புண்ணிய கதை எனச் சொல்லித் திசைதிருப்பும் போக்கையே பாரதிதாசன் கண்டிக்கிறார். கதை மாந்தர்களின் தன்மைகள் அவர்களின் நிறை குறைகள் இவைபற்றியெல்லாம் சிந்திக்காமல், ஆராயாமல், கதையைக் கேட்டவர்க்கு மோட்சம் உண்டு எனச்சொல்லி ஏமாற்றும் நிலையை அவர் ஏற்க மறுக்கிறார். இராமனை அவதாரமாக ஆக்கிப் பூசிப்பதற்கு இராமாயணப் 'பிரசங்கங்கள்' பயன்படுகின்றனவே தவிர, மக்களின் அன்றாடப் பிரச்சினைகளையும் அவற்றைக் களைய இராமாயணம் எவ்வகையில் துணை நிற்கிறது என்பதுபற்றியும் 'உபந்நியாசகர்கள்' எவ்விதக் கவலையும் கொள்வதில்லை என்பதே அவர் கவலையாக அமைகிறது. கதை மாந்தர்களைத் தெய்வங்களாகவே காணுகின்ற மாயையைத் தோற்றுவித்துவிட்டனர். இராமாயணத்தில் வரும் கதைகளில் ஒன்றைப் படித்தாலும், பிறர் சொல்லக் கேட்டாலும் சொர்க்கம் கிடைக்கும் என்னும் தெய்விகத்தன்மை தோற்றுவிக்கப்பட்டது. அதனால் மக்கள் அதனைத் தங்கள் பாவத்தைப் போக்கும் 'நிவாரணி'யாகக் கருதும் நிலை நேரிட்டு விட்டது. பற்பல பாவகாரியங்களைச் செய்தவர்கள் 'இராமாயணப் பிரசங்கத்துக்கு' ஏற்பாடு செய்து விட்டால் தங்கள் பாவமெல்லாம் தொலைந்து நன்மை பெறுவர் என்ற பொய்மை பூசப்பட்டது.

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 1—16

வென்றிசேர் இலங்கை யானை
வென்றமால் வீரம் ஓத
நின்ற ராமா யணத்தில்
நிகழ்ந்திடு கதைகள் தம்மில்
ஒன்றினைப் படித்தோர் தாமும்
உரைத்திடக் கேட்டோர் தாமும்
நன்றிது என்றோர் தாமும்
நரகம்அது எய்தி டாரே[1]

இராமாயணம் படிப்பது, இராமாயண 'கதா காலட்சேபங்கள்' நடத்துவது என்பன நரகம் செல்லா திருக்க வழிகள் என்று நம்ப வைத்துவிட்டனர். இப்படிப் பட்ட தெய்விகத்தன்மையை ஏற்றியதால்தான் எதிர்ப்பு உண்டாயிற்று.

இராமாயணம் எரிக்கப்பட வேண்டும் என்று சொன்னவர்கள் இன்று கம்பர் விழாக்களில் கலந்து கொள்கிறார்கள். இது இராமாயணத்துக்குக் கிடைத்த வெற்றி என்ற பேச்சு எழுகிறது. இது இராமாயணத் துக்குக் கிடைத்த வெற்றியன்று; கம்பன் கவிதைக்குக் கிடைத்த வெற்றி என்றுதான் கூறவேண்டும். இராமனைத் தெய்வமாகப் பார்க்கக் கூடாது. இராமாயணத்தைப் பூசைக்குரிய நூலாக ஆக்கக்கூடாது. ஓர் இலக்கியம் என்ற முறையில்—அதன் கதை மாந்தர் களின் செயல்களைத் திறனாய்வு செய்கின்ற முறையில்— நல்லது கெட்டது என்று பிரித்துக்காட்டும் வகையில் ஆய்வுகள் நடத்தப்பட வேண்டும்; தெய்வக்கதை என இராமாயணத்தை ஒப்புக்கொள்வதில்லையே தவிர இலக்கியம் என்ற முறையில் அதன் நிறை குறைகளை

1. கம்பராமாயணம், பாலகாண்டம் (வை. மு. கோ. பதிப்பு), பக். 12

ஆய்வதை—அதுபற்றிப் பேசுவதை இராமாயணத்தை எரிக்க வேண்டுமென்றோர் குறைத்துப் பேசியதில்லை.

"கம்பரைப் பொறுத்தவரையில் அவருடைய பாத்திரங்களுக்கு அதிக மதிப்பளிக்கின்ற நிலையும், அந்தக் காவியத்தை உருவாக்கிய கம்பரை மறந்துவிடுகின்ற சூழ்நிலையும் நாட்டிலே ஏற்பட்டது. அதை மாற்றுகின்ற புதிய முயற்சியை முப்பத்தைந்து ஆண்டுகட்கு முன் திரு.சா.கணேசன் காரைக்குடியில் ஆரம்பித்ததும் காவியம் இயற்றியவன்தான் நாயகன், அவன்தான் புகழ்தலுக்கும், போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியவன் என்கின்ற முறையில் கம்பர் விழாக் கண்டார்கள். ஆகவே கம்பருக்குத்தான் சிறப்பு என்று எடுத்துக்காட்டி, நிலைநாட்டி வருகின்ற இந்த விழாவைப் பாராட்டி வாழ்த்துகிறேன்"[1] என இராமாயணக் கதைக்கு எதிரானோர்கூடக் கம்பன் கவி நயத்தை மறுத்ததில்லை என்பதை டாக்டர் கலைஞரவர்கள் 1974 காரைக்குடி கம்பன் விழாப் பேச்சின்போது எடுத்துச் சொல்லியுள்ளார்கள்.

"காப்பியத்தின் பாத்திரங்களைப் பாத்திரங்களாகவே பார்க்கவேண்டும். நமக்கு ஏற்பட்டுவிடுகின்ற துன்பமே காவியம் எழுதுகின்ற புலவர்களை விட்டுவிட்டு அவர்கள் படைத்திருக்கின்ற பாத்திரங்களுக்கு அதிக மரியாதைகளைக் கொடுக்கத் தொடங்குவதுதான். மனோன்மணீயம் நூலைப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை எழுதினார். அவரை நாம் நினைவுகொண்டிருக்கிறோம். அதிலே வருகின்ற சிவகன், புருடோத்தமன்,

---

1. கலைஞர் மு. கருணாநிதி, மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்று, பக். 44—45

மனோன்மணி இவர்களையெல்லாம் வழிபடு தெய்வங்களாக ஆக்கிக் கொள்ளவில்லை"[1] என்பதை எடுத்துக் காட்டுவதன் வழி கலைஞரவர்கள் இராமாயணமும், மனோன்மணீயம்போல ஓர் இலக்கியமாகப் படிக்கப் படுவதை யாரும் எதிர்க்கப் போவதில்லை; கதை மாந்தர்களைத் தெய்வங்களாகவும், கதை நிகழ்ச்சிகளைத் தெய்வச் செயல்களாகவும் சொல்லுகின்றபோதுதான் சிக்கல் எழுகின்றது என்பதனை விளக்குகிறார்கள்.

அரக்கர் என்றார் அசுரர் என்றார்; நம்மை எல்லாம்
அழகற்றோர் ஒழுக்கமிலார் எனமொ ழிந்தார்;
சுரக்கவில்லை மலையருவி உணர்ச்சி வெள்ளம்
தோன்றவில்லை நெஞ்சத்தில் நமை,மறந்தோம்;
குரங்கினங்கள் என்றுரைத்தார் நம்மை எல்லாம்
குறுங்கரடிக் கூட்டமென்றார் கேட்டி ருந்தோம்;
அரிக்கின்ற செல் அழிக்க மறந்த தோள்கள்
அன்றுபோல் இன்றுமுண்டு குன்றத் தைப்போல்!
வாலியின்பால் வஞ்சகத்தைச் செய்த ராமன்
வாலிக்கு மோட்சத்தை அருள்செய் தானாம்
கோலைத்தன் வசமாக்கச் சதையை விற்ற
கொடியவன்பேர் ஆழ்வானாம்......[2]

என்றெல்லாம் கனன்று பேசும் திராவிட இயக்கக் கொள்கை மறவரான பாரதிதாசன், இராமாயணத்தை மறுத்தபோதிலும். கம்பனுடைய கவித்திறத்தை மதிக்கத் தவறியதில்லை. கம்பராமாயணம் பன்னீராயிரம் பாடல்கள் கொண்டது. ஒரு சமயம் டி.கே. சி. அவர்கள் இராமாயணப் பாடல்கள் பல ஆயிரங்களை,

1. கலைஞர் மு. கருணாநிதி, மேலது, பக். 44
2. பாரதிதாசன், பன்மணித்திரள், பக். 127

அவை கம்பன் பாடியவை அல்ல என்று நீக்கிச் சில ஆயிரங்கள் மட்டுமே கம்பன் பாடியவை எனப் பதிப்பித்தார். இராமாயணத்தை எரிக்க வேண்டு மெனக் குரல்கொடுத்த பாரதிதாசன், இதைக் கண்டு மகிழ்ச்சியல்லவா கொண்டிருக்கவேண்டும்! இல்லையே! மாறாகக் கொதித்தல்லவா எழுகிறார்!

இராமா யணம்என்ற நலிவு தரும்கதை
பூமியில் இருப்பதை இப்பொழுதே அறிகின்றேன்[1]

என்றெல்லாம் பாடிய அவர், கம்பராமாயணப் பாடல் களை ஆய்ந்து வெளியிட்ட ரசிகமணி டி. கே. சி. அவர் கள் பல பாடல்களை இடைச் செருகல்கள் என்று கூறிப் புதிய பதிப்புப் போட்டதற்காகச் சீறுகிறார்.

கம்பன், வான்மீகத்தை மாற்றித் நம் தமிழ்ப் பண்பாட்டுக்கேற்ப எழுதினான் என்பதைக்கூடப் பாவேந்தர் ஒத்துக்கொண்டவரல்லர்.

"பொன்னும் மாமணி யும்புனை சாந்தமும்
கன்னி மாரொடு காசினி ஈட்டமும்
இன்ன யாவையும் ஈந்தனள் அந்தணர்க்கு
அன்ன மும்தளிர் ஆடையும் நல்கினாள்.

தன் மகன் இராமனுக்கு முடிசூட்டப் போவதைக் கேட்டுக் கோயிலுக்குப் போய்ப் பார்ப்பனர்க்குத் தானமாகப் பொன்னையும், பெருமை பெற்ற மணிகளை யும், பூசுதற்குரிய சந்தனத்தையும், இளம் பெண்களை யும், பல ஊர்களையும், இவை போன்றவைகளையும், சோற்றையும், ஆடைகளையும் அளிக்கிறாள்.

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 15

இராமாயணத்தைத் தமிழாக்கிய கம்பன் தமிழ்ப் பண்பாடு கெடாமல் தக்கவாறு மாற்றியமைத்துள்ளான் என்கின்றனர்.

எங்கே மாற்றியமைத்தான்? பார்ப்பானுக்கு இளம் பெண்களையும் கொடுப்பதென்பது தமிழர் பண்பாடா? அந்த இழிசெயல் ஆரியர்க்கு ஏற்கும். அதை அப்படியே தமிழர்முன் வைக்கும் கம்பனின் செயல் எத்தகையது? எண்ணுக''[1] என்று சொன்னவர் பாரதிதாசன். அப்படிப் பட்டவர் கம்பனின் பாடல்களைக் குறைத்துப் பதிப்பித்தவரைப் பாராட்டியல்லவா இருக்கவேண்டும்? ஒரு கவிஞனின் பாடல்களை—அவை, அவன் பாடியவை அல்ல என்று சொல்வதைக் கவிஞர் பாரதிதாசனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அதைக் கவிஞனுக்குச் செய்த இழிவாகக் கருதுகிறார். கம்பனில் கருத்து வேறு பாடு இருக்கலாம். எனினும் அவன் கவிதையில் கை வைப்பதைக் கண்டு அவர் மனம் கொதிக்கிறது.

பாரதிதாசன் இறைமறுப்புக் கொள்கையுடையவர். ஆனால் முதலில் ''எங்கெங்குக் காணினும் சக்தியடா, ஏழு கடல் அவள் வண்ணமடா'' என்று பாடியவர்தான். பாரதிதாசன் பின்னாளில் கொள்கை மாற்றம் பெற்றார் என்பதற்காக அவர் இந்தப் பாட்டையே பாடவில்லை என்று சொல்லிவிட முடியுமா? தான் ஏற்காததையெல் லாம் கம்பர் பாடவில்லை என்று டி. கே. சி. சொல்லி விடுவதா?

புலவர் குழந்தை 'இராவண காவியம்' எழுதினார். சொல்லின் செல்வர் இரா. பி. சேதுப்பிள்ளையும்

1. பாரதிதாசன் குயில், 28-10-1958, பக். 13

பேராசிரியர் ஐயம்பெருமாள் கோனார் அவர்களும் கம்பனில் தோய்ந்தவர்கள். புலவர் குழந்தையின் கருத்தை ஏற்க முடியாதவர்கள். ஆயினும் புலவர் குழந்தை அவர்களின் கவித் திறனைக் கண்டு மகிழ்ந்த இரா. பி. சே. அவர்கள்,

"தேனினும் இனிய செந்தமிழ்க் குழந்தை!
நான் கம்பராமாயணக் கவிச்சுவையில்
கட்டுண்டு கிடந்தனன். தங்கள்
இராவண காவியம்
அக்கட்டை அவிழ்த்து விட்டது
கருத்து வேறுபாடு வேறு"[1]

என்று பாராட்டி எழுதினார். அதேபோல ஐயம் பெருமாள் கோனார் அவர்கள்,

"இன்னொரு கம்பனும் வருவானோ?
இப்படியும் கவி தருவானோ?
கம்பனே வந்தான்;
அப்படிக் கவிதையும் தந்தான்;
ஆனால்
கருத்துதான் மாறுபட்டது"[2]

எனப் போற்றியுரைத்தார். கருத்து மாறுபாடிருப்பினும் கவிச் சுவையை மதித்து எழுதிய சிறப்புரைகள் இவை. இதேபோல் பாவேந்தர் அவர்களும் கம்பனில் கருத்து மாறுபாடு கொண்டிருந்தாலும் அவன் கவிப் புலமையை மதித்தவர். எனவே டி. கே. சி. செய்ததை

---

1. புலவர் குழந்தை, இராவண காவியம் (இரண்டாம் பதிப்பு) அணிந்துரை, பக். 32
2. மேலது

'இலக்கியக் கொலை' என்றார். கோவையில் பேசிய ஒரு கூட்டத்தில் டி. கே. சி. யைத் தமிழர்கள் கண்டிக்க வேண்டாமா என முழங்கினார். "கம்பராமாயணம் ஏறத்தாழ 12,000 செய்யுட்கள் உடையது. கம்பர் செய்தது மொத்தம் 3,000 தானாம். டி. கே. சி. பார்த்தாராம்! பார்த்ததால்தானே அப்படியே அச்சிட்டும் வெளியிட்டார். அவர் வெளியிட்டுள்ளதில் அவர் மேற்கொண்டுள்ள எழுத்திலக்கணம் எப்படி? சொல்லிலக்கணம் எப்படி? வாள்த் தடங்கண், கல்த்தரை— என்றல்லவா எழுதுகிறார். கம்பராமாயணத்தை மட்டுமின்றி, தமிழிலக்கணத்தையும் கொளுத்திய டி.கே.சி. யின் நிலை எப்படி? டி. கே. சி.யை ஏன் தண்டிக்கவில்லை! தமிழன் முன்னேற்றத்தில் உள்ளவர்கள் செயலைப் பாருங்கள்"[1] என டி. கே. சி.யின் பதிப்பைக் கண்டித்துக் குரல் கொடுத்தார். இராமாயணத்தைக் கொளுத்தவேண்டுமென்று சொன்னவர்கள் திராவிட இயக்கத்தார், உண்மையில் அவர்கள் கொளுத்தவில்லை. கொளுத்தியவர் டி. கே. சி.யே என்னும் உணர்ச்சி பாரதிதாசன் பேச்சில் ஒலிக்கிறது. கம்பன் பாடல்களைக் குறைத்த டி. கே. சி.யை நையாண்டி செய்கிறார். பாரதிதாசன் எழுதியுள்ள நல்லமுத்து கதையில் ஓர் உரையாடல் :

இரிசன் : என்ன படிக்கிறாய் இந்நேரத்தில்?

நல்லமுத்து : காலே அரைக்கால் கம்ப ராமாயண

இரிசன் : காலே அரைக்கால் கம்ப ராமாயணம்!
நூலும் உண்டோ நுவலுக தம்பி!

நல்லமுத்து : சிதம்பர நாதர் திருவரு ளாலே
அரையே அரைக்கால் அழிந்தது போக

மேலும் மொழிமாற்று வேலைப்பாட்டுடன்
காலே அரைக்கால் கம்ப ராமாயணம்
அச்சிடப் பட்டதை அறியீரோ நீர்?[1]

இது மட்டுமா? ஒருவர் எழுதிய பாட்டை அவர் எழுதியது இல்லை என்று சொல்வது எவ்வளவு வேதனை தரக்கூடிய செயல்! மேவாத செயல் இதனைச் செய்த டி. கே. சி யை 'இவ்வாறு செய்ய நீர் யார்?' என்று கேட்கக்கூடிய ஆள் புலவர் கூட்டத்திலே இல்லையா? என வேகமாகக் கேட்கிறார்.

கம்பனார் பதினோரா
 யிரம்பாட்டில் முக்காலும்
 கழித்துப் போட்டு
நம்பினால் நம்புங்கள்
 இவைதான் கம்பன்செய்யுள்
 எனஅச் சிட்டு
வெம்புமா றளிக்கையிலும்
 மேவாத செயல்இதனைச்
 செய்ய இந்தக்
கொம்பன்யார் எனக்கேட்க
 ஆளில்லை யாபுலவர்
 கூட்டந் தன்னில்?[2]

என வேகத்தோடும் ஆத்திரத்தோடும் கேட்கிறார் பாவேந்தர். கருத்து மாறுபாடு இருந்தாலும், கவிதைக்கு மதிப்பளிக்கின்ற பெரிய கவியுள்ளத்தை இங்கே காண முடிகிறது.

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 3, பக். 128
2. பாரதிதாசன், தமிழியக்கம், பக். 23

## 4. ஒன்றாய் நடந்த திறம்

தமிழில் காப்பியங்கள் பல இருந்தாலும் அவை களில் மிகப் பெரும்பாலானவை மொழிபெயர்ப்புக் காப்பியங்களே! சீவக சிந்தாமணி, கம்ப ராமாயணம், கந்த புராணம், வில்லி பாரதம், நள வெண்பா என்றிவையெல்லாம் மொழிபெயர்ப்புக் காப்பியங்கள். சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரிய புராணம் என்னும் மூன்று காப்பியங்கள் மட்டுமே தமிழ் நில மாந்தர்களைத் தலைமைக் கதை மாந்தர்களாகக் கொண்டு எழுந்துள்ள தனிப்பெருஞ் சிறப்புக்குரியனவாக உள்ளன. பாரதி 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற் பெயர்த்தல்வேண்டும்' என்றான். தமிழ்ப் புலவர்களோ பண்டுதொட்டே வடமொழி நூல்கள் பலவற்றைத் தமிழில் தந்திருக்கின்றனர். தொல்காப்பியர் வழிநூலின் வகைகளைக் குறிப்பிடும்போது,

> தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
> அதற்பட யாத்தலோடு அனைமர பினவே[1]

என்பர். இதற்கு இளம்பூரணர் 'முதனூலாசிரியன் விரித்துச் செய்ததனைத் தொகுத்துச் செய்தலும், தொகுத்துச் செய்ததனை விரித்துச் செய்தலும், அவ் இருவகையினையும் தொகை விரியாகச் சொல்லுதலும், வடமொழிப் பனுவலை மொழிபெயர்த்துத் தமிழ் மொழியாற் செய்தலும் என்றவாறு' எனப் பொருள் கூறியுள்ளார். நன்னூல் பாயிரம் தொகுத்தல், விரித்தல்,

---

1. தொல்காப்பியம், பொருள், மரபியல் 99

தொகைவிரி, மொழிபெயர்ப்பு என நூல் யாப்பு நான்கு வகையினது எனக் குறிப்பிடும்.[1] நன்னூலைப்போல 'மொழிபெயர்ப்பு' என்று வெறுமனே கூறாமல், தொல்காப்பியர் 'மொழிபெயர்த்து அதற்பட யாத்தல்' என்றார். "அதற்பட என்பது ஆழ்ந்த பொருள் உடையது. மொழிபெயர்ப்பு என்பது தோன்றாதபடி வேண்டிய எல்லாம் செய்க என்பது கருத்து. கம்பர் காப்பியம் கதையால் தமுவலாயினும், மொழியானும் நடையாலும் பண்பாலும் உணர்ச்சியாலும் அன்பாலும் தமிழ் மண்ணிற் பிறந்த நிலக் காப்பியமாகும். மொழி பெயர்ப்புக் காப்பியத்தை மொழி பிறப்புக் காப்பிய மாகவே உருவாக்கி அருளிய திறம் கம்பரிடத்துப்போல் பிறரிடம் காணமுடியுமா? கதைக்கு வடமொழி மூலமாக இருந்தாலும் கதைமேல் எழுந்த காப்பியக் கட்டிடத்துக்குத் தமிழே மூலமாகும்" என்பார் டாக்டர் வ. சுப. மாணிக்கம்.[2] கம்பர் மூலக் காப்பியமான வான்மீகத்தை உணர்ந்து உணர்ந்து, தெளிந்து தெளிந்து அறிந்த பின்னர் அதனைத் தனதேயாக்கித் தன் மொழி யில், தன் நாட்டுப் பண்புக்கேற்ப நெகிழ்ந்து நெகிழ்ந்து யாத்துள்ளார். மூலக் கதையினைத் தன் போக்கிற்கேற்ப நிகழ்ச்சிகளைக் கூட்டியும் குறைத்தும் நீக்கியும் பாடி யுள்ளார். கம்பன் வான்மீகத்தில் மாற்றம் பல செய்து அழகு கூட்டியுள்ள திறத்தை நாமக்கல் கவிஞர்,

வனத்திலுள்ள மலர்வகைகள் எல்லாம் கொய்து
வாசனைவேர் பச்சிலைகள் பலவும் சேர்த்துக்
கனத்தவொரு பூப்பொதியாம் ராமன் காதை
வான்மீகி எனும்தவசி கட்டோ டீந்தான்

---

1. நன்னூல், பாயிரம், சூத். 50
2. டாக்டர் வ. சுப. மாணிக்கம், கம்பர், பக். 57

இனத்தையெலாம் ஆய்ந்தறிந்தான்; இணைத்துக்
கோத்தான்;
இடைகிடந்த மாசுமறு யாவும் நீக்கித்
தனித்தமணம் அறம்திகழும் மாலை யாக்கித்
தரணிக்கே சூட்டிவைத்தான் கம்பன் தானே[1]

எனப் பாராட்டிப் போற்றுகிறார்.

பிரகலாதன் கதை, மாயா சனகன், வீடணன் தாது ஆகியவை கம்பன் புதிதாகப் படைத்துக் கூறியவற்றுள் முக்கியமானவை.

அனுமன் எரியூட்டி அழித்த இலங்கையை, இராவணன் தேவதச்சனைக் கொண்டு புதுப்பித்தான். இலங்கை முன்னிலும் பொலிவு பெற்றது. அமைச்சர்களையும், படைத்தலைவர்களையும், தம்பியரையும் அழைத்துத் தம் வீரம் பழியுண்டது குறித்துக் கவன்றான். படைத்தலைவர்கள் பகைவன் மீது போர் தொடுக்க வேண்டுமென்றனர். கும்பகருணன் "சீதையைக் கவர்ந்தது விதிவினையே; எனினும் இப்போது விட்டிடுதல் பழியாம். பகைவர் வலி கூடுமுன்னர் உடனே போருக்கெழுதல் நலம்" என்றான். இராவணன் அக்கருத்தை ஏற்று "நமர், படையொடும் போருக்கு எழுக" என்றான். இந்திரசித்தன் தந்தையைத் தடுத்து, "யானே சென்று போரிட்டு வருவேன். விடை தருக" என்றான். அப்போது வீடணன் இந்திரசித்தைக் கடிந்து, அண்ணனிடம் "இராமன் பரம்பொருள். நம் தீவினையை அழிக்க மனித உருப்பெற்று வந்துள்ளான். சீதையை விடுதலே நீ பெறக்கூடிய பெரிய வெற்றி" என்றான்.

---

1. நாமக்கல் கவிஞர், நாமக்கல் கவிஞர் பாடல்கள் (லிப்கோ பதிப்பு), பக். 207.

இராவணன் கொதித்துச் சினந்து வீடணனை இகழ்ந்து இராமனைப் பழித்து எள்ளி நகையாடிச் செருக்கோடு பேசினான்.

அப்போது,

பின்னும் வீடணன் 'ஐயநின் தரம்அலாப் பெரியோர்
முன்னை நாள்இவன் முனிந்திடக் கிளையொடும் முடிந்தார்;
இன்னம் உண்டுயான் இயம்புவது; இரணியன் என்பான்
தன்னை உள்ளவா கேட்டி' என்று உரைசெயச் சமைந்தான்.[1]

வீடணன் அண்ணனிடம் "உன்னினும் செருக்கு மிக்கோர் முன்னர்த் திருமாலின் சினத்துக்கு ஆளாகி அழிந்ததை உனக்குச் சொல்வேன்" என்று இரணியன் வதையைச் சொல்வதாகக் கம்பர் இக் கதையை நுழைத்துள்ளார்.

காரணம் கருதியே கவிஞன், முதனூலில் இல்லாததைச் சேர்க்கவும், இருப்பதை நீக்கவும், நிகழ்ச்சிகளைச் சீர்திருத்திச் செம்மையாக்கவும் செய்வான். திருமால் பெருமையையும், 'ஓம் நமோ நாராயணாய' மந்திர வலிமையையும் உணர்த்தவே கம்பன் இக் கதையைத் தன் காப்பியத்தில் சேர்த்துக்கொள்கிறான்.

ஆசிரியன் 'இரணியாய நம' என்று சொல்லுமாறு சொல்லச் சிறுவன் பிரகலாதனோ 'ஓம் நமோ நாராயணாய' என்றான். "பாவி! என்னையும் உன்னையும் கெடுத்து ஒழிக்கவா இப்பெயரைச் சொன்னாய்?" என ஆசிரியர் பதறினார். பிரகலாதன் ஆசிரியர்க்கு

---

1. கம்பராமாயணம், இராவணன் மந்திரப்படலம், பாடல் 118.

மறுமொழி கூறும் வகையில் அரியின் பெருமையைக் கம்பர் அகங்குளிர எடுத்துரைக்கிறார். பிரகலாதன் ஆசிரியரிடம்,

> ஆரைச் சொல்லுவது, அந்தணர் அருமறை அறிந்தோர்
> ஓரச் சொல்லுவது எப்பொருள், உபநிடதங்கள்
> தீரச் சொல்பொருள், தேவரும் முனிவரும் செப்பும்
> பேரைச்சொல்லு வது அல்லது, பிறிதுஒன்றும் உளதோ?[1]

அந்தணரும், வேதமுணர்ந்தோரும் உணர்ந்து சொல்லும் பொருள் எதுவோ, உபநிடதங்கள் முற்ற முடிவாகச் சொல்லும் பொருள் எதுவோ, தேவரும் முனிவரும் சொல்லும் பெயர் எதுவோ அதைத்தானே சொன்னேன். அப் பெயர் அல்லாது வேறு எப்பெயர் சொல்லுவது? அப்பெயரை விட உயர்ந்த பெயரும் உண்டோ?'' எனக் கேட்கிறான்.

இதுமட்டுமன்று, உனக்கும் நலம் தரும் பெயர் இதை விட வேறு ஒன்றும் இல்லை என்றும் உரைக்கிறான்.

இரணியனுக்குப் பிரகலாதன்,

> காமம் யாவையும் தருவதும், அப் பதம் கடந்தால்
> சேம வீடுஉறச் செய்வதும், செந்தழல் முகந்த
> ஓம வேள்வியின் உறுபதம் உய்ப்பதும், ஒருவன்
> நாமம்; அன்னது கேள்: நமோ நாராய ணாய'[2]

என எட்டெழுத்தின் பெருமையை விரிவாக எடுத்துரைக்கிறான். இதுகேட்டுச் சீறிச் சினந்த இரணியனுக்கு மேலும் அறிவுரை கூறும் வகையில் நாராயணப்

---

1. கம்பராமாயணம், இரணியன் வதைப் படலம், பாடல் 29
2. மேலது, பாடல் 42

பெருமையைக் கம்பன் பிரகலாதன் வாயிலாக இருபத்தொரு பாடல்களில் விவரிக்கிறான்.

சமயவாதிகள் பலவாறாக எடுத்துரைத்தாலும் பரம்பொருள் ஒன்றே என்பதையும் கம்பர் இப்பகுதியில் நயமாகக் குறிப்பிடுகின்றார். ஒரே மாலையில் பல மலர்கள் இருக்கின்றனவாயினும் மாலை ஒன்றே! அலைகள் பலவாக எழுந்து காணப்படினும் அவையெல்லாம் கடலில் அடங்குவன. அதுபோல சமயவாதிகள் கூறும் பொருள்கள் பலவாயினும் அவை ஒரு பரம்பொருளிலே அடங்கும்.

காலையின் நறுமலர் ஒன்றக் கட்டிய
மாலையின் மலர்புரை சமய வாதியர்
சூலையின் திருக்குஅலால் சொல்லு வோர்க்கெலாம்
வேலையும் திரையும்போல் வேறு பாடிலான்.[1]

ஆயிரமாயிரம் அலைகள் தோன்றினும் அவையும் கடலும் ஒன்றாதல்போலே சமயவாதியர் ஆயிரமாயிரம் கருத்துகளைக் கூறினும் அவை பரம்பொருள் ஒன்றுளே அடங்குவன.

திருமால் பக்தியை வெளிப்படுத்த இரணியன் வதைப்படலத்தைக் கம்பர் பயன்படுத்திக் கொண்டுளார்.

கும்பகருணன் இராம இலக்குவனருடனும் வானரப் படையுடனும் போர் விளைத்துக் கொண்டிருந்தான். இந்நிலையில் சீதையைக் கைப்பற்ற வழியொன்று

1. கம்பராமாயணம், இரணியன் வதைப்படலம், பாடல் 77

கூறுமாறு மகோதரனை இராவணன் கேட்டான். மகோதரன் அவனிடம் ஓர் உபாயம் கூற, அதைக்கேட்டு மகிழ்ந்தவனாய் இராவணன் சீதையைக் காண அசோக வனம் சென்றான். அங்குச் சீதையைத் தன்னை ஏற்குமாறு வேண்ட, அவள் அவனைத் துரும்பாகக் கருதி இகழ்ந்தாள். இராவணன் அவளிடம் "இராமன் படையொடு இலங்கை வந்திட்டான் எனச் செருக்கடையாதே! அயோத்தி வீரரையெல்லாம் கொன்றுவர ஆட்களை அனுப்பியுள்ளேன்" என அச்சுறுத்தினான். அச்சமயம் மகோதரன் மாயா சனகனைப் பற்றிக் கொணர்ந்தான். தன் தந்தையை இராவணன் பற்றி வந்துவிட்டதாகக் கருதிய சீதை வருந்தினாள். இராவணன் "என் இச்சைக்கு இணங்குவாயாயின் என் அரசச் செல்வத்தை இதோ உள்ள உன் தந்தைக்கு ஈவேன்" என்று கூற, அதுகேட்ட சீதை சினந்து பேசினாள். மகோதரன், 'தந்தை சொன்னால் கேட்பாள்' என்று சொல்ல மாயா சனகனும் சீதையிடம் இராவணனுக்கு இணங்குமாறு கூறினான். ஐயுற்ற சீதை அவனை வெறுத்துப் பழித்துப் பேசினாள். சனகனை இராவணன் கொல்லச் சென்றான். மகோதரன் விலக்கினான். அதுவேளை கும்பகருணனை இராமன் கொன்றதனால் வானவர்களும் வானரங்களும் செய்த பேரொலி அங்குக் கேட்டது. அதேவேளை தூதுவர்கள் இராவணனிடம் கும்பகருணன் இறப்பைக் கூறினர். இது கேட்ட இராவணன் அலறி அப்பாற் செல்ல, மகோதரன் சனகனைச் சிறையிலடைக்குமாறு கூறினான். அவர்கள் அகன்றதன் பின்னர்த் திரிசடை அரக்கர்களின் மாயையை எடுத்துச் சொல்லி, மாயா சனகன் பற்றிக் கூறித் தெளிவித்தாள். மாயா சனகன் வான்மீகத்தில் இல்லை. கம்பர் படைத்துக்கொண்ட புதுச்செய்தி.

மாயா சனகன் சீதையிடம் "பாவி! உன்னைப் பெற்றதால் அல்லவா இப்பாடு படுகிறேன். நான் உயிரிழப்பது உனக்குச் சரியா? அமரர்க்கு அரசனான இராவணன் தேவியாய் நீ இருப்பதால் என்ன தீமை? நீ இணங்கினால் நானும் என் குலத்தோடு பெருஞ் செல்வத்தைத் துய்க்கலாம்; நீயும் விடுதலை பெறலாம்" என்று கூறக்கேட்டுச் சீதை துடித்தாள். "நீயும் நின் சுற்றத்தாரும் இன்னும் இப் பூவுலகம் முழுதுள்ளோரும் என் கண் எதிரே மாய்வதானாலும் நான் முறை தவறி வாழ்வெனோ? இராமனுக்கு அடிமை செய்யும் நான் கேவலம் நாய் போன்ற இராவணனைக் கண்ணெடுத்தும் பார்ப்பெனோ? விலங்குகட்கெல்லாம் அரசனான ஆண் சிங்கத்துடனே வாழ்ந்திருந்த பெண் சிங்கம் சாக்கடையிற் கிடக்கும் அழுக்குப் பொருளைத் தின்னக் கூடிய நரியுடனே வாழ்வதென்பது எங்கேனும் உண்டோ?

அரியொடும் வாழ்ந்த பேடை
அங்கணத்து அழுக்குத் தின்னும்
நரியொடும் வாழ்வது உண்டோ?
நாயினும் கடைப்பட் டோனே![1]

சீதையை அச்சுறுத்த மாயா சனகனைக் கொல்ல இராவணன் வாளை உருவினான். சீதையோ "என்னை யும் கொல்ல மாட்டாய்! இப்போது இவனையும் கொல்ல மாட்டாய்! என்மீது பெருங் காதல் கொண்டுள்ளமை யால் உன்னையும் கொன்றுகொள்ள மாட்டாய்! இவ்வுலகத்தாரையும் கொல்ல மாட்டாய். என் தலைவன் இராமனுடைய அம்பால் உன் சுற்றத்தோடு நீ

1. கம்பராமாவணம், மாயா சனகப் படலம், பாடல் 68

உயிரிழக்கப் போகிறாய்! அப்போது நான் துன்பம் நீங்கி அழியாத புகழ் அடைவேன்!

என்னையும் கொல்லாய்; இன்னே
இவனையும் கொல்லாய்; இன்னும்
உன்னையும் கொல்லாய்; மற்றுஇவ்
உலகையும் கொல்லாய்; யானோ
இன்உயிர் நீங்கி என்றும்
கெடாப்புகழ் எய்து கின்றேன்!
பின்னையும் எம்கோன் அம்பின்
கிளையொடும் பிழையாய் என்றாள்![1]

தந்தையே இறக்கக் கண்டாலும் தன் கற்புநிலை தவறாச் சீதையின் திண்மையையும், இராவணனுடைய எவ்வித அச்சுறுத்தலும் அவள் உறுதியை எள்ளளவும் அசைக்க முடியாது என்பதையும் விளக்க மாயா சனகன் படைப்பு கம்பனுக்குக் கைகொடுக்கிறது.

போர் செய்யவந்த கும்பகருணனை, அவன் யாரென இராமன் வீடணனிடம் வினவி அறிந்தான். கும்பகருணனுடைய தன்மைகளை வீடணன் விளக்க மாகக் கூறினான். வீடணன் சொன்னதைக்கேட்டுக் கொண்டிருந்த சுக்கிரீவன் கும்பகருணனைத் தம்முடன் சேர்த்துக்கொள்வது நலமென்றான். இராமனும் ஒப்பினான். அவனிடம் செல்வது யார் என்றபோது வீடணன் தானே உடன்பட்டுக் கும்பகருணனை அடைந்து வணங்கினான். 'நல்லிடத்தைச் சேர்ந்த நீ இங்கு மீண்டும் வந்தது தவறு' என்றான் கும்பகருணன். வீடணன் கும்பகருணனிடம் அவனும் இராமனை வந்தடையுமாறு பல காரணங்களைக் காட்டி

1. கம்பராமாயணம், மாயா சனகப் படலம், 71

வேண்டினான். "நான் இராவணனுக்காக உயிரை விடுவேன்: நீ இராமனிடம் சேர்க" எனக் கும்பகருணன் வீடணனைத் திருப்பியனுப்பினான். இவ்வீடணன் தூது வான்மீகத்தில் இல்லை.

கும்பகருணனுடைய செய்ந்நன்றி மறவாத் தன்மையை, அண்ணனுக்காக உயிர் கொடுக்கவும் முன் வரும் பாசப் பிணைப்பைப் புலப்படுத்தக் கம்பர் இப் பகுதியை அமைத்துக் கொள்கிறார். அண்ணன் செயல் தவறு என்பதைக் கும்பகருணன் உணர்கிறான்; வீடணன் அண்ணனைத் துறந்து இராமனை அடைந்ததும் சரியென்று கருதுகிறான். ஆனாலும் இக்கட்டான அந்நேரத்தில் தன்னை ஆதரித்து வளர்த்த அண்ணனுக்காக உயிரைக் கொடுக்கலாமே தவிர, ஒதுங்கக் கூடாதெனமுடிவெடுக்கிறான். அறிவு—பாசம் ஆகிய இரண்டனுள் வீடணனிடம் பாசத்தை விட அறிவு மேலோங்கி நிற்கிறது; கும்பகருணனிடமோ அறிவினும் பாசம் மிக்கிருக்கிறது என்பதைப் புலப் படுத்தவே வீடணனை விட்டே கும்பகருணனை இராம னிடம் வந்து சேர அழைக்கச் செய்கிறான் கம்பன். கும்பகருணனோ வீடணனிடம் "ஆக வேண்டியது உரிய காலத்தில் ஆகியே தீரும்; அழிய வேண்டியது எப்படித் தடுத்தாலும் அழிந்தே தீரும். அருகிருந்து பாதுகாத்தாலும் அழிய வேண்டியது அழிந்தே போவது உறுதி. இதனை நன்கு உணர்ந்தவர் உன்னைவிட யார் உள்ளனர்? வருத்தம் கொள்ளாமல் இங்கிருந்து செல்க. எம்மை நினைத்து இரங்க வேண்டாம்" என்றான்.

ஆகுவது ஆகும் காலத்து;
அழிவதும் அழிந்து சிந்திப்
போகுவது; அயலே நின்று
போற்றினும் போதல் திண்ணம்;

சேகுஅறத் தெளிந்தோர் நின்னில்
யார்உளர்? வருத்தம் செய்யாது
ஏகுதி எம்மை நோக்கி
இரங்கலை என்றும் உள்ளாய்![1]

இங்கே கும்பகருணன் இராவணனிடமும், வீடண னிடமும் கொண்டுள்ள பாச உணர்வு நன்கு வெளிப் படுத்தப்படுகிறது. இராவணனிடம் கொண்ட பாசத் தால் அவனுக்காக உயிர்விடத் துணிகிறான்; வீடண னிடம் உள்ள பாசத்தால் அவன் உயிர்வாழ வேண்டு மென நினைத்து அவனை இராமனிடம் செல்லுமாறு அனுப்புகிறான். வீடணன் இராமனிடம் மீட்டும் சென்றடைய வேண்டுமென்பதற்காக அவனுடன் கொண்ட உடன்பிறப்பு உறவைக்கூட முறித்துக் கொள்கிறான். கும்பகருணன் வீடணனை மார்புறத் தழுவி அணைத்தான்; அழுதான்; ஏக்கங்கொண்டு 'உடன்பிறப்பு என்ற தொடர்பு இன்றோடு போயிற்று' எனத் தழ்இய கை தளர்ந்தான். வீடணன், கும்பகருணன் அடிகளில் வீழ்ந்து வணங்கி 'இனி ஆகப்போவது ஒன்று மில்லை' என்ற வருத்தத்துடன் திரும்பினான்.

என்று, அவன் தன்னை மீட்டும்
எடுத்து, மார்பு இறுகப் புல்லி,
நின்று நின்று, இரங்கி ஏங்கி,
நிறைகணால் நெடிது நோக்கி,
'இன்றொடும் தவிர்ந்தது அன்றே
உடன்பிறப்பு' என்று விட்டான்;
வென்றி வெந் திறலி னானும்
அவன் அடித் தலத்து வீழ்ந்தான்.[2]

---

1. கம்பராமாயணம், கும்பகருணன் வதைப்படலம், 166
2. மேலது, 167

வீடணன் வந்தவுடனேயே அண்ணனின் தாளில் விழுந்து வணங்குகின்றான்; அவனும் அவனை எடுத்து மார்போடணைத்துக் கொள்கிறான். (வீடணன்-செறி கழல் சென்னி சேர்த்தான்; கும்பகருணன்-இறைஞ் சினானை முகந்து உயிர் மூழ்கப் புல்லினான்.) திரும்பும் போது கும்பகருணன் தழுவி விடுக்கிறான்; வீடணன் அடிவணங்கித் திரும்புகிறான். (கும்பகருணன்-எடுத்து மார்பு இறுகப் புல்லிவிட்டான். வீடணன்-அடித் தலத்து வீழ்ந்தான்; வணங்கினான்; போனான்.) இரு நிகழ்ச்சிகளிலும் அறிவு வணங்குகிறது; பாசம் தழுவிக் கொள்ளுகிறது!

வான்மீகத்தில் தமிழ்ப் பண்புக்கு ஒவ்வாத பல இடங்களைக் கம்பர் சீர்திருத்தியிருக்கிறார் என்று முன்பு சொன்னோம். சான்றுக்கு ஓர் இடம் :

"இராவணன் மாரீசனை மாய மானாக்கி இராம னையும், இலக்குவனையும் சீதையிடமிருந்து பிரிந்து செல்லும்படிச் செய்தான். கற்பினுக்கரசி, இலக்குவன் இழைத்த சாலையில் தன்னந்தனியாக இருந்தாள். அவளைத் துறவுக்கோலத்தில் ஒளிந்து வந்த இராவணன் சிறையெடுத்துச் சென்றான். வான்மீகி முனிவர் இராவணன் சீதையைத் தொட்டுத் தூக்கிச் சென்றான் என்கிறார்.

'ஜக் ராஹ ராவண: ஸீதாம் (ஆ.49:18)

(இராவணன் சீதையைப் பற்றியிழுத்தான்)

என்பது அவரது வாக்கு. அவன் தூக்கிச் சென்ற முறையைக் கூறும்போது, "சீதையின் கூந்தலில் இடக் கையையும், இரு தொடைகளில் வலக்கையையும் கொடுத்துப் பிடித்துத் தூக்கினான்" (ஆ.49:20) என்று

விளக்கமாகத் தெரிவிக்கிறார். இராவணனை இடை மறித்துச் சடாயு கடும்போர் புரிந்து வீழ்ந்தான். சீதை அந்தக் கழுகரசனை அப்பொழுது இறுகத் தழுவி நினைந்து நினைந்து கதறினாள் (ஆ. 51: 47). அந்தக் கழுகரசன் கடுங்காயமுற்றுக் குற்றுயிரும் குலையுயிரு மாகத் துடிப்பது கண்டு அழுதாள். பெருமரங்களைக் கட்டிக்கொண்டு 'இராம! இராம!' என்று புலம்பினாள். இராவணன், அவளைப்பார்த்து, 'விடு விடு' என்று பல முறை சொல்லிக்கொண்டே பிடித்து இழுத்தான் (ஆ. 52: 1, 7, 8). இராவணன் அவளைத் தூக்கிச்சென்ற போது அவன் மடியில் இருந்தவாறே அவனை இகழ்ந்து பற்பல சொன்னாள். அவள் அவன் மடியில் இருந்தாள் என்பதை, 'வைதேஹி ராவணாங்க கா' (ஆ. 53: 27) (இராவணன் மடியிலிருக்கும் சீதை) என்று குறிக்கிறார் வான்மீகி முனிவர். அவனோ அவள் பேச்சையெல்லாம் பொருட்படுத்தாமல் தூக்கிச் சென்று முதலில் அரண்மனை அந்தப்புரத்தில் சிறை வைத்தான் (ஆ. 54:12, 13). பின்பு அரக்கர் எண்மரை இராமன் இருந்த இடத்திற்கு அவன் நடவடிக்கைகளைக் கண்காணிக்கப் போக்கிச் சீதையைப் பார்க்க அரண்மனைக்குத் திரும்ப வந்தான். அவளைத் தூக்கிக் கொண்டு படிகளில் ஏறி அரண்மனை முழுவதையும் சுற்றிக் காட்டினான் (ஆ. 55: 9). அதன் பின் அவளிடம் தன்னை ஏற்குமாறு வேண்ட அவள் மறுத்துரைத்தாள். அவளுக்கு ஓராண்டுத் தவணை குறித்து அதற்குள் இணங்கவில்லையானால் அவளைக் காலைச் சிற்றுண்டிக் காகச் சமையற்காரர்கள் துண்டம் துண்டமாக வெட்டுவார்கள் என்று அச்சுறுத்தினான். அங்கிருந்த அரக்கிகளைப் பார்த்துச் சீதையை அசோகவனத்தில் கொண்டுபோய்ச் சிறை வைத்து அச்சுறுத்தியும்

அன்புமொழி புகன்றும் அவளைத் தனக்கு இணங்கு மாறு செய்யும்படி ஆணையிட்டான். அவ்வரக்கிகள் அவளைத் தூக்கிச்சென்று அசோகவனத்தில் வைத்தார் கள்".[1]

இது சீதையை இராவணன் தூக்கிச்சென்ற முறையை வான்மீகி கூறுவது. தொட்டுத் தூக்கிச் சென்றான் என்பது தமிழ்ப் பண்பாட்டுக்கு இழுக்கு என்பதால் இந்தக் காட்சியைத் தமிழ்ச்சூழலுக்கேற்ப மாற்றியமைக் கிறான் கம்பன். துறவுக் கோலத்தில் வந்த இராவணன் தன் உண்மை வடிவம் காட்டி, சீதையைத் தன்னைச் சேருமாறு வேண்டுகிறான். கற்பின் கனலி கனன்று எழுந்தாள். 'என் கணவன் கணை தொடுத்து அழிக்கும் முன்னர் உயிர் பிழைக்க ஓடி மறை' எனச் சீறினாள். ஆனால் இராவணனோ 'உன் கணவன் அம்பு என் மார்பில் பட்டால் அது குன்றின் மேல் பட்ட பூ அம்பு போலச் சிதறிப்போகும்! அணங்கினுக்கு அணங்கனாளே! ஆசை நோயால் வருந்தும் எனக்கு உயிர்ப்பிச்சை கொடு' என அடி வணங்கினான். 'சீதை' 'இறைவா! இளையோய்!' என ஏங்கி அழைத்தாள். அப்போது இராவணன் தன் வலிமை மிக்க தோளால் நிலத்தைப் பெயர்த்துப் பன்னசாலையோடு எடுத்துத் தேர்மீது வைத்து விண்வழியே எழுந்து விரைந்தான்' எனக் கம்பர் கூறுவார்.

ஆண்டு, ஆயிடை, தீயவன் ஆயிழையைத்
தீண்டான், அயன் மேல் உரை சிந்தை செயா;
தூண்தான் எனல் ஆம் உயர் தோள் வலியால்
கீண்டான் நிலம், யோசனை கீழொடு மேல்.[2]

---

1. தெ.ஞானசுந்தரம், காப்பிய விருந்து, பக். 17-18
2. கம்பராமாயணம், இராவணன் சூழ்ச்சி: பாடல் 72

கொண்டான் உயர்தேர்மிசை; கோல் வளையாள்
கண்டாள்; தனது ஆர்உயிர் கண்டிலலாள்;
மண்தான் உறும் மின்னின் மயங்கினளால்;
விண்தான் வழியா எழுவான் விரைவான்.[1]

சீதையை இராவணன் அசோக வனத்தில் சிறை வைத்தான். அங்கு அவள் பஞ்சவடியிலிருந்து அகழ்ந் தெடுத்துச் சென்ற பன்னசாலையிலேயே இருந்தாள் என்பதையும் கம்பர் தவறாமல் குறிப்பிடுகிறார். சீதையைக் கண்டு வந்த அனுமன் இராமனிடம் 'ஐய! இலங்கையில் ஒரு புறத்தில் அசோக வனத்தில் இரவு இது, பகல் இது என்றுகூட அறிய முடியாதவளாய் அன்னை, இலக்குவன் இங்கு அமைத்துத் தந்த அதே பன்னசாலையில் இருக்கிறாள். ஒப்புதல் இல்லாது ஒரு பெண்ணைத் தொட்டால் அவன் மாய்வான் என்ற சாபம் இருத்தலால், விண்வழியே பன்னசாலையோடு எடுத்துச் சென்ற இராவணன் அவளைத் தொடவும் முடியாது அஞ்சிக் கிடக்கிறான்.

வேலையுள் இலங்கை என்னும்
  விரிநகர், ஒருசார், விண்தோய்,
காலையும் மாலை தானும்
  இல்லது ஓர் கனக கற்பச்
சோலைஅங் கதனில் உம்பி
  புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள் ஐய!
  தவம் செய்த தவம்ஆம் தையல்![2]

---

1. கம்பராமாயணம், மேலது, பாடல் 73
2. கம்பராமாயணம், திருவடி தொழுத பாடல் 31

மண்ணொடும் கொண்டு போனான்
வான்உயர் கற்பி னாள்தன்
புண்ணிய மேனி தீண்டா
அஞ்சுவான், உலகம் பூத்த
கண்அகல் கமலத்து அண்ணல்
'கருத்திலாள் தொடுதல் கண்ணின்
எண்அருங் கூறாய் மாய்தி'
என்றதோர் மொழிஉண் டென்பார்[1]

இராவணன் சீதையைத் தொட்டதுமில்லை—தொடவும் முடியாது என்பது கம்பராமாயணக் காட்சி.

கம்பர் வான்மீகியைத் தழுவி இராமாயணக் காப்பியம் எழுதியுள்ளதுபோலப் பாவேந்தர் பாரதி தாசன் 'புரட்சிக்கவி' என்னும் கதைப் பாடலை வடமொழி பில்கணீயத்தைத் தழுவி எழுதியுள்ளார். கம்பர் இராமாயணக் கதையை வடநாட்டுக் கதையாகவே எழுதியுள்ளார். பாரதிதாசனோ பில்கணீயத்தைத் தமிழ்நாட்டுக் கதையாகவே ஆக்கி விட்டார் எனலாம். புரட்சிக்கவி எனும் தலைப்பின் கீழ் 'பில்ஹணீயம் என்ற வடமொழி நூலைத் தழுவியது' எனப் பாரதிதாசன் குறித்திருப்ப திலிருந்துதான் அதனைத் தழுவல் பாடல் என்பதை அறிய முடிகிறது. பில்ஹணர் காசுமீரத்தைச் சேர்ந்த புகழ்பெற்ற வடமொழிக் கவிஞர். கி. பி. 11 அல்லது 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். விப்ரலம்ப சிங்காரம் என்னும் பிரிவுச் சுவையைப் பாடுவதில் வல்லவர். இச் சுவையமைய 'சௌரபஞ்சாஷிகா' என்னும் நூலொன்றை இயற்றியுள்ளார். ஐம்பது பாடல்களைக் கொண்டது இச் சிறுநூல்.[2]

---

1. கம்பராமாயணம், திருவடி தொழுத., பாடல் 32
2. சோம. இளவரசு, காப்பியத்திறன், பக். 7-8,

இந்நூலின் தோற்றம் பற்றி ஒரு கதை உண்டு. அரசகுமாரி ஒருத்திக்குப் பில்கணர் கல்வி கற்பிக்க ஏற்பாடுசெய்யப்பட்டார். அரசகுமாரி மிகவும் அழகாயிருப்பவள். குருவுக்கும் மாணவிக்கும் காதல் ஏற்படக் கூடாதெனத் திரையொன்றை நடுவே இட்டு மறைத்தனர். அது மட்டுமின்றி ஒருவரைப்பற்றி ஒருவரிடம் விகாரமாயிருப்பவர் என்றும் சொல்லி வைத்திருந்தனர். ஆனாலும் ஒருவரையொருவர் அறிந்து காதல் கொண்டனர். அரசன் கவிஞனைக் கழுவிலேற்றத் தண்டனையிட்டான். கவிஞர் தம் கடைசி நேரத்தில் தம் மனக்கண் முன் நிற்கும் காதலி பற்றியும், தமக்கும் அவளுக்குமுள்ள உறவையும், நடந்திருந்த சில நிகழ்ச்சிகளையும் 50 செய்யுள்களில் பாடினார். 'சௌரபஞ்சாசிகை' - கள்ளக்காதல் ஐம்பது என்ற இச் செய்யுட்களைக் கேட்டு மனமுருகிய அரசன் கவிஞரை விடுவித்தானெனக் கதை கூறுகிறது.[1] இக் கதையைக் கூறும் நூல் பில்ஹண காப்பியம். இக் காப்பியத்தில் மன்னன் மனைவி அரசனிடம் சென்று அந்தணராகிய பில்கணரைக் கொல்லக்கூடாது என எடுத்துச் சொல்லி அரசன் மனத்தினை மாற்றினாள் என்ற முடிவு காணப்படுகிறது. இக்கதையைத் தழுவியே பாரதிதாசன் 'புரட்சிக்கவி' எனும் கதைப் பாடலை எழுதியுள்ளார்.

பாரதிதாசனின் 'புரட்சிக்கவி' எனும் சிறு நூலைப் புதுச்சேரி எஸ். துரைராஜன் என்பார் 1937 ல் வெளியிட்டார். இந்நூலுக்குப் பாவேந்தர் எழுதியுள்ள

---

1. வே. இராகவன், கலைக்களஞ்சியம், தொகுதி 7, பக். 364

முன்னுரையில் ''பில்ஹணீயம் என்ற நூல் சமஸ்கிருதம் முதலிய பல பாஷைகளில் காணப்படுகிறது. தமிழிலும் அதைத் தழுவித் தற்கால இந்தியாவுக்கு ஏற்றமுறையில் எழுதினேன்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

பாரதிதாசனின் 'புரட்சிக் கவி'யின் கதை வருமாறு: அரசன் மகள் அமுதவல்லி; ஆசைக்கொரு பெண்; தமிழிலக்கியங்கள் இலக்கணங்கள் ஆய்ந்தவள்; கவிதை புனையக் கற்க வேண்டுமென்று விரும்பினாள். அரசன் அறிந்தான்; அமைச்சரை அழைத்து ஏற்ற ஆசான் எங்குளன் என்றான். அமைச்சர் அரசனிடம் ''உதாரன் என்னும் புலவன் இருக்கிறான்; அவன் சிறந்த புலவன்; ஆனால் அவன் இள வயதும் அழகும் வாய்ந்தவன்; அவனிடம் அமுதவல்லியைக் கற்க விட்டால் குறை வந்து சேர்ந்தாலும் சேரும்; ஆயினும் ஓர் உபாயம் சொல்வேன்; இருவர்க்கும் இடையே திரையிடுவோம்; அமுதவல்லியிடம் உதாரன் குருடன், ஆகவே அரச குடும்பத்தினர் பார்க்கக் கூடாதென்றும், உதாரனிடம் அமுதவல்லி பெருநோய் கண்டவள் என்றும் சொல்லி எச்சரித்தால் போதும்'' என்றான்.

மன்னன் அமைச்சனின் கருத்துப்படியே உதாரனை அழைத்துவரச் செய்தான். கன்னி மாடத்துக்குப் பக்கத்தில் பூஞ்சோலை நடுவில் பொன்மேடையில் உதாரன், அமுதவல்லிக்கு யாப்பிலக்கணம் கற்றுக் கொடுத்தான்; அணியிலக்கணமும் எடுத்துரைத்தான். ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ளவில்லை. ஒருநாள் முழுநிலா தோன்றியது. உதாரன் அதனைக் கண்டான்.

---

1. பாரதிதாசன், புரட்சிக் கவி (முதற் பதிப்பு 1937), ஆசிரியர் முன்னுரை

தமிழிலக்கணங்கள் அமைவுற ஆய்ந்தவளாகவும், அயல் மொழி பயின்றவளாகவும், ஆர்ந்த ஒழுக்க நூல், நீதி நூல் அறிந்தவளாகவும் இருக்கிறாள். உதாரன் பேசும் போது தமிழ்க்கவியாகவே பேசுகின்றான்.

தமிழறிந்த தால்வேந்தன் எனை அழைத்தான்
தமிழ்க்கவி யென்றெனைஅவளும் காத லித்தாள்
அமுதென்று சொல்லுமிந்தத் தமிழ்என் ஆவி
அழிவதற்குக் காரணமாய் இருந்த தென்று
சமுதாயம் நினைத்திடுமோ? ஐயகோ! என்
தாய்மொழிக்குப் பழிவந்தால் சகிப்ப துண்டோ?
உமைஒன்று வேண்டுகின்றேன்; மாசில் லாத
உயர்தமிழை உயிர்என்று போன்று மின்கள்[1]

என்பது அவன் பேச்சு.

அலங்காரங்கள், காவியங்கள், நாடகங்கள், சந்த—காம சாஸ்திரங்கள் ஆகிய பல்துறையை பில்ஹணன் யாமினிக்குக் கற்றுத் தந்ததாகவும், அதனால் பில்ஹணனைவிட யாமினி பல்வகையிலும் பாண்டித்தியம் பெற்று விளங்கியதாகவும் பில்ஹணீயம் கூறுகிறது.[2] ஆனால் புரட்சிக் கவியில் கவிஞன் செய்யுள் இலக்கணம் கற்றுத் தரவே அமர்த்தப்படுகிறான்.

என்மகள் அகத்தில் எழுந்த கவிதையைப்
புறத்தில் பிறர்க்குப் புலப்படுத் துதற்குச்
செய்யுள் இலக்கணம் தெரிதல் வேண்டுமாம்!
ஏற்றஓர் ஆசான் எங்குளான்?[3]

---

1. பாரதிதாசன், புரட்சிக்கவி, பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 33-34
2. ச. சு. இளங்கோ, பாரதிதாசன் படைப்புக் கலை, பக். 10
3. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 17

என்று அரசன் கேட்க, அமைச்சர் உதாரன் பற்றிச் சொல்வதாகப் பாவேந்தரின் புரட்சிக் கவி அமைந்துள்ளது.

இன்றைய நாட்டு நிலைக்கேற்ப இதனைப் பாடுகின்றேன் எனப் பாரதிதாசன் கூறியுள்ளதால் தன் கொள்கைகட்கு மாறான இடங்களைப் பாடாது நீக்கியுமுள்ளார். நிமித்திகர்கள் குறித்த நல்ல நாளில், யாமினிக்குக் கல்வி கற்பித்தல் தொடங்கும்போது மன்னன் பிராமணர்களுக்கு உணவும், பொன்னும் தானமாக வழங்குகிறான் என்ற செய்தி மூலத்தில் உள்ளது. பாரதிதாசன் இதைக் கூறவில்லை.

கதையில் அரசன், அரசிளங்குமரி, கவிஞன் ஆகியோர் முக்கியக் கதை மாந்தர்களாக இருப்பதால் பாரதிதாசன் இக் கதை மாந்தரைக் கொண்டு சாதி ஒழிப்பு, தமிழ் வளர்ச்சி ஆகிய கருத்துகளுக்குக் குரல் கொடுக்க நினைக்கிறார். அவ்வாறே செய்கிறார்.

அமுதவல்லி, உதாரனிடம் தன் காதலை உணர்த்தினாள். அதற்கு அவன்,

நால்வருணங்கள் விதித்தார் நாட்டார்கள்;
அன்னவற்றில்
மேல்வருணம் கோல்கொண்டு மேதினியை ஆள்வருணம்
நீயன்றோ பெண்ணே! நினைப்பை அகற்றிவிடு!
நாயென்றே எண்ணிஎனை நத்தாமல் நின்றுவிடு![1]

என்கிறான். மேலும்,

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 24

காதல் நெருப்பால் கடலுன்மேல் தாவிடுவேன்
சாதிஎனும் சங்கிலிஎன் தாளைப் பிணித்ததடீ[1]

என்று வருண வேறுபாட்டின் கொடுமையைக் கூறுகிறான். இளவரசியோ,

சாதிஉயர் வென்றும் தனத்தால் உயர்வென்றும்
போதாக் குறைக்குப் பொதுத்தொழிலா ளர்சமுகம்
மெத்த இழிவென்றும் மிகுபெரும்பா லோரை எல்லாம்
கத்தி முனைகாட்டிக் காலமெல்லாம் ஏய்த்துவரும்
பாவி களைத்திருத்தப் பாவலனே நம்மிருவர்
ஆவி களையேனும் அர்ப்பணம்செய் வோம்...[2]

என முழங்குகிறாள்.

உதாரனும் அமுதவல்லியும் திரையை அகற்றி ஒருவரையொருவர் காணுகின்றனர். இத்துணைக் காலம் காணாதிருக்கச் செய்த சூழ்ச்சியே உதாரன் குருடன் என்றதும், இளவரசி தொழுநோயுடையவள் என்று கூறியதும் என்பதை உணர்ந்தனர். சூழ்ச்சி நிலைப்பதில்லை. உண்மை வென்றே தீரும் எனக் கவிஞன் பேசுமிடத்தைத் தமிழுணர்வை எழுப்ப ஒரு வாய்ப்பாகப் பாவேந்தர் பயன்படுத்திக் கொள்கிறார்.

காரிருளால் சூரியன்தான் மறைவ துண்டோ?
கறைச்சேற்றால் தாமரையின் வாசம் போமோ?
பேரெதிர்ப்பால் உண்மைதான் இன்மை யாமோ?
பிறர்சூழ்ச்சி செந்தமிழை அழிப்ப துண்டோ?

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1 பக். 24
2. " பக். 25

நேர்இருத்தித் தீர்ப்புரைத்துச் சிறையிற் போட்டால்
நிறைதொழிலா ளர்களுணர்வு மறைந்து போமோ?
சீரழகே! தீந்தமிழே! உனைஎன் கண்ணைத்
திரையிட்டு மறைத்தார்கள்!...[1]

என்று கவிஞன் பேசுகிறான்.

பில்ஹணீயத்தில் வரும் கவிஞன் கொலைக்களத்தில் குழுமியிருந்தவர்களை நோக்கி, யாமினி மேல் தான் கொண்ட காதலையும் அவள் அழகையும் பலவாறு விரித்துப் பேசுகிறான். புரட்சிக் கவியில் உதாரன் கொலைக்களத்தில் நிகழ்த்தும் பேச்சு ஒப்புயர்வற்ற ஓர் அற்புதப் படைப்பு. தமிழுணர்வு, தொழிலாளர் எழுச்சி, குடியரசுக் கோட்பாடு ஆகியவற்றைக் கூற அப்பேச்சைப் பாவேந்தர் இடமாக்கிக் கொள்கிறார். பாவேந்தருடைய இந்தப் பாடலடிகள் முழங்காத தமிழ் மேடை இல்லையெனலாம்.

கவிஞனின் பேச்சினூடே முடியாட்சி கூடாது; குடியாட்சியே உகந்தது என்ற கருத்தையும் பாரதிதாசன் நுழைத்துவிடுகிறார்.

சிரம்அறுத்தல் வேந்தனுக்குப் பொழுது போக்கும்
சிறியகதை! நமக்கெல்லாம் உயிரின் வாதை
அரசன்மகள் தன்னாளில் குடிகட் கெல்லாம்
ஆளுரிமை பொதுவாக்க நினைத்தி ருந்தாள்[2]

என உதாரன் பேசுகிறான். ஆளுரிமை பொதுவாக வேண்டும் என்னும் தன் கருத்தை உதாரனின் பேச்சில் புகுத்தி நமக்கு உணர்வூட்டுகிறார் பாரதிதாசன். அது மட்டுமா?

---

1. பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, பக். 23
2. மேலது, பக். 84

வாழியஎன் நன்னாடு பொன்னா டாக!
வாழியநற் பெருமக்கள் உரிமை வாய்ந்தே!
வீழியபோய் மண்ணிடையே விண்வீழ் கொள்ளி
விழ்வதுபோல் தனித்தாளும் கொடிய ஆட்சி![1]

என உதாரன் முழக்கமிடுகின்றான். அதன் விளைவு "செல்வமெலாம்—உரிமையெலாம் நாட்டாருக்கே" என மக்கள் சட்டம் செய்தனர்.

குடியாட்சியைப் பற்றிய எண்ணமே முளைக்காத காலத்தில் நடந்த கதையில், முடியாட்சியை அகற்றிக் குடியாட்சியை ஏற்படுத்திக் காட்டுகிறார் பாரதிதாசன். கதையில் கவிஞனுடைய பேச்சு ஆட்சி மாற்றத்திற்கான புரட்சியைச் செய்வித்ததால் கதைக்குப் 'புரட்சிக் கவி' என்று பெயர் சூட்டினார் பாரதிதாசன்.

புரட்சிக் கருத்தைப் பாடியவர் என்பதால் பாரதிதாசனை நாம் புரட்சிக் கவிஞர் என்றழைக் கிறோம். என்றாலும், 'புரட்சிக் கவி' எனும் இக் கதையைப் படைத்ததன் காரணமே புரட்சிக் கவிஞர் என்ற பெயரை அவருக்கு ஏற்படுத்தித் தந்திருக்கிறது எனலாம்.

'புரட்சிக் கவி' எனக் கதைக்குப் பெயரமைத்த தற்குப் பாவேந்தரே விளக்கம் கூறுகிறார். "கவிஞன் தன் சொல்லாற்றலால்—சொந்தச் செல்வாக்கால்—குடி களைத் தன்வசப்படுத்திக் கொண்டு, சாவிலிருந்து மீளு கிறான். இதுதான் அவன் செய்த புரட்சி. 'புரட்சிக் கவி' என்றது அந்தக் கதாநாயகனாகிய கவிஞனை" எனப் புரட்சிக்கவி முதற் பதிப்புக்கு வழங்கிய முன்னுரையில்

1. மேலது, பக். 34

பாரதிதாசன் கூறியுள்ளார். அந்தக் கவிஞனைப் புரட்சிக் கவி என்றார் பாரதிதாசன். புரட்சிக் கவியைப் பாடிய பாரதிதாசனை நாம் 'புரட்சிக் கவிஞர்' என்கிறோம்! அவர் ஒரு கவிஞனுக்கு இட்ட பெயரை நாம் அவருக்கிட்டுப் பெருமை கொள்கிறோம்!

தழுவல் நூலில் தக்க மாற்றங்களை மூலத்தின் உயர்வு கருதி முதலில் செய்தவன் கம்பன். பாரதிதாசனோ மூல நூல் ஒன்று உண்டு என்றுணர முடியாதபடி முதனூல் என்று சொல்லும்படியாகப் 'புரட்சிக் கவியை'ப் படைத்துள்ளார். கம்பனைப் போலவே பாரதிதாசனும் மூலக்கதையில் உள்ளவற்றில் சிலவற்றை விடுத்தும், சிலவற்றை மாற்றியும், சிலவற்றைப் புதிதாகச் சேர்த்தும் சுவை கூட்டியுள்ளார்.

வழிநூல் படைப்பார் மூலநூல் நிகழ்ச்சியைத் தங்கள் கருத்து நிலைக்கேற்ப மாற்றியமைப்பதுண்டு. அகலிகை கௌதம முனிவரின் மனைவி. இந்திரன் அவளைக் கூடிக் கற்பழித்தான். கௌதமர் சாபத்தால் அகலிகை கல்லானாள். இராமன் மிதிலை சென்றபோது அவன் திருவடி பட்டு மீண்டும் பெண்ணானாள் என்பது கதை நிகழ்ச்சி. முதனூலான வான்மீகத்தில் இக்கதை பின்வருமாறு உள்ளது;

ஒரு நாள் கௌதம முனிவன் எங்கோ வெளியே சென்றிருந்த வேளையில் இந்திரன் அம் முனிவர்போல் உருக்கொண்டு, அகலிகையைக் குடிசையில் கண்டு அவளிடம் இன்பந் துய்க்க விரும்புவதாகச் சொன்னான். வந்திருப்பவன் இந்திரன் என்பதை அகலிகை அறிந்தாள். ஆயினும் அமரர்க்கு அரசன் என்பதால் இணங்கினாள். கூடிக் களித்தாள். முனிவர் பார்த்து

விட்டால் இருவர்க்குமே பேரிடர் விளையுமெனச் சொல்லி இந்திரனை அங்கிருந்து விரைவில் வெளியேறுமாறு வேண்டினாள். இந்திரன் வெளியேறும் வேளையில் முனிவன் அங்கு வந்து சேர்ந்தான். காட்சியைக் கண்டான். கடுஞ் சினம் கொண்டான். இந்திரன் நடுநடுங்கி நின்றான். தன் கோலத்தில் வந்து தகாச் செயல் செய்த இந்திரனை "நீ ஆண்மை (விரைப்பை) அற்றவன் ஆகக் கடவாய்" என முனிவர் சபித்தார். பன்னெடுங்காலம் கல்லாய்க் கிடக்கவும் இராமன் அங்கு வரும் காலத்தில் மீட்டும் பெண்ணுரு எய்துமாறும் அகலிகையைச் சபித்தார் என்கிறது வான்மீகம்.[1]

கம்பர் அகலிகையைக் குற்றமற்றவளாக்க விழைகிறார். அதற்கேற்பக் கதையைச் சற்று மாற்றிக் கொள்கிறார். ஒருநாள் இந்திரன் கௌதமரைத் தன் சூழ்ச்சியால் குடிலினின்றும் வெளியேற்றினான். முனிவன் சென்றதும் இந்திரன் அம் முனிவனின் வடிவுடன் குடிலினுட் புகுந்து அகலிகையைக் கூடினான். கணவன் என எண்ணி நுகர்ந்தவள், நுகர்ச்சியினூடே அவன் தன் கணவன் அல்லன் என்பதை உணர்ந்தாள். ஆயினும் 'இது தக்கதன்று' எனக் கருதாளாய் அவ்வின்ப நுகர்ச்சியில் ஆழ்ந்து கிடந்தனள். அதுபோழ்து முனிவன் அங்கே விரைந்து வந்தான்.

புக்கு, அவ ளோடும் காமப்
　　புதுமண மதுவின் தேறல்
ஒக்க, உண்டு இருத்த லோடும்
　　உணர்ந்தனள்; உணர்ந்த பின்னும்,

1. தெ. ஞானசுந்தரம், காப்பிய விருந்து, பக்.24

'தக்கது அன்று' என்ன ஓராள்:
தாழ்ந்தனள் இருப்பத் தாழா
முக்கணான் அனைய ஆற்றல்
முனிவனும் முடுகி வந்தான்.[1]

செய்வது இன்னதெனத் தெரியாது அகலிகை திகைத்து நின்றாள். இந்திரனோ நடுநடுங்கிப் பூனை வடிவம் கொண்டு வெளியே போக முற்பட்டான். முனிவன் இந்திரனைச் சினந்து,

'ஆயிரம் மாதர்க்கு உள்ள அறிகுறி உனக்கு உண்டாக' எனச் சபித்தான். இமைக்கும் முன் அவ்வாறே நிகழ்ந்தது. அகலிகையை நோக்கி 'விலைமகள் அனைய நீயும் கல்இயல் ஆகுக' என்றான். அவளும் கருங்கல்லாய் மருங்கே வீழ்ந்தாள். இது கம்பன் படைப்பு.

இப் படைப்புக்கு மேலும் மாற்றங்கள் தந்து மெருகூட்டியுள்ளனர் இந்நூற்றாண்டுக் கவிஞர்கள்.

முதனூலான வால்மீகி இராமாயணம், அகலிகை வந்தவன் இந்திரனென்று தெரிந்தே உடன்பட்டாள் என்கிறது. இந்திரனை முனிவனென்று நினைந்தே கூடினாள்—கூடியதும் புதியவன் என்று தெரிந்தும் விடுதலறியாளானாள் என்கிறார் கம்பர். தெரிந்தே தவறியதும், தெரிந்த பின்னரும் அதைத் தடுக்காததும் அகலிகையைக் குற்றமுள்ளவளாக்குகின்றன. ஆனால் இக்காலக் கவிஞர்கள் அகலிகையைக் குற்றமற்றவளாக்க —தூயவளாக நிறுவிக் காட்டக் காப்பியங்கள் இயற்றி யுள்ளனர்.

---

1. கம்பராமாயணம், அகலிகை, பாடல் 19

வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அகலிகை வெண்பா பாடியுள்ளார். இந்திரன் அகலிகையை நினைந்து நலிகிறான். அவளை அடைய விடியற்காலம் குடிலிடை, கோழிபோற் கூவ, கௌதமர் குளிக்கச் சென்றார். இந்திரன் கௌதமர் வடிவில் உள் நுழைந்து அகலிகையை வற்புறுத்துகிறான். அகலிகை வெறுத் தொதுக்கி, தன்னைத் தொடுபவன் இந்திரனே யானாலும் தன் கணவன் அழிப்பான் எனப் பொங்குகிறாள். தான் இந்திரனே என்பதைக் கௌதமன் வடிவிலிருந்த இ ந் தி ர ன் வெளிப்படுத்துகிறான். எவ்வளவோ மறுத்தும் இந்திரன் விடுவதாயில்லை. அகலிகை மூர்ச்சையடைந்தாள். மூர்ச்சையடைந்த அவளிடம் இந்திரன் இச்சை தீர்ந்து வெளியேறும்போது முனிவர் கண்டார்; சபித்தார். மூர்ச்சித்திருந்த மனைவியைத் தெளிவித்தார். உயிர் போகவில்லையே எனக் கதறுகிறாள் அவள். அவள் துயரைத் தணிக்க 'நீ கல்லாயிரு' என முனிவன் கூறுகிறான். அகலிகையின் மனத்துயர் அறவே, அவள் கல்லாக்கப்பட்டாள் எனும் அரியதொரு மாற்றத்தை வெ. ப. சுப்பிரமணிய முதலியார் படைத்துக்கொள்கிறார்.

நின்னை அறியாமல் நேர்மாசு நீங்க, அதை
உன்னி உன்னித்துன் புறல்தவிர—துன்னியுள
பொல்லாத வன்பழியும் போயொழிய, நின்மேனி
கல்லாக என்றான் கனிந்து.[1]

வெ. ப. சு. படைத்துள்ள கௌதமன் அகலிகையிடம் சினமுற்றவனாக இல்லை; இரக்கமுற்று ஆறுதல் கூறுபவனாக அமைந்துள்ளான். அகலிகையும் 'இந்திரன்

1. வெ. ப. சுப்பிரமணிய முதலியார், அகலிகை வெண்பா 191

அணைந்தபோது மனத்தைக் கல்லாக்கி உயிர்விடாத என்னைக் கல்லாக்கியது சரியே' என்கிறாள். கல் அகலிகை உருப்பெற்றது கண்ட விசுவாமித்திரன் கூறுவதாக அமைந்துள்ள வெண்பாக்கள் பெரிதும் இன்பம் பயப்பன.

தோளால்முந் நீரிலொரு தோகையுற்றாள்; இன்றுனது
தாளால்ஓர் கல்லிலொரு தையல்வந்தாள்—தோளை
அவளடைதலுற்றாள்; தாள் ஆம்கோ தமனை
இவளடைதல் ஏற்புடைய தே![1]

ஒருசிலையிற் கால்வைத் துரிமையைஉன் அன்பன்
மருவியிடச் செய்தல், மறித்தும்—ஒருசிலையிற்
கைவத் துரிமையாம் கன்னிகையை நீ அடைதல்
செய்தற் கறிகுறியாம் நேர்.[2]

கவிஞர் ச. து. சு. யோகியாரும் 'அகல்யா' எனும் குறுங்காப்பியத்தை ஆரம்பம், திருமணம், கற்புக்கனல், ஆட்சி, மீட்சி, முடிவு என ஆறு பகுதிகளில் எழுதியிருக்கிறார். சிறு வயதில் இந்திரன், அகல்யாவின் அழகில் மயங்கியிருந்தான். அவளும் அவனை விரும்பினாள். உலகைச் சுற்றி வருபவர்க்கு அவளை மணம் முடிப்பதாக அவள் தந்தை கூறினான். இந்திரன் உலகு சுற்றி வருவதற்குள், கௌதமன் பசுவைச் சுற்றி உலகைச் சுற்றியதாகச் சொல்ல அவனுக்கே திருமணம் முடிக்கப் பட்டாள். கிழவன், அக் குமரியை மணந்ததைப் பொறுத்துக்கொள்ள முடியாது,

1. வெ. ப. சுப்பிரமணிய முதலியார், அகலிகை வெண்பா 242
2. மேலது, 243

"தேவாதி தேவர் இந்தத் தீமை தடுக்கலையோ"?
"தீக்கடவுள் சாட்சியெனத் தெய்வமறை செப்புங்கால்
தீக்கடவுள் நாவடங்கித், தேய்ந்தணைந்து
போகலையோ?"[1]

எனப் பொங்கிப் புழுங்குகிறார் ச.து.சு. யோகியார். இந்திரன் ஏமாந்தான். ஆனாலும் அவளைக் கண்டு தன் காதலைக் கூறினான்.

மற்றொருவன் தாரம்நீ, ஆனாலும் வானரம்பைப்
பற்று மலர் மாலை பறித்தணைத்தால் பாவமுண்டோ?[2]

இது இந்திரன் கேள்வி. மற்றொருவனுக்கு மனைவியாகிவிட்டவளைப் பார்த்து இவ்வாறு கேட்க வெட்கமில்லையா எனச் சீறினாள் அகலிகை.

மட்கலயத்து அமுதன்னான் மாமுனிவன்; காமமலப்
பொற்கலயம் போல்வாய்நீ; போதம் பழிப்பாயோ?[3]

என அவள் வெகுண்டுரைத்தாள். சூழ்ச்சியால் அவளைப் பெறுவதென இந்திரன் முடிவு செய்தான். கௌதமன் வடிவில் குடிலில் நுழைந்து அவளை அணைந்தான்.

"தீங்கு தடுப்பாரில்லை தீமை புரிந்துவிட்டான்"
"என்றுமில்லாப் பேராசை என்கணவர் கொண்டாரே
இன்றுகண்டேன் பேரின்பம் யான்' என்று இணங்கி
விட்டாள்"[4]

1. ச.து.சு. யோகியார், தமிழ்க்குமரி—அகல்யா, பக். 44
2. மேலது, பக். 49
3. மேலது, பக். 51
4. மேலது, பக். 55

தான் வஞ்சிக்கப்பட்டதுணர்ந்த மாமுனிவன் திரும்பினான். சபித்தான். மீட்சி வேண்டினாள். கவிஞனுக்கு இங்கே கோபம் கொப்புளிக்கிறது. மீட்சியாம், யாருக்கு இவை வேண்டும்?

அறம்நின்றாள் வீழ்ந்தாள்; அறம்கொன்றார்
வாழ்கின்றார்;
காதலன்தான் கற்பழித்தான்; கணவன்அவள்
பொற்பழித்தான்;
மாதரசை வேசையென மாநிலத்தார் ஏசலுற்றார்.[1]

அகல்யா இராமன் கால்பட்டுப் பெண்ணானாள். கௌதமரிடம் இராமன் "வானரசன் பிழை செய்தான். உடற்குற்றம் உற்றாள்; அது உயிர்க்குற்றம் ஆகாதே; ஏற்றுக்கொள்" என்றான். முனிவனோ "நான் ஏற்றாலும் உலகம் ஏற்காது. பாத்திரத்தின் அழுக்காலே பால் அழுக்காகாதோ! தீயின் தன்மை தெரியாது சிறுமதலை தீண்டினால் தீத்தன்மை வேறாய் விடுமா? இவள் வாலிபத்தில் வானரசனைக் காதலித்தாள். அப் போதைய காதலன்பு இப்போது பிழை செய்யச் செய் துள்ளது" என்றான். இராமன் வெகுண்டு,

அப்போதே வானரசைக் காதலளித்தாளாம்! அறிந்து
மெய்ப்போத முனிவன்நீ வேட்டாயோ, வேண்டதாய்?
மானம் அழிந்திலையோ மணங்கொண்ட போதினிலே.

மற்றொருவனைக் காதலித்தவளை மணந்துகொண்ட நீயும் மாமுனியா? என்றான். அவள் ஏமாந்தது குற்றம்

1. ச.து.சு. யோகியார், தமிழ்க்குமரி - அகல்யா, பக். 56
2. மேலது, பக். 61

என்றான் முனிவன். "அவள் ஏமாந்தது குற்றம் என்றால் கோழிக் குரல் கேட்டு நீ ஏமாந்தாயே அது தாழ்வில்லையா? நீ வஞ்சிக்கப்பட்டாய்; வஞ்சித்தவன் தேவன். பாவம் சற்றுமில்லாதவள் பழிகொண்டாள். யார் குற்றம்? நின் குற்றம். அவள்,

கண்ணால் உனைக் கண்டாள், வானரசைக்
காணவில்லை;
எண்ணத்து உனை ஏற்றாள், வானரசை ஏற்கவில்லை [1]

கணவனுக்கு இச்சையளித்தல் குற்றமா? நீ யார் அவளை ஏற்பதற்கு? அவளல்லவா உன்னை ஏற்க வேண்டும்!

தீயேற்குமோ வேள்விச் சிதைஈரம் புகைதந்தால்?
அவள்உன்னை ஏற்பாளேல், அதுவன்றோ
பெருந்தன்மை
தவளைஒன்று பாம்பேற்கும் தனிச்சிறப்புக்
காண்போமே![3]

"போ! அவள் காலில் விழு" என்றான். பாவை அடிபணியச் சென்றான் முனிவன்.

வீழ்வானை வீழாமுன் மேலெடுத்துத் தான்தாழ்வாள்
தாழ்வாளைத் தாழாமுன் தானெடுப்பான் தழுவுகிறான்.

ஆண் எனும் ஆணவத்தால் எதையும் சரி தவறு உணராது செய்யும் ஆண் குலத்தைப் பெண்மையின்

---

1. ச.து.சு. யோகியார், தமிழ்க்குமரி - அகல்யா, பக். 63
2. மேலது, பக். 63
3. மேலது, பக். 64

காலடியில் விழச்செய்யும் புரட்சியை யோகியார் 'அகல்யா' வாயிலாகச் செய்துள்ளார்.

இவ்வாறான கருத்துரைகட்கு இடமளிக்கும் வகையில் பாவேந்தர் சிலப்பதிகாரத்தைக் 'கண்ணகி புரட்சிக் காப்பியம்' எனவும், மணிமேகலையை 'மணிமேகலை வெண்பா' எனவும் வழிநூல்களாகத் தந்துள்ளார். கம்பன் வழிநூல் எழுதிச் சென்ற அதே நெறியில் பாவேந்தரும் நடைபோட்டிருப்பதை நாம் அறிய முடிகிறது.

## 5. நிழலாய்த் தொடர்ந்த மனம்

### 1. எல்லார்க்கும் எல்லாம்

நாட்டு மக்கள் நலமுற்று வறுமையற்றவர்களாக வாழவேண்டும் என்பது கம்பன் நோக்கம். ஒரு நாடு எப்படியிருக்க வேண்டும் என்னும் அவனுடைய நினைவோட்டத்தைக் கோசல நாட்டை வருணிப்பதி லிருந்து அறிய முடியும். உயர்வு தாழ்வற்ற - வறுமை வாட்டாத - இன்ப வாழ்வு நிலைபெற்ற சமுதாயம் மலர வேண்டும் என்பது கவிஞனின் கனவு. கவிஞன் நாட்டைப் பற்றிப் பாடும்போது நாடு அப்படியிருந்தது என்று கொள்வதைவிட நாடு அப்படியிருக்க வேண்டுமெனக் கவிஞன் கருதினான் என்று கொள்வதே பொருத்த மாகும். மானும் புலியும் சேர்ந்து ஒரு துறையில் நீரருந்துமாறு மன்னன் ஆட்சி செய்தான் என்று பாடினால் அஃது நடந்த உண்மையன்று. கவிஞனின் எதிர்பார்ப்பு.

சீதமதிக் குடைக்கீழ் செம்மை அறங்கிடப்பத்
தாதவிழ் பூந்தாரான் தனைக்காத்தான்—மாதர்
அருகூட்டும் பைங்கிளியும் ஆடற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ உலகு[1]

கிளியும் பருந்தும் ஒரு கூட்டில் வாழும்படியாக நளனுடைய ஆட்சி அமைந்து சிறந்ததாம்;

---

1. நளவெண்பா, 26

பாடுகிறார் புகழேந்தி! கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும் ஒருவரையொருவர் தாக்கிக்கொள்ளாமல் மக்கள் ஒற்றுமையாக—அமைதியாக வாழ வேண்டும் என்பதைத்தான் கவிஞர் இவ்வாறு அழுத்தம் தந்து கூறுகிறார்.

புகாரில் ஐவகை மன்றங்கள் இருந்தன என்கிறார் இளங்கோவடிகள். ஒன்று வெள்ளிடை மன்றம். அங்கு வெளிநாட்டுப் பொருள்கள் மூட்டை மூட்டையாகக் குவிந்து கிடக்கும். பொருளுக்குரியவர்களின் அடையாள எழுத்துகள் பொருளின் மேல் குறிக்கப்பட்டிருக்கும். அம் மன்றத்திற்குக் கதவுகளும் இல்லை; காவலும் இல்லை. ஆயினும் பொருள்கள் திருட்டுப் போவதில்லை. வெள்ளிடை மன்றத்தை நினைத்தாலே கள்வர்கள் நடுங்குவர்.

இலஞ்சி மன்றம் என்பது மற்றொன்று. அதில் ஒரு பொய்கை இருந்தது. கூன், குருடு, செவிடு, ஊமை, தொழுநோயாளர் ஆகியோர் அப் பொய்கையில் மூழ்கி எழுந்தால் நோய் நீங்கப்பெற்று நலம் பெறுவர்.

நெடுங்கல் நின்ற மன்றம் ஒன்று. அதில் நடப்பட்டிருந்த கல் ஒளி வீசும் தன்மை வாய்ந்தது. பிறரால் மருந்து வைக்கப்பட்டுப் பித்தானோர், நஞ்சால் நலிந்தோர், பாம்புக் கடியுண்டோர், பேயறையப்பட்டோர் ஆகியோர் அக்கல்லைச் சுற்றி வந்து தொழுதால் துயர் நீங்கப்பெறுவர்.

அடுத்தது பூதச் சதுக்கம். அங்கொரு பூதம் இருந்தது. அது தவவேடம் பூண்டு தகாதன செய்வோர், அலவற் பெண்டிர், காட்டிக் கொடுக்கும் அமைச்சர்,

பிறன் மனை விரும்புவோர், பொய்ச் சாட்சி கூறுவோர் ஆகியோர் என் கையில் உள்ள கயிற்றில் கட்டுண்பர் எனப் பெருங்குரலெடுத்து நகரின் எல்லையான நான்கு காததூரமும் கேட்குமளவுக்குக் கூவும். தவறு செய்த தால் கயிற்றில் கட்டுண்ட பாவிகளை அப்பூதம் புடைத்துண்ணும்.

பாவை மண்டபம் என்பது ஒன்று. அங்கொரு பாவையிருந்தது. அரசன் செங்கோன்மையில் திரிந்தாலும், அறங்கூறவையத்தில் நீதிநூற் கருத்துக்கு மாறாக ஒரு சார்பு பற்றி நீதி உரைக்கப்பட்டாலும் அப் பாவை நாவால் நவிலாது கண்ணீர் உகுத்துக் கவலையொடு தோன்றும்.[1]

இவ்வாறான மன்றங்கள் உண்மையாகவே புகாரில் இருந்தன என்று நாம் எண்ணத் தேவையில்லை. ஒவ்வொரு மன்றத்தையும் ஒரு கருத்துக் குறியீடாக இளங்கோ படைத்துக் காட்டுகிறார். நாட்டில் களவு கூடாது; கூன், குருடு, ஊமை, செவிடுள்ள மக்கள் இருக்கக் கூடாது; தொழுநோய்த் தோற்றமே கூடாது; நாட்டில் நச்சரவுகள் நடமாடக் கூடாது; போலித் துறவிகள், வேசையர், காட்டிக் கொடுப்போர், பொய்ச் சாட்சி கூறுவோர் போன்றவர்கள் கட்டி வைத்துக் களையப்பட வேண்டியவர்; அரசன் செங்கோன்மை யாகச் சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் கோடாத நீதியாளனாக இருக்க வேண்டும் என்ற நலஞ்சார்ந்த கருத்துகளை, ஐவகை மன்றங்களைக் கூறுவதன் வாயிலாக இளங்கோ வலியுறுத்தியுள்ளார் என்று மட்டுமே நாம் கொள்ளவேண்டும்.

1. சிலப்பதிகாரம், இந்திர விழவூரெடுத்த காதை, 111-138

இவைபோல்தான் கம்பனும் நாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைக் கோசலத்தைக் குறிப்பிடுவதன் வாயிலாக நமக்குச் சுட்டிவிடுகின்றான். கோசலத்தில் கொடை என்பதே இல்லை; காரணம் அங்கு வறுமை என்பதே இல்லாததால். மக்களிடம் வீரம் என்பதே இல்லை—எதிர்த்து நின்று போர் புரியும் பகைவர்கள் இல்லாமையால், பொய் என்ற ஒன்று அங்கு இல்லாத தால் உண்மை என்ற சொல்லுக்கு அங்கே பொருளே யில்லை. எல்லாரும் பல நூல்களைக் கற்றறிந்தவர் களாயிருந்ததால் கோசலத்தில் அறிவின்மை என்பதே இல்லை.

வண்மை இல்லைஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லைபொய்யுரை இ லாமையால்
வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்[1]

இது கம்பராமாயணம் நாட்டுப் படலத்தில் உள்ள பாடல். நாட்டைப் பாடும் இதே முறையில் அயோத்தி நகரத்தையும் பாடுகின்றான்.

கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை
மாதோ![2]

களவு செய்பவர்களே இல்லாத காரணத்தால் அந் நகரத்தில் யாரும் பொருள்களைப் பூட்டி வைத்துக் காப்பதில்லையாம்! பிச்சை ஏற்பவர்கள் எவருமில்லாத தால் அந்நகரத்தில் இவர் கொடையாளி என்று சுட்ட இடமேயில்லையாம்!

1. கம்பராமாயணம், நாட்டுப்படலம், 53
2. கம்பராமாயணம், நகரப் படலம், 73

கல்லாது நிற்பார் பிறர்இன்மையின் கல்விமுற்ற
வல்லாரும் இல்லை, அவைவல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த லாலே
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ![1]

அயோத்தியில் கல்வி கல்லாது இருப்பவர் யாருமே யில்லை. அனைவரும் அனைத்தையும் கற்றவராதலின் 'இவர் கல்வியில் வல்லவர்; இவர் வல்லவரல்லர்' என்று பாகுபடுத்திக் காட்ட இடமேயில்லை. எல்லா மக்களும் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாச் செல்வங்களையும் பெற்றிருந்தனர் என்பதாலே அங்கு வறியவர், செல்வர் என்ற வேற்றுமையே இல்லை.

கம்பன் கூறியுள்ள இதே நிலையில் அந்நாடு இருந்திருக்கமுடியுமா? நாட்டில் வறுமை இருந்தது என்பதை அவன் பாடலாலேயே அறிய முடிகிறது. தன் மனைவியர், மக்களை ஈன்றெடுத்ததும் தசரதன் மகிழ்ச்சிப் பெருக்கினால் "ஏழு ஆண்டுக் காலத்துக்கு நாடு முழுவதும் வரிகளை நீக்குங்கள்; செல்வம் நிறைந்த கருவூலக் கதவுகளைத் திறந்து விடுங்கள்; அங்குள்ள பொருள்கள் அனைத்தையும், ஏழைகள் தங்கள் விருப்பம்போல் வேண்டிய மட்டும் அள்ளிச் செல்லட்டும்" எனப் பறையறையக் கட்டளையிட்டானாம். இதனைக் கம்பர்,

'இறைதவிர்ந் திடுக பார், யாண்டுஓர் ஏழ்;நிதி
நிறைதரு சாலைதாள் நீக்கி யாவையும்
முறைகெட வறியவர் முகந்து கொள்க'எனா
அறை பறை என்றனன் அரசர் கோமகன்[2]

1. கம்பராமாயணம், நாட்டுப் படலம், 74
2. கம்பராமாயணம், திரு அவதாரப் படலம், 110

எனப் பாடிக் களிக்கிறார். ஏழைகள் வேண்டியமட்டும் செல்வத்தை அள்ளிச் செல்லட்டும் - வறியவர் முகந்து கொள்க - என்ற தொடர் நாட்டில் வறியவர் இருந்ததைத் தானே சுட்டுகிறது. நிதிச் சாலையின் கதவுத் தாள்களைத் திறந்து விடுக என்பது 'கள்வாரிலாமைப் பொருள் காவலும் இல்லை' என்பதற்கு மாறாக அன்றோ உள்ளது? பொருள் காக்கப்பட வேண்டிய தாயுமிருந்தது. இராமன் வில்லை ஒடித்தான். மிதிலை நகர மக்கள் எல்லாம் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தனர். கடலிலே வெண்மேகங்கள் தண்ணீரைப் பருகுவதுபோல வறுமையுடையவர்கள் சனகனது பெருஞ் செல்வத்தை அவனது ஆணையின்படி வாரிச் சென்றார்களாம்!

வெண்ணிற மேகம் மேல்மேல்
விரிகடல் பருகு மாபோல்
மண் உறை வேந்தன் செல்வம்
வறியவர் முகந்து கொண்டார்.[1]

இவ்வாறு பாடுகின்றார் கம்பர். மிதிலையிலும் வறியவர் இருந்தனர் என்பதை இப் பாடல் தெரிவிக்கிறது.

சங்க காலம் தமிழகத்தின் பொற்காலம் என்றழைக்கப்படுவது. அப்போதுகூட மக்கள் வறுமைப் பிணியிலிருந்து முற்றிலுமாக அகன்றிருந்தார்கள் என்று சொல்லுதற்கில்லை.

நேற்று வந்து என்னைக் கொன்ற வறுமைத் துயரம் இன்றைக்கும் அவ்வாறே என்னிடத்தில் வந்துவிடுமோ? வந்தால் நான் என் செய்வேன்? நெருப்பின் உள்ளேயும் கிடந்து நிம்மதியாக உறங்கி விடலாம். ஆனால்,

1. கம்பராமாயணம், கார்முகப்., 39

வறுமைத்தீயின் உள்ளே வீழ்ந்தால் யாதொரு நொடிப் போதும் கண் மூடுதல் அரிதேயாகும் எனத் திருவள்ளுவர் இன்மையின் இன்னாமையை எடுத்தியம்புகிறார்.

இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு.[1]

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது.[2]

புலவர் பெருஞ்சித்திரனார் வெளிமான் என்னும் வள்ளலைக் காணச் சென்றார். வெளிமான் புலவரை நேரில் பாராது, தம்பியிடம் புலவர்க்குப் பரிசில் கொடுக்குமாறு சொன்னான். தம்பி கொடுத்த அப் பரிசிலைப் புலவர் ஏற்காது குமணனைச் சென்று கண்டு, பாடிப் பரிசில் பெற்றார். பரிசுப் பொருளுள் ஒன்றான எருதினைக் கொணர்ந்து வெளிமானுடைய காவல் மரத்தில் கட்டியவராய் "வேந்தனே! இரப் போர்க்கு ஈந்து பாதுகாப்பவன் நீ ஒருவன் மட்டும் அல்லன்; இரப்போர்க்கு ஈவோர் இல்லாமலும் இல்லை. இரப்போர் இருப்பதையும் அவர்கட்கு உவந்து ஈவோர் இருப்பதையும் நீ உணர்ந்து கொள்க" எனக் கூறியதைப் புறநானூறு புலப்படுத்துகிறது.

இரவலர் புரவலர் நீயும் அல்லை;
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;
இரவலர் உண்மையும் காண்;இனி இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண்...[3]

---

1. திருக்குறள், 1048
2. திருக்குறள், 1049
3. புறநானூறு, 162: 1 - 4

சங்ககாலம் தொட்டு, கம்பர் காலம் வரை—ஏன், இன்று வரை இரப்பவரும் ஈவோரும் இருக்கத்தான் செய்கின்றனர்.

"ஆகவே, கம்பர், இராமாயண காலத்து நாடு இப்படித்தான் இருக்கிறது என்று சொல்லவில்லை. நாடு இப்படி இருக்கவேண்டுமென்று கற்பனை செய்கிறார். ஆக, 'இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ' என்ற இந்தக் கற்பனை, இந்தக் கனவு, இன்றைக்குத் தோன்றியது அல்ல; சோசலிச முழக்கமல்ல. கி. பி. 886 அல்லது 887 ஆம் ஆண்டிலேயே கம்பரே இந்த முழக்கத்தைத் தொடங்கியிருக்கிறார்."[1]

கம்பன் கவிதையில் சிந்தனையைப் பறிகொடுத்த செந்தமிழ்க் கவிஞன் பாரதி, கம்பனின் கருத்தை எளிய, இனிய தமிழில் எல்லார்க்கும் புரியும்படிப் பாடினான்.

ஏழை யென்றும் அடிமையென்றும்
　　எவனு மில்லை சாதியில்;
இழிவு கொண்ட மனிதர் என்பது
　　இந்தி யாவில் இல்லையே;
வாழி கல்வி செல்வம்எய்தி
　　மனம கிழ்ந்து கூடியே
மனிதர் யாரும் ஒருநிகர்
　　சமானமாக வாழ்வமே![2]

எனக் கம்பர் கருத்தை அடியொற்றிப் பாரதி பாடியிருக்கக் காண்கிறோம்.

---

1. கலைஞர் மு. கருணாநிதி, மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்று, பக். 37
2. பாரதியார் கவிதைகள், பூம்புகார் பிரசுரம், பக்.56

திருவள்ளுவரால் வித்தூன்றப்பட்டுக் கம்பனால் வளர்க்கப்பட்ட சோசலிசத் தருவுக்குப் பாரதியார் உரமானார். பாரதிதாசனோ அத் தருவில் பழுத்த கனியாயினார். கம்பன் சொன்ன கருத்துகள் அவனினும் வேகமாகப் பாரதிதாசனிடம் வெளிப்படு கின்றன. கம்பன், நாடு இப்படியிருக்க வேண்டும் என எண்ணிப் பார்த்து உரைத்தவன். ஆனால் பாரதிதாசனோ பிரெஞ்சுப் புரட்சி, உருசியப் புரட்சி ஆகியவற்றை அறிந்தவனாதலின் அவனுடைய சொற் களில் தனித்த ஆற்றலையும் வேகத்தையும் நாம் அறிய முடிகிறது. கம்பன் அக் கருத்தை உணர்ந்து பாடினான்; பாரதிதாசனோ அறிந்து பாடுகிறார்.

எல்லார்க்கும் எல்லாம்என் றிருப்ப தான
இடம்நோக்கி நடக்கின்ற திந்த வையம்;
கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்
கசடர்க்குத் தூக்குமரம் அங்கே உண்டாம்!
இல்லாரும் அங்கில்லை; பிறன்ந லத்தை
எனதென்றும் தனியொருவன் சொல்லான் அங்கே!
நல்லாரே எல்லாரும் அவ்வை யத்தில்
நமக்கென்ன கிழியட்டும் பழம்பஞ் சாங்கம்![1]

கல்லாதவன் இருக்கிறான் என்றால் கற்காதது அவன் குற்றமன்று. கற்றவன் அவனுக்குக் கற்பிக்காமல் இருக்கிறானே அதுதான் பெருங்குற்றம். இல்லை என்றால் அந்த இல்லாமையை உண்டாக்கியவன் யாரோ அவன் தண்டிக்கப்பட வேண்டும். இது பாரதிதாசன் கொள்கை.

1. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, பக். 99

எல்லார்க்கும் தேசம், எல்லார்க்கும் உடைமைஎலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே!
எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்ந்திடுக!
எல்லார்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக!
வல்லார்க்கும் மற்றுள்ள செல்வர்க்கும் நாட்டுடைமை
வாய்க்கரிசி என்னும் மனப்பான்மை போய்ஒழிக!
வில்லார்க்கும் நல்ல நுதல்மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே மணிமுரசம் ஆர்ப்பீரே![1]

நாடு எல்லார்க்கும் உரிமையானது. எல்லாரும் இந்நாட்டு மன்னர். எல்லாச் செல்வமும் எல்லார்க்கும் பொதுவானது. எல்லாரும் கல்வியும், மருத்துவ வாய்ப்பும் பெறவேண்டும். நாடு ஒரு சிலர்க்கு மட்டுமே என்றெண்ணுகிற பொல்லா நினைப்புப் போயொழிய வேண்டும்! பெண்கள் உரிமை பெற்றவர்களாய்த் திகழ வேண்டும். இந்தப் பொதுநிலை 'நல்ல இதயம்' இருந்தால் தான் வாய்க்குமென்பதால் 'எல்லார்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக' என்கிறார்.

எல்லார்க்கும் நல்லின்பம்
எல்லார்க்கும் செல்வங்கள்
எட்டும் விளைந்ததென்று
கொட்டு முரசே—வாழ்வில்
கட்டுத் தொலைந்ததென்று
கொட்டு முரசே!

இல்லாமை என்னும்பிணி
இல்லாமல் கல்விநலம்
எல்லார்க்கும் என்றுசொல்லிக்
கொட்டு முரசே—வாழ்வில்

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 50

பொல்லாங்கு தீர்ந்ததென்று
கொட்டு முரசே![1]

என 'எல்லார்க்கும் எல்லாம் என்பதற்கு' முரசு முழங்குகிறார் பாவேந்தர்.

உருசிய நாட்டுப் புரட்சியை நன்கறிந்தவர் பாவேந்தர் பாரதிதாசன். இமயமலை வீழ்ந்ததுபோல் ஜார் அரசன் வீழ்ந்ததையும் மக்களுக்காகவே நாடு என்ற குடியரசுக் கோட்பாட்டையும், ஒன்றுபட்ட மக்கள் சக்தியே உலகை உயர்த்துமென்பதையும் உலக நடப்புகளால் உணர்ந்தவர் பாரதிதாசன். எனவே தான்,

பிரிவிலை; எங்கும் பேதமில்லை;
உலகம் உண்ணஉண்; உடுத்த உடுப்பாய்!
புகல்வேன் உடைமை மக்களுக்குப் பொது!
புவியை நடத்துப் பொதுவில் நடத்து!
வானைப் போல மக்களைத் தாவும்
வெள்ள அன்பால் இதனைக்
குள்ள மனிதர்க்கும்கூறடா தோழனே![2]

எனச் செம்மாந்து பாடுகிறார். 'எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே இல்லாருமில்லை உடையாருமில்லை' என்னும் கம்பனின் வாக்கு, இன்றுள்ள சோசலிச, கம்யூனிசக் கருத்துகளோடு கலந்து பாரதிதாசனிடம் பீடுநடை போடுகிறது.

'இது எனது' என்னும் கொடுமையைத் தவிர்ப்போம்; 'ஒரு பொருள் தனி' என்னும் மனிதரைச் சிரிப்போம்; 'கூழுக்கு ஒருவன் அழும்படி, ஆண்டிடும்

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 2, பக். 160
2. மேலது, தொகுதி 1, பக். 150

கோலை முறித்திடுவோம்', 'ஏழை முதலாளி இல்லாமற் செய்திடுவோம்'...'பொதுவுடைமைக் கொள்கை திசை யெட்டும் சேர்ப்போம்' என்று புரட்சியின் விளைவாகிய புது உலகைப் - புதுவாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகிறார் புரட்சிக் கவிஞர்.[1]

## 2. அவையடக்கம்

இராமாயணத்துக்கு முன்னரே தமிழில் காப்பியங்கள் தோன்றிவிட்டன. சிலப்பதிகாரம், கோவலன் - கண்ணகி திருமணத்துடன் தொடங்குகின்றது. மணிமேகலையோ, மணிமேகலை துறவு கொள்ளும் சூழ்நிலையில் முகிழ்க்கிறது. சீவக சிந்தாமணி, சீவகன் தந்தையின் அரசாட்சியை விவரித்துச் சீவகன் பிறப்பு முதல் பாடுகிறது. இவ்வாறு காப்பியத் தொடக்கம் வெவ்வேறு வகையினதாக இருக்கக் காண்கிறோம். கடவுள் வாழ்த்து, அவையடக்கம் கூறுகிற 'பாயிரத் தொடக்கம்' குண்டலகேசியில் காணப்படுகிறது. சீவக சிந்தாமணி பாயிரம் முடிந்ததும் நாட்டு வளம், நகர வளம் பாடிக் கதையுட் செல்கிறது. பின்னர்த்தோன்றிய காப்பியங்கள் இம் மரபைப் பின்பற்றத் தொடங்கின. பாயிரத்தில்—கடவுள் வாழ்த்து, அவையடக்கம் என்பன இரு முக்கியப் பகுதிகளாகும். நூலாசிரியர் நூலைப் பாடத் தொடங்குமுன் அவையடக்கம் பாடுவது மரபாக இருந்து வந்திருக்கிறது. அவையடக்கம் பற்றி,

> அவையடக். கியலே யரிறபத் தெரியின்
> வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்(று)
> எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே[2]

---

1. பேராசிரியர் க. அன்பழகன், கட்டுரை - கொலை வாளினை எடடா, கவிஞர் மலர், பக். 46
2. தொல்காப்பியம், செய்யுளியல், நூற்பா 109

எனத் தொல்காப்பிய நூற்பா பேசுகிறது. அவை யடக்கியல் என்பதற்கு உரையாசிரியர் பேராசிரியர் 'அவையை வாழ்த்துதல்' என்று பொருள் சொல்வார். நூலைப் படைத்த ஆசிரியர், அந்நூலைக் கூறப் புகுமுன் அவையில் உள்ளவர்களைப் புகழ்தல் என்பது கருத்து. இளம்பூரணரோ 'அவையடக்கியலைக் குற்றமற ஆராயின் அறியாதன சொல்லினும், பாகுபடுத்துக் கோடல் வேண்டும் என எல்லா மாந்தர்க்கும் தாழ்ந்து கூறல் என்றவாறு' என இந்நூற்பாவுக்குப் பொருள் கொள்கிறார். அஃதாவது அவையினர்முன் தன்னை எளியனாக்கிக் கொள்ளுதல் என்பது இங்கே கருத்தா கிறது. அவையடக்கியலா, அவையடங்கியலா என்னும் மயக்கம் நமது தொல்காப்பிய உரையாசிரியர்கள் காலத்திலேயே தோன்றிவிட்டது. என்றாலும் பொது வாக அவையடக்கம் என்பது கவிஞர், தன் புலமை நலம் குறைபாடுடையதெனினும், சொல்லப்படும் கருத்துக் களை நோக்கித் தன் கவிதைகளை அவையினர் ஏற்றுக் கொள்ள வேண்டுமென அவையினரைக் கேட்டுக் கொள்ளும் முறையில் பாடப்பட்டு வருகிறது. பெரும் புலவர்கள் தங்கள் திறமையைக் குறைத்துக் கூறுவது அடக்கம் காரணமாவதன்றி, அஃது உண்மையாகாது. சொல்லப்போனால் 'தாம் புலமை நலம் குறைந்தவர்' என்று பாடுகின்ற அவையடக்கப் பாடல்கள் தாம் புலவர் களுடைய உயர்புலமைக்குச் சான்றாய் விளங்கிச் சிறக் கின்றன.

கி. பி. ஏழாம் நூற்றாண்டினதாகிய குண்டலகேசி யில்தான் முதன் முதலாக அவையடக்கப் பாடல் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது. "நோயுடையோர் அந்நோயின் தீர்வு கருதித் தாமுண்ணும் மருந்து

இனிதோ, இன்னாதோ? என ஆராய்வதில்லை. குளிரால் வருந்தித் தீக்காயும் அவாவுடையோர் அத்தீயின் புகை தமக்குச் செய்யும் தீமையை ஒரு பொருட்டாகக் கருத மாட்டார். அதுபோலவே புத்த தேவனுடைய அறத்தைப் பாடுகின்றேன் என்பதால் என் அறியாமை காரணமாக உண்டாகிய சொற்குற்றங்களை நோக்கி இந்நூலை இகழமாட்டார்கள்''[1] என்பது அப்பாடலின் பொருள். என் பாடல்கள் குற்றமுடையனவாயினும் அவை கூறும் அறம் கருதி அவற்றை ஏற்றருள வேண்டுமென அவையினரை வேண்டுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

சீவக சிந்தாமணியின் உரையாசிரியர் திருத்தக்க தேவர், ''கடல்நீர் உப்புச்சுவை மிக்கதாயினும், அதில் தோன்றும் பவளம், சங்கு, முத்து முதலிய உயர்ந்த பொருள்களை வெறுப்பாரிலர். அதைப்போல இந்நூல் கூறும் பழம்பொருளால் வீடுபெற விரும்பும் சான்றோர், என் சொற்கள் உப்புத் தன்மையுடையனவாயினும் அவற்றில் பொதிந்துள்ள நற்கருத்துகளை விரும்பி யேற்பர்'' என அவையடக்கம் கூறுகிறார்.

முந்நீர்ப் பிறந்த பவளத்தொடு சங்கு முத்தும்
அந்நீ ருவர்க்கும்மெ னின்யாரவை நீக்கு கிற்பார்
இந்நீர வென்சொற் பழுதாயினுங் கொள்ப வன்றே
பொய்ந்நீர வல்லாப் பொருளால், விண் புகுது
மென்பார்[1]

இவர்களையொத்துக் கம்பனும் அவையடக்கம் பாடியுள்ளான். ''பாற்கடல் முழுவதையும் ஒரு பூனை நக்கிக் குடித்துவிட முற்பட்டது போல நானும் ஆசை

1. சீவகசிந்தாமணி, கடவுள் வாழ்த்து, பாடல் 5

வெட்கமறியாது என்பதற்கேற்ப இராம கதையைப் பாட முற்பட்டுள்ளேன். சிறுபிள்ளைகள் நிலத்திலே அறைகளைக் கொண்ட வீடுகளும் ஆடுதற்கேற்ற மேடைகளும் தோன்றுமாறு கிறுக்கி விளையாடினால் சிற்பிகள் இவை நூல்முறைக்கு ஒவ்வாதன என்று எவ்வாறு சினந்து கொள்ளமாட்டார்களோ அதுபோல ஓரளவு அறிவும் பெறாத நான் இயற்றிய அற்பமான பாடல்களைப் பார்த்து முறைபிறழாது நூல்களை ஓதியுணர்ந்த சான்றோர்களும் இவை காப்பிய இலக்கணத்திற்கேற்ப அமையவில்லை என்று சினங்கொள்ளமாட்டார். இத் துணிவினாலேயே நான் இதனைப் பாடலுற்றேன்'' என்கிறார் கம்பர்.

ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று ஒரு
பூசை, முற்றவும் நக்குபு புக்கென,
ஆசை பற்றி அறையலுற்றேன்—மற்று இக்
காசு இல் கொற்றத்து இராமன் கதைஅரோ![1]

அறையும் ஆடரங்கும் மடப் பிள்ளைகள்
தறையில் கீறிடின், தச்சரும் காய்வரோ?
இறையும் ஞானம் இலாத என்புன் கவி
முறையின் நூல்உணர்ந்தாரும் முனிவரோ?[2]

'கல்வியிற் பெரியன்' என்றும் 'கவிச்சக்ரவர்த்தி' என்றும் போற்றப்படும் கம்பனின் அடக்கத்தைப் பறைசாற்றுகின்றன இப்பாடல்கள்.

வெளிநாட்டிலிருந்து தமிழ்நாடு போந்து தமிழ் படித்துத் தேம்பாவணிக் காப்பியம் இயற்றிய வீரமாமுனிவரும் கம்பன் கருத்தை அவ்வாறே எடுத்தாண்டு,

1. கம்பராமாயணம், பாயிரம், பாடல் 4
2. கம்பராமாயணம், பாயிரம், பாடல் 9

"சூசை முனிவர் அடைந்த வரமாகிய கடலைக் கடக்க இயலாது. ஆயினும் சிறியவனாகிய எனதுள்ளத்தில் பொங்கியெழுந்த ஆசையால், ஊமையன் ஆனாலும், ஒலித்துப் பொங்கும் அமுதக் கடலென்று வணக்கத்தோடு நக்கிக் குடிக்கப் புகுந்ததுபோல அவரது அரிய வரலாற்றை எடுத்துரைக்கத் தொடங்கினேன். அடியேன் அமுதக் கடலின் நடுவில் மூழ்கிக் களிக்கத் துணிவில்லாமல் கையால் அள்ளிக் குடிப்பதைக் கண்டு, அரிய நூல்களை முறையோடு கற்றுணர்ந்தோர், 'குறைவாய் எடுத்தான்' என்று சினங்கொள்ளுதல் நன்றோ? பறையறைந்து அடியேனைப் பழித்துரைத்தல் நன்றாமோ?"[1] என அவையடக்கம் கூறியுள்ளார்.

இசுலாமியக் காப்பியம் பாடியுள்ள உமறுப் புலவரும் மரபையொட்டி தாம் இயற்றியுள்ள சீறாப்புராணத்தில் புகழ்பெற்ற செந்தமிழ்ப் புலவர்கள்முன் தாம் பாடுவதானது உலகமும், ஏழு கடல்களும், மலைகளும் பொடிபட வீசுகின்ற பெருங்காற்றின் முன்னே, பசித்து இளைத்த சிற்றெறும்பு ஒன்று மூச்சு விட்டதற் கொப்பாகும் என்பார். மற்றும் செந்நாப் புலவர்கள் முன் தாம் பாடுவதானது

இடிஇ டித்திடும் ஆரவா ரத்தினுக்கு எதிர்ஓர்
நொடிநொ டிப்பது போலும்ஒத் திருந்தது என்நூலே[2]

என்று கூறுகிறார்.

---

1. தேம்பாவணி, பாயிரம்
2. உமறுப்புலவர், சீறாப்புராணம், கடவுள் வாழ்த்து' பாடல் 20

தேசியக் கவி பாரதியார் 'அவையடக்கம்' என்றில்லாமல் எடுத்துக்கொண்ட செயலை இனிது முடிக்க இறையருளை வேண்டிப் பாடிக் காப்பியத்தைத் தொடங்குகிறார்.

வாணியைச் சரண் புகுந்தேன்—அருள்
வாக் களிப்பாளெனத் திட மிருந்தேன்;
பேணிய பெருந் தவத்தாள், நிலம்
பெயரளவும் பெயர் பெய ராதாள்
பூணியல் மார் பகத்தாள், ஐவர்
பூவை, திரௌபதி புகழ்க் கதையை
மா ணியல் தமிழ்ப் பாட்டால்—நான்
வகுத் திடக் கலைமகள் வாழ்த்துகவே![1]

எனப் பாஞ்சாலி கதையைச் சொல்ல வாணியின் அருளை வேண்டுகிறார்.

பாவேந்தர் பாரதிதாசனோ வழிவழி வந்த இம்மரபு பற்றிக் கவலைப்படவில்லை. கடவுள் வாழ்த்து, அவையடக்கம் என்பவற்றை அவர் எண்ணிப் பார்க்கவேயில்லை. அவருடைய எந்தக் காப்பியத்திலும் இவை இடம் பெறவில்லை.

கடவுள் வாழ்த்தையடுத்துக் காப்பியங்களில் நாட்டு வளம், நகர வளம் இடம்பெறுவது இயல்பு. பாரதியாரும் பாரதிதாசனும் நாட்டு வளம், நகர் வளம் இவற்றைத் தனியே பாடவில்லை. இடையிடையே எங்குத் தேவையோ அங்குப் பாடியுள்ளனர். பண்டைய கதையேயாயினும் இன்றைய நிலையை மனத்திற் கொண்டு இவற்றை அவர்கள் பாடியிருக்கிறார்கள்.

1. பாரதியார், பாஞ்சாலி சபதம், முதற் பகுதி, பாடல் 6

பாஞ்சாலி சபதத்தில் பாரதியார் அத்தினாபுரத்தைப் பாடும்போது,

மெய்த் தவர்பல ருண்டாம்—வெறும்
வேடங்கள் பூண்டவர் பலருமுண் டாம்;
உய்த் திடுசிவ ஞானங்—கனிந்
தோர்ந்திடுமே லவர் பலருண் டார்;
பொய்த்த விந்திர சாலம்—நிகர்
பூசையுங் கிரியையும் புலை நடையும்
கைத்திடு பொய்ம் மொழியும்—கொண்டு
கண்மயக்காற் பிழைப்போர் பல ராம்[1]

என்பார்.

பாரதிதாசன் கடல்கொண்ட குமரி நாட்டிலிருந்த குறிஞ்சித் திட்டு பற்றி ஒரு காப்பியம் பாடியுள்ளார். குறிஞ்சித் திட்டு எத்தகையதாயிருந்தது?

கடல்கொண்ட குமரி நாட்டில்
கடல்கொள்ளாக் 'குறிஞ்சித் திட்டு'
மிடல்கொண்டும், வேறு நாட்டார்
நெருங்கவே விடாமை கொண்டும்,
நடல்கொண்டும், விளைச்சல் கொண்டும்
நலங்கொண்டும், மகிழ்ச்சி கொண்டும்
இடல்கொண்டும், அறமே கொண்டும்
எலாங்கொண்டு திகழ்ந்த தங்கே!

மதமில்லை குறிஞ்சித் திட்டில்;
மதம்பெற்ற சாதி யில்லை;
இதுபொருள் என்று தச்சர்
ஈந்திட்ட உருவங் காட்டி

1. பாரதியார், பாஞ்சாலி சபதம், முதற் பகுதி, பாடல் 9

மதிமாய்க்கும் கோயி லில்லை!
ஆதலால் மக்கள் நெஞ்சில்
கொதிப்பில்லை, பொதுப்ப ணத்தைக்
கொள்ளைகொள் ளுவது மில்லை!

வேற்றுவர் படைஎ டுப்பு
விளைந்ததே இல்லை அங்கே!
மாற்றுவோம் தமிழ்ஒ முக்கம்
எனப்பிறர் வந்த தில்லை!
ஏற்பவர் இல்லை, யாரும்
இருப்பவர் ஆத லாலே!
சீற்றமே எவர்க்கும் இல்லை,
சிரிப்பிலா முகங்கள் இல்லை.

பிறர்நாட்டை எதிர்பார்க் கின்ற
பிற்போக்கு நிலைமை இல்லை;
பிறர்நாட்டைத் தாய்நா டென்பார்
உள்நாட்டில் பிழைப்ப தில்லை;
பிறமொழி தமிழிற் சேர்க்கும்
பேடிகள் நுழைந்த தில்லை;
அறமுதல் நான்கு கூறும்
தமிழ்மறை அலால்வே றில்லை.[1]

இன்று நாட்டில் தென்படும் அவலங்களை மனத்திற் கொண்டு அவையெலாம் அங்கில்லை—அன்றில்லை என்கிறார்.

### 3. கை வண்ணம்

கம்பராமாயணப் பாடலடிகளையும் கருத்துகளையும் பாரதிதாசன் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

---

1. பாரதிதாசன், குறிஞ்சித் திட்டு, பிரிவு 1, பாடல் 1,3,4,5,

கம்பனின் கவிதைப் போக்கு—யாப்பு முறை பாரதிதாச விடம் படிந்திருக்கக் காண்கிறோம், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் "என் பாட்டார்வம் பாரதி, பாரதிதாசனைப் பின்பற்றியது. பாட்டெழுதும் ஆர்வம் கம்பனைப் பின்பற்றியது. கவிஞர் பாரதிதாசனும் பின்னாட்களில் கம்பனின் நாலடி விருத்தத்தை எட்டடி யாக்கியே புதுமை மாயம் செய்தார். கம்பர் பாணியைக் குறை சொன்ன அவருக்கு நான் இதை எடுத்துக் காட்டியபோது 'உங்கள் கருத்துரை சரிதான்' என்று பாராட்டினார்"[1] எனக் கூறியுள்ளதிலிருந்து கம்பனின் யாப்புமுறை பாரதிதாசனைக் கவர்ந்திருக்கிறது என்பதை அறியலாம். புராணங்களை அவர் வெறுத்த போதும் அவற்றிலுள்ள அழகுத் தமிழை வெறுத்த தில்லை. பாவேந்தர் புதுவையிலுள்ள தன் நண்பர் சுந்தர சண்முகனாரிடம் தன் மகன் கோபதிக்குத் (மன்னர் மன்னனுக்குத்) தமிழ் இலக்கியப் பாடம் கற்றுக் கொடுக்கச் சொன்னார். அவர் 'எந்நூலைத் தொடங்க?' என்று கேட்டபோது 'திருவிளையாடல் புராணம் தொடங்கு' என்றாராம் பாரதிதாசன். தன்மான இயக்கக் கொள்கையும் நாத்திகக் கொள்கையும் உடைய பாரதிதாசன், திருவிளையாடல் புராணம் நடத்தச் சொல்கிறாரே எனச் சுந்தர சண்முகனார் வியப்புடன் அவரை நோக்கியபோது அவர் எண்ணத்தைப் புரிந்து கொண்ட கவிஞர் "சண்முகம்! நீ நினைப்பது எனக்குப் புரிகிறது. இங்கே புராணத்தைப் பற்றி நமக்குக் கவலை யில்லை. புராணத்தில் உள்ள தமிழே நமக்குத் தேவை. திருவிளையாடல் புராணம் எளிய நடையிலே கதைப் போக்காக இருப்பதால் முதலில் அதைக் கற்பித்து

---

1. கா. அப்பாத்துரையார், சுடர்-பாரதிதாசன் மலர் 1966, பக். 41

இலக்கியப் பயிற்சி உண்டாக்குவது நல்லது'' என்றாராம்.[1] புராணங்களைப் பாவேந்தர் கண்டித்தார் எனினும் 'புராணத் தமிழை' அவர் வெறுத்தவரல்லர்! குமரகுருபரரின் கொஞ்சு தமிழில் கவிஞர் தன் நெஞ்சைப் பறிகொடுத்தவர் என்பதை அவருடைய 'எதிர்பாராத முத்தம்' காப்பியத்தின் இரண்டாம் பகுதி சுட்டுகிறது. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலுள்ள 'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்' எனத் தொடங்கும் 'நறைபழுத்த துறைத் தீந்தமிழில் ஒழுகும் அந்நறுஞ்சுவைப் பாடல்' அவர் உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொண் டுள்ளது.

அப்பாட்டுக் கிப்பால் எங்கும்
சமான மொன்றிருந்தது தில்லை[2]

என உள்ளங் குளிர அதனைப் போற்றுகிறார்.

இராமன் தாடகையைக் கொன்றான். விசுவாமித் திரன் வேள்வியை முடித்து இராம இலக்குவருடன் மிதிலை நோக்கிச் சென்றனன். வழியில் கிடந்த கல்மீது இராமன் கால் துகள்பட, அக்கல் பெண்ணுருவானது. அப்பெண் கௌதமன் மனைவி அகலிகை என்பதையும், அவள் கௌதமன் சாபத்தால் கல்லுருவானதையும் இராமனின் திருவடிப் பெருமையால் சாபம் நீங்கிப் பழைய நிலையை அடைந்ததையும் சொன்ன விசுவாமித்திரன்,

---

1. சுந்தர சண்முகனார், பாரதிதாசரோடு பல ஆண்டுகள், பக். 44
2. பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், பக். 69

இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்;
இனி, இந்த உலகுக்கு எல்லாம்
உய்வண்ணம் அன்றி, மற்று ஓர்
துயர் வண்ணம் உறுவது உண்டோ?
மை வண்ணத்து அரக்கி போரில்,
மழை வண்ணத்து அண்ணலே! உன்
கை வண்ணம் அங்குக் கண்டேன்;
கால் வண்ணம் இங்குக் கண்டேன்[1]

என மகிழ்ச்சி பொங்கக் கூறினான். இப்பாடலிலுள்ள 'கைவண்ணம் அங்குக் கண்டேன்; கால்வண்ணம் இங்குக் கண்டேன்' என்னும் தொடர்களைப் பாரதிதாசன் கையாள்கிறார். புதுவீடு கட்டுவோர் பூசணிக்காய் ஒன்றைக் கட்டித் தொங்கவிடுவதுண்டல்லவா? அதனைப் 'பூசணிக்காய் மகத்துவம்' என்ற தலைப்பில் பாடுகின்றார் புரட்சிக் கவிஞர்.

மெய்வண்ண வீடு கட்ட
உனைத்தொங்க விடுகின்றார்கள்;
செய்வண்ண வேலை செய்து
திருமாடம் முடிக்கின் றாய்நீ
பொய்வண்ணப் பூசணிக்காய்
கறியுனைச் செய்துண் டேன்; உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்;
கறிவண்ணம் இங்குக் கண்டேன்.[2]

இப்பாடலில் கம்பன் தொடர்களை நகைச்சுவையுடன் பாவேந்தர் ஆண்டுள்ள திறத்தைக் காணலாம்.

---

1. கம்பராமாணயம், அகலிகை, பாடல். 24
2. பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 1, பக். 188

## 4. இயற்கை நடம்

மருதநில வளம் பற்றிக் கம்பர் மிக அருமையாகப் பாடியுள்ளார்.

தண்டலை மயில்கள் ஆட,
    தாமரை விளக்கம் தாங்க,
கொண்டல்கள் முழவின் ஏங்க,
    குவளை கண் விழித்து நோக்க
தெண் திரை எழினி காட்ட,
    தேம் பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட,—
    மருதம் வீற்றிருக்கும் மாதோ![1]

என்பது கம்பர் பாடல். கம்பராமாயணத்தில் எவரும் விரும்பிச் சொல்லுகின்ற பாடல் இது. முழவு முழங்கவும், யாழ் ஒலிக்கவும், விளக்குகள் ஒளிகூட்டவும், திரைச்சீலை அசையவும், மங்கையாடும் நாட்டியத்தைக் கண் மலர்ந்து காண்பதுபோல - மேகங்கள் முழங்க, வண்டுகள் ஒலிக்க, தாமரை மலர்கள் ஒளிசெய்ய, நீர்ப்பரப்பில் சிற்றலைகள் அசைய, மயில் ஆட, குவளைகள் மலர்ந்து விரிய மருத அழகு பொலிகிறது. மயில் - ஆடுமகள்! பொய்கையில் பூத்துள்ள தாமரை - மேடை விளக்கு; மேக முழக்கம் - முழவு; குவளை மலர்கள் - நாட்டியத்தைக் காணும் கண்கள்; பொய்கையில் ஏற்படும் நீரலை - திரைச் சீலை; வண்டின் பாட்டு - யாழ் இசை; மருதம் - நாட்டியத்தைக் காண்பவர் என மருதநிலத்தை ஒரு நாடகமேடையாக உருவகம் செய்கிறார் கம்பர்.

இப்பாடல் பாவேந்தரைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. கம்பனைப் போலவே பாரதிதாசனும் சோலையை

---

1. கம்பராமாயணம், நாட்டுப் படலம்., பாடல், 4

நாடக மேடையாக்கிக் காட்டுகிறார். மணம் மிகுந்த மலர்களில் தேனுண்ணும் வண்டுகளின் இசை வீணை யொலியாகிறது. மரங்கொத்திப் பறவைகள் மரத்தை அலகால் கொத்தும் ஒலி தாளம் ஆகிறது. குளக்கரையில் அலைகள் கருண்டு கருண்டு வந்து மோதுவது மிருதங்கம் ஆர்ப்பதாகிறது. குயிலோசை பாடகனின் பாடல் ஆகிறது. இவ்வாறு வண்டு வீணையாக, மரங்கொத்தியின் குத்துதல் தாளமாக, குளத்தில் அலை மோதுதல் மிருதங்கம் தட்டுவதாக, குயில் பாடகனாக இருக்க மயில் என்னும் மங்கை ஆடுகின்றாளாம்!

விரைமலர்த் தேன்வண் டெல்லாம்
வீணையை மிழற்ற, ஆங்கே
மரங்கொத்திப் புட்கள் தாளம்
வகைப்படுத் திடத், தடாகக்
கரையினில் அலைக் கரங்கள்
கவின் மிருதங்கம் ஆர்ப்ப,
கருங்குயில் பாட, தோகைக்
கணிகை நின்றாடும் சோலை.[1]

கம்பனை அடியொற்றிப் பாவேந்தர் பாடியுள்ள அருமையான பாடல் இது. 'தண்டலை மயில்கள் ஆட' என்ற பாடல் பாரதிதாசன் மனத்தில் ஆழப் பதிந்து இப் பாடல் வெளிப்பட்டுள்ளது. கம்பன் கையாண்ட அறுசீர் விருத்தத்திலேயே பாரதிதாசனும் பாடியிருக் கிறார்.

இவ் வருணனையைப் பாவேந்தர் தாலாட்டுப் பாடல் ஒன்றிலும் பயன்படுத்துகிறார். வண்டு இசைபாட, மரங்

1. பாரதிதாசன், முல்லைக் காடு, பக். 11

கொத்தி தாளமிட, அலை கரையில் மோதி முழவொலி எழுப்ப, பசுமை படர்ந்த பந்தரிலே மயில் ஆட, குயில் பின்பாட்டுப் பாடுகின்ற அழகுத் தமிழ்நாடு உன்னதுவே—எனத் தொட்டிலில் துயிலும் குழந்தைக்கு நாட்டின் வளத்தை—இயற்கையின் நாட்டியத்தை இயம்பி மகிழ்கிறார்!

> கோட்டுப்பூ நல்ல கொடிப்பூ நீலநீர்ப்பூ
> நாட்டத்து வண்டெல்லாம் நல்லஇசை பாய்ச்சக்
> கொத்தும் மரங்கொத்தி தாளம் குறித்துவரத்,
> தத்துபுனல் தாவிக் கரையில் முழாமுழக்க
> மின்னும் பசுமை விரிதழைப்பூம் பந்தலிலே,
> பன்னும் படம்விரித்துப் பச்சைமயி லாடுவதும்
> பிள்ளைக் கருங்குயிலோ பின்பாட்டுப் பாடுவதும்,
> கொள்ளை மகிழ்ச்சித் தமிழ்நாடு கொண்டாய் நீ[1]

எனக் கொள்ளை மகிழ்ச்சி துள்ளக் குழந்தைக்குத் தாலாட்டுப் பாடுகிறார்.

கோசலத்தின் மருத வளம் கூறியதுபோலவே, கம்பர் மிதிலைச் சோலை வளத்தையும் காட்டுகிறார். அங்கு மதகுகளில் நீர் வெளிவரும் ஓசை - முழவொலியாக, அசோகின் மலர்கள் - விளக்குகளாக, வண்டு - பண்ணிசைக்கும் பாணனாக, மயில் - ஆடுமகளாகச் சோலை - ஆடுகளமாகி அழகு பொலிகிறது.

> வரம்பு இல் வான்சிறை மதகுகள் முழவு ஒலி வழங்க,
> அரும்பு நாள் மலர்அசோகங்கள் அலர் விளக்கு எடுப்ப,
> நரம்பின் நான்றதேன் தாரைகொள் நறு மலர் யாழின்
> சுரும்பு, பாண் செய, தோகைநின்று ஆடுவ—சோலை.[2]

---

1. பாரதிதாசன், இசையமுது 1, பக். 57 - 58
2. கம்பராமாயணம், அகலிகை., 7

இயற்கை வளத்தை இயம்புவதில் கம்பரும் பாவேந்தரும் இணைபாதையில் நடைபோட்டுச் செல்லும் திறத்தைக் கண்டு மகிழ்கிறோம்.

## 5. கைகாட்டும் கொடிகள்

மதுரைக் கோட்டையின்மீது கொடி காற்றில் அசைந்தாடுவது "நீங்கள் இங்கு வாராதீர்கள்" எனக் கையை அசைத்துக் கோவலன் - கண்ணகியைத் தடுப்பது போன்றிருந்ததென்பார் இளங்கோவடிகள்.

போர்உழந்து எடுத்த ஆர்எயில் நெடுங்கொடி
வாரல்என் பனபோல் மறித்துக் கைகாட்ட[1]

இவ்வாறு கொடி அசைதலின்மீது கவிஞன் தன் குறிப்பை ஏற்றிப் பாடிப் படிப்போர் உள்ளத்தை ஈர்த்த முதற் பாவலர் இளங்கோவடிகளேயாவர்!

இராமன் விசுவாமித்திர முனிவரோடும் தன் தம்பி இலக்குவனோடும் மிதிலைக்கு வருகிறான். அப்போது மிதிலைக் கொடிகள் அசைந்தாடுவதானது திருமகள் அந் நகரில் சீதையாகப் பிறந்து வளர்வதைக் குறிப்பாற் புலப்படுத்தி, அவளுக்குக் கொழுநன் ஆதற்கு ஏற்ற இராமனை மணம் புரிய விரைந்து வருமாறு கைகாட்டி அழைப்பது போன்றிருப்பதாகக் கம்பர் குறிப்பிடு கின்றார்.

'மையறு மலரின் நீங்கி,
யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள்' என்று,
செழுமணிக் கொடிகள் என்னும்

1. சிலம்பு, புறஞ்சேரி, 189 - 90

கைகளை நீட்டி அந்தக்
கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை 'ஒல்லை வா'என்
றழைப்பது போன்ற தம்மா![1]

பாரதத்திலும் கொடி அசைந்தாடும் தன்மையைக் கொண்டு ஒரு குறிப்பைப் புலப்படுத்துகின்றார் வில்லிப்புத்தூரார். பாரதப் போர் மூளவிருக்கும் நேரம். கண்ணனைப் போரில் தன் பக்கம் சேருமாறு கேட்கத் துவாரகையை நோக்கித் துரியோதனன் செல்கிறான். துவாரகையின் மதில்களில் உள்ள கொடிகள் காற்றில் அசைகின்றன. அக் காட்சி "துரியோதனா! நீ இங்கு வந்தாலும் எங்கள் எழிலுடை எழிலி வண்ணனாகிய கண்ணன் உனக்குத் துணையாக இருக்கமாட்டான். அவன் பாண்டவாககே பக்கத் துணையாக இருப்பான். எனவே நீ இங்கு வருவதிற் பயனில்லை. 'திரும்பிப் போ! திரும்பிப் போ!' என்றுரைபபது போன்றிருந்ததாம்!

ஈண்டுநீ வரினும் எங்கள்
எழிலுடை எழிலி வண்ணன்
பாண்டவர் தங்கட் கல்லால்
படைத்துணை ஆக மாட்டான்
மீண்டுபோ கென்றென் றந்த
வியன்மதிற் குடுமி தோறும்
காண்தகு பதாகை ஆடை
கைகளால் தடுப்ப போன்ற[2]

---

1. கம்பராமாயணம், மிதிலைக் காட்சி, பாடல் 1
2. வில்லி பாரதம், வாசுதேவனைப் படைத்துணை, பாடல் 5

சீறாப்புராணத்தில் கொடியசைவில் அருமையான கற்பனையை அமைத்துப் பாடுகிறார் உமறுப்புலவர்.

உகுதுப் போருக்கு இசுலாமியப் படை திரண்டு சென்றது. படையில் விசிறிகள் அசைந்தாடியதோ, பகைவர் படைகளை அழிக்கச் 'செல்லுங்கள் செல்லுங்கள்' என்று ஏவியதொத்தது; பல்வகை இசைக் கருவிகள் முழங்கியதோ பகைவர்களைக் 'கொல்லுங்கள் கொல்லுங்கள்' என்பதொத்தது; கொடிகள் ஆடியதோ இப் படை 'வெல்லும் வெல்லும்' என்ற அளவற்ற மகிழ்ச்சியால் அவை ஆடியதொத்தது.

அல்லும் கல்லும் ஒத்தனமனக் 'குபிர்' அவர் படையில்
'செல்லும் செல்லும்' என்றேவின விசிறியின் திரள்கள்;
'கொல்லும் கொல்லும்' என்றுரைத்தன பல்லியங்
குமுறல்;
'வெல்லும் வெல்லும்' என் றாடின விடுநெடுங்கொடிகள்.[1]

கொடியசைவு குறித்துப் பெரும்புலவர்கள் தொடர்ந்து பாடியிருக்கப் பாரதிதாசன் பாடாது விடுவாரா?

கதிர்நாட்டின் நெடுங்கோட்டை மதிலின் மீது
கைகாட்டி 'வா பகையே' எனஅ ழைக்கும்
புதுமைபோல் கொடிபறக்கக் கண்டார் அன்னோர்!
'போவீர்கள் விரைவாகப் பகைவர் கோட்டை
அதோபாரீர்' எனஉரைத்தார் படைத்த லைவர்;
ஆம்என்று குதித்தார்கள் மறவ ரெல்லாம்;
அதிரும் நடையாற்புழுதி மண்ணில் ஏற
ஆர்ப்பாட்டப் போர்ப்பாட்டுப் பாடிச் சென்றார்.[2]

---

1. சீறாப்புராணம், உகுதுப்படலம், பாடல் 96
2. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, பக். 2

இளங்கோவின் கொடி இனி நேரவிருக்கும் தீமையை அறிந்து எச்சரிக்கும் வகையில் இங்கே 'வாராதே' என அசைகிறது. கம்பனின் கொடியோ சீதையை மணக்க விருக்கும் மணமகனை 'விரைந்துவா' என அழைக்கிறது. வில்லிப்புத்தூரார் கொடியோ இங்கு வந்துப் பயனில்லை 'போ போ' எனப் புலப்படுத்துகிறது. உமறுவின் கொடியோ நீதி 'வெல்லும் வெல்லும்' என்று எக்களித்து ஆடுகிறது. இவை இயல்பே! ஆனால் பாரதிதாசன் கொடியோ பகையை 'வா' என்றழைக்கிறது. பகையைப் 'போ' என்னாமல் 'வா' என்பது புதுமையல்லவா? அதனால்தான் 'புதுமைபோல் கொடி பறந்தது' என அவரே குறிப்பிடுகிறார். 'வா' என்று சொல்லக் காரணம் என்ன? 'கதிர் நாடு பாதுகாப்பின்றி இருக்கிறது. பகைவர் வசம் அது ஆகப்போகிறது. அதனால் 'வெற்றி உனக்கே! வா வா' என்றழைப்பதாகப் பின்னர் நிகழ இருப்பதைக் கொடியின் மேலேற்றி முன்னதாகவே கூறி விடுகிறார்.

## 6. சாளரம் தோறும் சந்திர உதயம்

குளிர் பொங்கும் நிலவைக் காணும் ஒருவன் அதைத் தன் காதலியின் முகத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கிறான். 'நிலவுக்கும் என் காதலி முகத்திற்கும் வேறுபாடு காண முடியாமையால்தான் விண்மீன்கள் அங்குமிங்கும் நிலை கலங்கிப் பின்னிச் சுழல்கின்றனவோ' என்று ஐயுறு கின்றான். இதனை,

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன்[1]

என்ற குறள் குறிப்பிடுகிறது.

---

1. திருக்குறள், 1116

பெண்ணின் முகம் நிலவு போன்றது என்னும் இக் கருத்தை, எல்லா இலக்கியங்களுமே பேசுகின்றன. 'அழகிய பெண்ணின் முகம்போல நிலவு கீழ்த்திசையில் தோன்றியது' எனக் கம்பனும் குறிப்பிடுவான்.

அந்தமில் கீழ்த்திசை அளக வாள்நுதல்
சுந்தரி முகமெனப் பொலிந்து தோன்றிற்றே![1]

என்பது கம்பர் வாக்கு. இராமனும், இலக்குவனும் விசுவாமித்திர முனிவரோடு மிதிலை வீதியில் நடந்து சென்ற காட்சியை மகளிர் தத்தம் வீட்டுச் சாளரங்களின் வழியே நோக்குகின்றனர். இக்காட்சி சாளரம் தோறும் சந்திரன் உதயமாகியதுபோல இருந்தது என்பார் கம்பர்.

வாளரம் பொருத வேலும்,
மன்மதன் சிலையும், வண்டின்
கேளொடு கிடந்த நீலச்
சுருளுஞ், செங்கிடையும் கொண்டு,
நீளிருங் களங்கம் நீக்கி,
நிரைமணி மாட நெற்றிச்
சாளரம் தோறும் தோன்றுஞ்
சந்திர உதயம் கண்டார்.[2]

முழு நிலவானது கூரிய அரத்தால் அராவப்பட்ட இரண்டு வேல்களையும், மன்மதனது வில்லையும், வண்டினங் களையும், நீல மணிச் சுருளையும், சிவந்த கிடை என்னும் சடையையும் தன்னிடத்தே பெற்று, தன்னிடம் நெடுங் காலமாக இருந்து வரும் பெரிய களங்கத்தை நீக்கி, மணி கள் பதித்த மாளிகையில் உச்சியிலுள்ள சாளரம் ஒவ்வொன்றிலும் தோற்றமளிக்கக் கண்டார்களாம்!

---

1. கம்பராமாயணம், ஊர் தேடு., பாடல் 53
2. கம்பராமாயணம், மிதிலைக் காட்சி, பாடல் 14

வேலைப் போன்ற கண்களும், வில் போன்ற புருவமும், வண்டுகள் இனத்தோடு பொருந்தியுள்ள நீலரத்தினச் சுருள் போன்ற கூந்தலும், செங்கிடை போன்ற அதரமும் கொண்டு முழு நிலவு தோன்றுவது போலச் சாளரங் களினூடே மங்கையர் தோற்றமளித்தனர்.

'சாளரம் தோறும் சந்திர உதயம்' என்னும் கம்பன் சொல்லோவியத்தைப் பாவேந்தர் ஒரு நிகழ்ச்சி யாகப் படம் பிடிக்கிறார். 'சன்னலைத் திறப்பாள்; அவள் திருமுகத்தைக் காண்பேன். ஒரு நொடிக்குள்ளே அந்த நிலவுமுகம் மறைந்துபோகும். மறுநாளும் அங்கே காத்திருப்பேன். சன்னல் திறக்கும்; முக நிலாத் தோன்றும்' என ஒவ்வொரு நாளும் சன்னலில் சந்திர உதயம் காணும் காதலன் ஒருவனைக் காட்டுகிறார் புரட்சிக் கவிஞர்.

தெருவறைச் சன்னல் தன்னைத்
திறப்பாள்என் வரவு பார்ப்பாள்;
திருமுகம் காண்பேன் முல்லைச்
சிரிப்பினிற் சொக்கி நிற்பேன்;
ஒருநொடி தனிலே அன்னாள்
ஒளிமுகம் மறைந்து போகும்;
அரிவையின் முகநி லாவை
அடுத்தநாள் காண்பேன் அங்கே![1]

## 7. வெள்ளி வெண்குடம்

நிலவை விண்ணில் விளங்கும் வெள்ளிக்குடம் என்பார் மணிமேகலை ஆசிரியர் கூலவாணிகன் சித்தலைச் சாத்தனார்.

1. பாரதிதாசன், பன்மணித்திரள், பக். 183

வெள்ளிவெண் குடத்துப் பால்சொரி வதுபோல்
கள்ளவிழ் பூம்பொழில் இடையிடைச் சொரிய[1]

பொழில்களின் மீது நிலவொளி பொழிவது, வெள்ளிக் குடத்திலிருந்து பாலைச் சொரிந்தது போன்றிருந்த தென்பது அவருடைய மணிவாக்கு. கம்பனும் நிலவை வெண்குடம் என்பான். வானம் எனும் வனிதை, நிலவு எனும் வெள்ளிக் குடங்கொண்டு பாற்கடலின் பாலை மொண்டெடுத்து, வானமெலாம் வழிந்தோட ஊற்று கிறாளாம்! ஊற்றும்போது சிதறித் தெறித்த பால் துளி களே விண்மீன்களாம்!

தெரிந்து ஒளிர் திங்கள் வெண்குடத் தினால், திரை
முரிந்துஉயர் பாற்கடல் முகந்து மூரிவான்
சொரிந்ததே ஆம்எனத் துள்ளும் மீனொடும்
விரிந்தது வெண்ணிலா மேலும் கீழுமே![2]

நிலவுத் தோற்றத்தை இவ்வாறு கற்பனை செய் கிறார் கவிச் செல்வர் கம்பர்.

நிலவை 'வெள்ளிக் குடம்' எனச் சாத்தனாரைப் போலக் கம்பரும் குறிப்பிடுகின்றார்.

புள்ளிக்குறி இட்டென ஒள்மீன்
பூத்த வானம் பொலிகங்குல்
நள்ளில், சிறந்த இருட்பிழம்பை
நக்கி நிமிரும் நிலாக்கற்றை,

1. மணிமேகலை, 6: 7-8
2. கம்பராமாயணம், ஊர்தேடு., பாடல் 55

கிள்ளைக் கிளவிக்கு என்னாம்கொல்?
கீழ்பால் திசையின் மிசைவைத்த
வெள்ளிக் கும்பத்து இளங்கமுகின்
பாளை போன்று விரிந்துளதால்![1]

புள்ளி இட்டதுபோல விண்மீன்கள் பூத்துக் கிடக்க, நிலவு தோன்றியதானது, கீழ்த்திசையில் வெள்ளிக் குடத்தில் கமுகின் வெண்பாளையைச் செருகி வைத்தது போல இருந்ததெனும் அருமையான உவமையைக் கம்பர் கையாள்கிறார். நிலவு - வெள்ளிக்குடம்; விண்மீன் கூட்டம் - கமுகின் பாளை.

## 8. ஆடையில் மறைந்த அழகுநிலா

நிலவை முகமாகவும், வெள்ளிக் குடமாகவும் உவமித்த திறம் கண்டோம்! அந்நிலவை மூடும் முகிலை, முகத்தை மூடும் திரையாகக் கற்பனை செய்துள்ளார் கம்பர். முகத்தை மூடியிருந்த திரைச் சீலையைத் திறந்த அளவிலே அரங்கில் நடனமாடும் மங்கையின் முகம் அழகுறத் தோற்றமளிப்பதுபோல, நிலவை மூடியிருந்த முகில் விலகிச் சென்றதும் பால்நிலா பளிச்சிடுகிறது.

கடம்திறந்து எழுகளிறு அனைய கார்முகில்
இடம்திறந்து ஏகலின் பொலிந்தது இந்துவும்—
நடம்திறன் நவில்வுறு நங்கை மார்முகம்
படம்திறந்து உருவலின் பொலியும் பான்மைபோல்[2]!

நிலவுமங்கையை மூடியுள்ள மேக ஆடை பற்றிப் பாரதியும் பாடுகிறான். வானக் குளத்தில் மலர்ந்து நிற்கும் வெண்தாமரையாக விளங்குகிறது வெண்ணிலா!

---

1. கம்பராமாயணம், மிதிலைக் காட்சி; பாடல் 72
2. கம்பராமாயணம், கார்காலப்., 109

அதனை மேகம் மூடி மறைக்கிறது. தன்னை மறைக்கும் அந்த மேகத்திற்கு அழகைக் கூட்டுகிறது நிலா! ஓகோ! தீது புரிந்திட வருபவர்க்கும் நன்மை செய்வதுதான் மேலவர் சிறப்போ?

"யவனப் பெண்கள் மெல்லிய ஆடையால் தங்கள் உடலை மூடும்போது, அவர்கள் மேனி முன்னிலும் அழகாகத் தோற்றம் செய்யும்! அது போலல்லவா நீயும் மெல்லிய வெண்மேகத் திரைக்குள் கொள்ளை அழகைக் காட்டி நிற்கிறாய்; என்னே அழகு!" என நிலவைப் பார்த்துப் பாராட்டுகிறார் பாரதியார்.

மெல்லிய மேகத் திரைக்குள் மறைந்திடும்
வெண்ணிலாவே!—உன்றன்
மேனியழகு மிகைபடக் காணுது
வெண்ணிலாவே!—
நல்லியலார் யவனத்தியற் மேனியை
வெண்ணிலாவே—மூடு
நற்றிரை மேனி நயமிகக் காட்டிடும்
வெண்ணிலாவே![1]

இவ்வாறு கவிஞர் பாராட்டிக் கொண்டிருக்கும் வேளையில் வெளிச்சத்தை மறைக்கின்ற ஒரு கரிய இருண்ட மேகக் கூட்டத்துள் நிலா மறைந்துவிட்டது. "நிலவே! உன் அழகைப் பாராட்டியதால் உனக்கு நாணமோ? அதனால் உன் அழகு முகம் முழுவதையும் மறைத்துக் கொண்டாயோ? இச் சிறியேன் செய்த பிழையைப் பொறுத்துக்கொள்! திரையை நீக்கி நின் எழில் முகத்தைக் காட்டி இருளைப் போக்கி எங்கட்கு இன்பமூட்டு" என நிலவை வேண்டுகிறார்.

1. பாரதியார் கவிதைகள் (பூம்புகார் பிரசுரம்) பக். 172

சொல்லிய வார்த்தையில் நாணுற்றனை போலும்
வெண்ணிலாவே!—நின்
சோதி வதனம் முழுதும் மறைத்தனை
வெண்ணிலாவே!
புல்லியன் செய்த பிழைபொறுத் தேயருள்
வெண்ணிலாவே!—இருள்
போகிடச் செய்து நினதெழில் காட்டுதி
வெண்ணிலாவே![1]

நிலவை முகமென்றும், வெள்ளிக்குடம் என்றும் புலவர்கள் சொல்லியிருப்பதைக் கண்டோம்! கம்பர் நிலவைப் பெண் முகமாக்கி, மேகத்தை அம் முகத்தின் மீது போர்த்தப்பட்ட ஆடையாக்கி வருணித்தார். பாரதி வெண்மேகத்தை நிலவை மூடும் மெல்லிய ஆடையாகவும், கருமேகத்தை உடலை வெளிப்படுத்தாது முற்றிலும் மறைக்கும் கெட்டியான ஆடையாகவும் கண்டார். வழிவழியாக வரும் இந்தக் கருத்துக்கு மேலும் அழகியதொரு வடிவம் கொடுக்கிறார் பாவேந்தர் பாரதிதாசன். கம்பன் நிலவைத் திரை நீக்கப் பட்ட மங்கை முகம் என்றான். பாரதிதாசனோ வானையே ஆடையாக்கி, நிலாப் பெண்ணாள் தன் உடல் முழுதும் போர்த்துக்கொண்டு முகத்தை மட்டும் காட்டுகிறாள் என்பார். நீல நிறமான ஆடைக்குள் தன் கோல உடல் முழுதும் மறைத்துக்கொண்டு, முகத்தை மட்டும் காட்டுகிறாளாம் அந்தக் கட்டழகி! முகத்தழகிலேயே உலகம் சொக்கி மயங்குகிறதே! தன் எழிற்கோலம் அனைத்தையும் காட்டினால் இவ்வுலகம் காதல் வெறியேறிக் கணப்பொழுதில் அழிந்துவிடுமே என்னும் கருணையினால்தான் அவள் உடல் முழுவதையும் மூடிக்கொண்டாளாம்! கவிஞர் நிலவை நெஞ்சு

1. பாரதியார் கவிதைகள் (பூம்புகார் பிரசுரம்), பக். 172

குளிரப் பாராட்டுவதை அவர் சொற்களிலேயே காண்போம்!

நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளிமு கத்தை!
கோலமுழுதும் காட்டி விட்டால் காதற்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்?
சொக்கவெள்ளிப் பாற்குடமோ? அமுத ஊற்றோ?
காலைவந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பி ழம்போ![1]

இப்பாடல் கம்பனுடைய 'வெள்ளிக் கும்பத்து இளங்கமுகின் பாளை போன்று விரிந்துளதால்', 'நடம்திறன் நவில்வுறு நங்கைமார் முகம் படந்திறந்து உருவலின் பொலியும் பான்மைபோல்' எனும் அடிகளினுடைய விளக்கமாக அமைந்திருந்தாலும் இன்னும் ஒரு படி மேலே போய் 'காலையில் தோன்றிய கதிரவன் தான் கடலில் மூழ்கி, நீராடி, தன் கனலையெல்லாம் உதிர்த்து விட்டு, குளுமை பெற்று ஒளிப்பிழம்பாய் உருக்கொண்டு வந்தானோ' எனச் செய்துள்ள கற்பனையை எண்ணியெண்ணி வியக்காமல் இருக்க முடியாது!

கம்பன் காப்பியப் புலவன். இயற்கையைக் காப்பிய நிகழ்ச்சிகளோடு ஒன்றுபடுத்தி அறிவுரை கூறுவான். அறம் தழைத்து வளர்ந்த தோற்றத்தைப்போல வெண்ணிலவு விண்ணில் செழித்து வளர்ந்தது என்பான்.

"அறம் முளைத்தென முளைத்தது இந்துவே"[2]

---

1. பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 1, பக். 20
2. கம்பராமாயணம், ஊர்தேடு. பாடல் 52

பாரதிதாசன் இன்றைய சமுதாய அவலங்களைக் களையப் பாடிய புலவன். ஆதலால் நிலவைப் பாடும் வகையில் சமுதாயம் பற்றிய அருமையான படப் பிடிப்பையும் காட்டிவிடுகின்றார்.

"நிலவே! உன்னைக் காணும்பொழுது என் உள்ளத்தில் பெருக்கெடுக்கும் உணர்ச்சிகளை எழுது தற்குச் சொற்கள் எனக்குக் கிடைக்கவில்லையே! உன்னைப் பார்க்கும்போது ஏற்படும் இன்பத்திற்கு எதை உவமை சொல்வேன்? இரவு பகலெனப் பாராது பாடுபட்டு உழைத்தும் சிறிது பயனும் பெறாத ஏழைமக்கள் பசியை போக்கிக்கொள்ள, பானைக்குள் சிறிதளவு கூழாவது இருக்காதா எனக் கைவிட்டுத் துழாவ முற்படுகையில், அப் பானை நிறைய வெண்பொங்கல் இருக்குமானால் அவ்வேழை மக்கள் எத்தகைய இன்பப் பெருக்கை அடைவார்களோ அந்த உவகைப் பெருக்கையல்லவா நான் உன்னைக் காணும்போது அடைகின்றேன்" என நிலவைக் காணும் கொள்ளை இன்பத்தில் தம் கொள்கை விளக்கக் குறிப்பையும் தந்துவிடுகிறார் பாரதிதாசனார்!

உனைக்காணும் போதினிலே என்னு ளத்தில்
ஊறிவரும் உணர்ச்சியினை எழுது தற்கு
நினைத்தாலும் வார்த்தைகிடைத் திடுவ தில்லை;
நித்திய தரித்திரராய் உழைத் துழைத்துத்
தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறிதுகூழ் தேடுங்கால் பானை ஆரக்
கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்
கவின்நிலவே உனைக்காணும் இன்பம் தானோ![1]

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 20

நிலாத்தோற்றம் தரும் உணர்ச்சியினை எழுதுதற்குப் புலவன் வார்த்தைகள் கிடைக்காது தடுமாறுவதுபோல, இப்பாடலின் அழகைச் சொல்லுதற்கு வார்த்தைகள் கிடைக்காது நாமும் திண்டாடத்தான் செய்கிறோம்!

## 9. கடைக் கண் பார்வை

காதலின் ஆற்றலைக் கம்பனும், பாரதிதாசனும் ஒன்றுபோலவே கூறுகின்றனர். சீதையைப் புனைவு செய்து மண மண்டபத்திற்கு அழைத்து வந்தனர். அவள் அழகைக் கண்ட விசுவாமித்திரன் "இவள் காதலைப் பெற இராமன் மேருமலை போன்றதான இந்த ஒரு வில்லை மட்டுமா? ஏழு மலைகளேயானாலும் ஒருசேர முறித்துவிட மாட்டானா!" என நினைந்து வியக்கிறான்.

அச்சென நினைத்தமுதல் அந்தணன் நினைந்தான்:
பச்சைமலை ஒத்த படிவத்து, அடல் இராமன்
நச்சுடை வடிக்கண்மலர் நங்கை இவள்என்றால்,
இச்சிலை கிடக்க! மலை ஏழையும் இறானோ?[1]

இந்த ஒரு வில்லை மட்டுமா ஏழு மலைகளே என்றாலும் முறிக்கச் செய்துவிடுமே இவளுடைய கண்பார்வை. கம்பன் சொன்னவாறே காதற் பார்வையைப் பாரதி தாசனும் பாடுகின்றார்.

கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்
மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர்கடுகாம்![2]

---

1. கம்பராமாயணம், கோலங்காண்., பாடல் 36
2. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 4

பாரதியும் கூட,

நூற்றி ரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணி டைப்பெண் ஒருத்தி பணியிலே!

காற்றி லேறியவ் விண்ணையும் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே[1]

என்பான்.

"காதல் தோன்றுதற்கு முதலாக நிற்பவை இரண்டு ஒன்று நோக்கம் அல்லது காட்சி. மற்றொன்று உள்ளம். காட்சியும் உள்ளமும் கலந்து பெற்றெடுக்கும் குழந்தையே காதல்"[2] காதலர்கள் ஒருவரையொருவர் காணுகின்றனர். ஒருவரையொருவர் விரும்பினாலும் நேரே பார்ப்பதற்குப் பெண்ணுக்கு ஒருவகை நாணம்; ஆணுக்கு ஒருவகைத் தயக்கம். நேரே உற்றுப் பார்ப்பது காதல் அன்று - வெறித்தனம். ஒருவர் பார்க்கும்போது மற்றொருவர் நேரே பார்க்கக் கூச்சமடைகின்ற தன்மை, கண்டும் காணாததுபோன்று இருத்தல் - இவையெல்லாம் காதலின் மேன்மைக்கு - மென்மைக்கு அடையாளங்கள்.

தயரதன் மிதிலையை அடைந்ததும், மருமகள் சீதையைக் காண விழைந்தான். அவளை அழைத்து வருமாறு வசிட்ட முனிவர் சனகரிடம் கூறினார். தோழியர் சீதையை அலங்கரித்து அழைத்து வந்தனர். வந்த அவள் அழகைக் கண்டு வசிட்டர், தயரதன் முதலியோர் மகிழ்ந்தனர். தயரதனையும் முனிவரையும் வணங்கிச் சீதை தன் தந்தையருகில் அமர்ந்தாள். முன்னர் இராமன் விசுவாமித்திர முனிவரோடு மிதிலை

1. பாரதியார் பாடல்கள் (பூம்புகார் பிரசுரம்) பக். 210
2. ந. இராமநாதன், கவிஞரும் காதலும், பக். 56

வீதியிற் சென்றபோது சீதை அவனது வடிவழகைக் கண்டு அவனை இன்னானென்று அறியாமலே காதல் கொண்டாள். பின்னர் வீரம் மிக்க அரச குமரன் ஒருவன் வில்லை எடுத்து வளைத்து முறித்தான் என்பது அவளுக்குச் சொல்லப்பட்டது. அவ் வீரன், தான் முன்னர்க் கண்டவனேயாதல் வேண்டுமென ஊகித் தறிந்தாள். இப்போது மண்டபத்தே வீற்றிருக்கிறாள். அருகிலேயே அவனும் இருக்கிறான். தான் முன்னர்ப் பார்த்த அவன்தானா இவன் என அறிய ஓர் துடிப்பு. நேரடியாகப் பார்க்க நாணம் இடந்தரவில்லை. எப்படி யாவது கண்டாக வேண்டுமே! தன் கை வளையல்களைத் திருத்துபவள் போல் குனிந்து, கடைக்கண்ணாலே எதிரிலிருந்த இராமனைப் பார்த்து அறிந்தாளாம்!

எய்யவில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்,
மெய்விளைவு இடத்து முதல்ஐயம் விடல்உற்றாள்;
ஐயனை அகத்தும் வடிவே அல, புறத்தும்
கைவளை திருத்துபு, கடைக்கணின் உணர்ந்தாள்![1]

அகத்தே இதுவரை இருந்த வடிவம்தான் இங்கே புறத்தேயுமிருந்தது என்பதை அறிந்த அவள் மகிழ்ச்சிக்கு எல்லையுமுண்டோ?

காதல் கொண்ட ஆண், பெண் இரு சாராரிடமும் நேரடியாகப் பார்க்க முடியாத - ஓரப் பார்வை பார்க்கின்ற தன்மையைப் பாரதிதாசனும் அரிய ஓவிய மாகத் தீட்டிக் காட்டுகிறார். சொர்ணம் ஓர் இளம் பெண். எதிர் வீட்டில் சுந்தரம் என்ற இளைஞன். நாள் தோறும் சொர்ணம் சுந்தரத்தின் வீட்டிற்கு வந்து, அவள் தாயிடம் கொஞ்ச நேரம் பேசிச் செல்வது வாடிக்கை.

---

1. கம்பராமாயணம், கோலங்காண், பாடல் 73

ஒரு நாள் சுந்தரத்தின் தாய் கடைக்குப் பட்டெடுக்கச் சென்றுவிட்டாள். சுந்தரம் மட்டும் வீட்டில் படித்திருந்தான். வழக்கம்போல வந்த சொர்ணம், சுந்தரத்தின் வீட்டில் அவள் தாய் இல்லாததால், பாடம் படித்திருந்த அவனைக் காண்கிறாள். இந்த இடத்தைப் பாரதிதாசன் மிக அழகாகப் பாடுகிறார்.

கூடத்திலே மனப் பாடத்தி லே—விழி
கூடிக் கிடந்திடும் ஆணழகை,
ஓடைக் குளிர்மலர்ப் பார்வையினால்—அவள்
உண்ணத் தலைப்படும் நேரத்திலே,
பாடம் படித்து நிமிர்ந்தவிழி—தனில்
பட்டுத் தெரித்தது மானின்விழி!
ஆடை திருத்தி நின்றாள் அவள்தான்—இவன்
ஆயிரம் ஏடு திருப்புகின்றான்.[1]

சுந்தரனைத் தனித்துக் கண்ட நாணம் சொர்ணத்திற்கு. அத்தோடு கூச்சமும் கலந்து அவள் காதலை மிகுவிக்கிறது. அந்த ஆணழகனை ஆர்வத்தோடு பார்க்கிறாள். ஆணழகைப் பார்வையினாலே உண்டனள் என்கிறார் கவிஞர். அவன் பாடம் படித்துக் கொண்டிருக்கிறான். அவன் பார்க்காததால் அவள் பார்க்கிறாள்.

பாடம் படித்தவன் நிமிர்ந்தான். எதிரே சொர்ணம் நிற்பதைக் கண்டான். தான் பார்த்ததை அவன் கண்டு விட்டானே என்ற நாணம் அவளை ஆட்கொண்டது. நெகிழ்ந்த ஆடையைத் திருத்தி நிற்பவள்போல, கண் பார்வையைக் கீழே செலுத்தி நின்றாள்.

திடீரென எதிரிலே சொர்ணத்தைக் கண்ட சுந்தரனுக்கும் ஒரு வகையான படபடப்பு. சொர்ணம்

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 72

தன்னைப் பார்த்து நின்றதை உணர்ந்த அவனுக்கு ஒரு கிறக்கம்; நேரடியாக அவளைப் பார்க்கக் கூச்சம்; அவன் உள்ளத்தின் வேகம் கைகளிலே வெளிப்படுகிறது. படிப்பவன் ஒவ்வொரு பக்கமாக நிறுத்தி நிதானித்து அல்லவா படிக்க வேண்டும்? சொர்ணம் அருகிலே நிற்பதை உணர்ந்ததும் பாடத்தில் அவன் மனம் செல்ல வில்லை. வேகவேகமாகப் பக்கங்களைப் புரட்டிக் கொண்டேயிருக்கிறான். 'ஆயிரம் ஏடு திருப்பு கின்றான்'—அடடா! என்ன அவசரம்? என்ன செய்வது என்று தெரியாத தவிப்பு ஏடுகளைப் புரட்டுகின்ற வேகத்தில் புலப்படுகின்றது. கம்பன் பெண்ணின் நாணத்தை மட்டும் கைவளை திருத்துகின்ற கள்ளப் பார்வையில் காட்டினார். பாரதிதாசனோ ஆடை திருத்தும் நிலையிலும், ஆயிரம் ஏடு திருப்பும் கையிலுமாக ஆண், பெண் ஆகிய இருவரின் கூச்சத்தை யும் ஒருசேரக் காட்டித் தன் புலமை நலனையும், உலகியலோடு ஒத்துக் கவி புனையும் பாங்கையும் உணர்த்திவிடுகிறார்.

'எதிர்பாராத முத்தம்' என்னும் நூலிலும் இப்படி யொரு காட்சியைப் பாரதிதாசன் நமக்குக் காட்டு கிறார். பூங்கோதை குளத்திலே சென்று குளித்துத் தண்ணீர்க் குடத்தோடு வருகிறாள். அவளுடைய அத்தான் பொன்முடி எதிரிலே வரக் காண்கிறாள். சென்ற ஆண்டு வரைக்கும் இருவரும் ஒன்றாகவே பழகி வந்தவர்கள். இடையே இரு குடும்பத்தாருக்கும் பகை ஏற்பட்டதால் கடந்த ஓராண்டாகவே ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்ளவேயில்லை. இப்போது ஒருவரையொருவர் காண நேர்ந்தபோது காதலுள்ளம் களிகொள்கிறது; எப்படிப் பார்ப்பது என்ற கூச்சம்!

ஒன்றுமே தோன்றவில்லை; நிமிர்ந்தே அன்னோன்
ஒளிமுகத்தைப் பார்த்திடுவாள்; குனிந்து கொள்வாள்!
சின்னவிழி ஒளிபெருகும்! இதழ்சி ரிக்கும்;
திருத்தமுள்ள ஆடைதனைத் திருத்திக் கொள்வாள்![1]

இது பூங்கோதை நிலை. பொன்முடியின் நிலை என்ன?

பொன்முடியோ முகம்நிமிர்ந்து வானி லுள்ள
புதுமையெலாம் காண்பவன்போல் பூங்கோ தைதன்
இன்பமுகம் தனைச் சுவைப்பான் கீழ்க்கண்ணாலே![2]

திருமணம். மணமக்கள் மாலை மாற்றிக்கொள்கின்றனர். அவன் அவளுக்கு மாலை சூட்டிக் குறுநகை புரிகின்றான். அவளோ, மாலை சூட்டியதும் கீழ்க் கண்ணால் நோக்குகின்றாள்.

மேற்றோளில் மாலை சூட்டிக்
    கீழ்க்கண்ணால் நோக்கி னாள்பெண்!
கோற்றோளில் மாலை சூட்டிக்
    குறுநகை புரிந்தான் ஆளன்!
ஆற்றோரப் புனல்இ ருந்தும்,
    அவாமிக இருந்தும், இன்றும்
நேற்றுப்போல் இருந்தோம் என்று
    நினைந்தன இருநெஞ் சங்கள்[3]

முன்னிரண்டு அடிகளில் வெளிநிகழ்ச்சிகள்; பின்னிரண்டு அடிகளில் உள்ளங்களின் ஏக்கம். சங்க இலக்கியக் காதல் மரபைக் கம்பன் பேணிப் பெருமை செய்து எழுதினான்.

1. பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், பக். 10
2. மேலது. பக். 10
3. பாரதிதாசன், பன்மணித்திரள், பக். 246

'அச்சமும் நாணமும் யாருக்கு வேண்டும்?' என்னும் இப் புதுமைக் காலத்திலும் பழைய மரபு மாறாது படைக்கின்ற பாரதிதாசனை இங்கே காண்கிறோம்.

## 10. பிரிவுத் துயர்

காதலனைப் பிரிந்துள்ள காதலிக்கு நிலவு சுடும், தென்றல் அனலாய்க் கொதிக்கும். பால் புளிக்கும் தண்மையுள்ள பொருள்களை மேலே பூசினாலும் அவை வெம்மையால் அவர்களைத் தகிக்கும்.

தென்ற லான புலி
வந்து கோபமொடு சீறுதே!
தடு மாறுதே!
இதழ் ஊறுதே!—மெத்தத்
தீமையாம் இருளில்
காமலாகிரியும் மீறுதே!
வள்ளம் மேவும்பசும்
பாலும் தேனும்அரு வருக்குதே!
கசந் திருக்குதே!
துன்பம் பெருக்குதே![1]

என்பார் காவடிச் சிந்து பாடியுள்ள அண்ணாமலை ரெட்டியார்.

உணவு செல்லவில்லை—சகியே
உறக்கம் கொள்ள வில்லை
மணம் விரும்பவில்லை—சகியே
மலர் பிடிக்க வில்லை...
பாலுங் கசந்ததடீ—சகியே
படுக்கை நொந்த தடீ
கோலக் கிளிமொழியும்—காதில்
குத்தல் எடுத்த தடீ![2]

---

1. அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்து, பாடல் 14
2. பாரதியார் பாடல்கள (பூம்புகார் பிரசுரம்), பக். 295

எனக் காதலனைப் பிரிந்த காதலி பாடுவதாகப் பாரதியார் கண்ணன் பாட்டில் எழுதுகிறார். இக்கூற்று பண்டு தொட்டு இலக்கியங்களில் பயின்றுவருவது.

சீதை, கன்னி மாடத்தின் மேலிருந்து வீதியிற் சென்ற இராமனைக் கண்டாள்; பெருங் காதல் கொண்டாள். கண்ணிலிருந்து இராமன் மறைந்து விட்டான். சீதை விரகதாபம் கொண்டாள். தோழியர் அவளுக்குச் சந்தனம் பூசுகின்றனர். பூசிய குளிர்ந்த சந்தனம், அவள் மேனி வெப்பத்தால் உடனேயே புலர்ந்து பொடியாகிறது.

வாசமென் கலவைக் களிவாரி மேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினாள்.[1]

திரிகூடராசப்பக் கவிராயரும் திருக்குற்றாலக் குறவஞ்சியில் இக்கருத்தைக் கூறுவார். திருக்குற்றால ரிடம் மையலால் வசந்தவல்லி உடல் சோர்ந்தாள். தோழியர் அவள் உடல் குளிர்ச்சிக்காகச் சந்தனக் குழம்பைப் பூசினர். அச் செயல் அவளுடைய விரகத் தீயை மூட்டி மூட்டி விசிறி வீசுவது போன்றதாயிற்று.

முருகு சந்தனக் குழம்பு பூசுவார் விரகத்தீயை
மூட்டி மூட்டி விசிறி வீசுவார்.[2]

இக் காதல் அவத்தையை அழகியதொரு வெண்பாவிலே பாரதிதாசன் எழுதிக் காட்டுகிறார்.

---

1. கம்பராமாயணம், மிதிலைக்காட்சி, பாடல் 80
2. திருக்குற்றாலக் குறவஞ்சி, பாடல் 21

பாலும் புளிக்கும் நறும்பண்ணியங்கள் வேப்பங்காய்
தோலும் எரியவைக்கும் தோய்கலவை—மேலும்
அலவனார் ஆர்கலியும் கொல்லும், என் காதற்
புலவனார் வாராத போது![1]

தலைவனைப் பிரிந்த தலைவிக்குப் பால் புளிக்கிறது; பண்ணியங்கள் கசக்கின்றன; சந்தனம் தகிக்கிறது; கடலோசையோ உயிரையெடுக்கிறது! என் செய்வாள் பாவம்! காதலன் அருகிருந்தால் அவளுக்கு இவை யெல்லாம் அமுதும் தேனுமாக அல்லவா இனிக்கும்?

கலவைக்களி பூசப் பூசப் புலர்கிறது கம்பன் பாடலில். தோய் கலவை தோலை எரியவைக்கிறது பாரதி தாசனின் பாடலில்.

சீதை அசோக வனத்தில் சிறையிருந்தாள். புலிக் கூட்டத்தினிடையே சிக்குண்ட மான்போல அரக்கியர் கூட்டத்திடையே அவள் அகப்பட்டிருந்தாள். அவள் கண்கள் தூங்குவதை மறந்தன. வெயிலிடை வைத்த விளக்கென மேனி ஒளியிழந்தது. வருத்த மிகுதியால் விழுவாள்; விம்முவாள்; வெதும்புவாள்; வெருவுவாள்; எழுவாள்; ஏங்குவாள்; இரங்குவாள்; இராமனை நினைந்து தொழுவாள்; சோர்வாள்; துளங்குவாள்; துயரப் பெருமூச்சு விடுவாள்; அழுவாள்—இவை தவிர வேறு எதையுமே செய்ய அறியாதவள் ஆயினாள்.

விழுதல், விம்முதல், மெய்யுற வெதும்புதல், வெருவல்,
எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித்

1. பாரதிதாசன், காதல்பாடல்கள், பக். 117

தொழுதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து
உயிர்த்தல்,
அழுதல் அன்றி, மற்று அயல்ஒன்றும் செய்குவது
அறியாள்.[1]

எழுந்து, தள்ளாடி, விழுகின்ற இந்நிலைக்குப் பாரதிதாசன் அழகியதோர் உவமையைத் தருகிறார். பிரிந்து சென்ற அத்தான் பொன்முடியை எண்ணிப் பூங்கோதை என்பாள் தவிக்கிறாள். அவனை நினைந்து எழுவாள்; நடையோடாது தள்ளாடுவாள்; பின் இரண்டொரு எட்டுகள் எடுத்தூன்றுவாள்; தளர்ந்து விழுவாள்; மீட்டும் எழுவாள்—இவ்வாறு அப்பொழுது தான் பிறந்த மான்குட்டியின் நடையாயிற்று அவள் நிலை.

தாய்வயிற்றி னின்றுவந்த மானின் கன்று
தள்ளாடும்; விழும்; எழும்; பின் நிற்கும்; சாயும்;
தூய்வனசப் பூங்கோதை அவ்வா றானாள்![2]

தலைவனை எண்ணி ஏங்கியிருக்கும் தலைவியின் நிலையை விளக்க மற்றோர் அருமையான உவமையையும் பாவேந்தர் பயன்படுத்தியுள்ளார். படுக்கையில் சாய்ந்திருக்கும் தலைவி எழுவாள்; என்ன செய்வது என்று தெரியாது உடனே விழுவாள்; மீண்டும் எழுவாள்; பின் சாய்வாள். இவ்வாறு இடைவிடாது எழுந்தும் விழுந்தும் இருந்த அவள் 'தஞ்சாவூர்ப் பொம்மையானாள்' என்கிறார் கவிஞர்.

சாய்வாள்போய்ப் பஞ்சணையில்; எழுவாள், பின்னும்
தலைதாழ்த்தி இதற்கென்ன செய்வேன் என்று

1. கம்பராமாயணம், காட்சிப் படலம்., பாடல் 5
2. பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், பக். 45

பாய்வாள்போய்ப் பஞ்சணையில்; எழுவாள்; வீழ்ந்து
பதைப்பாள், பின் தஞ்சாவூர்ப் பாவை யானாள்![1]

தலைவிக்கோ தாங்கமுடியாத் துயரம்! நமக்கோ கவிஞரின் உவமை கண்டு எல்லையிலா மகிழ்ச்சி!

காதலன் காதலி பிரிவு, இலக்கியங்களில் பெருமளவு பேசப்படுகிறது. தலைவன் தன்னை விட்டுப் பிரிவதைத் தலைவியால் தாங்கொணாது. 'அவர் செல்கிறாரா - செல்லட்டும். அவர் வந்த பிறகு தன் வருகையை அப்போது வாழ்ந்து கொண்டிருப்பவரிடம் சொல்லட்டும்' என ஒரு தலைவி சொல்வதைத் திருக்குறள் குறிப்பிடும்.[2] தலைவன் பிரிந்தால் தன்னால் உயிர்வாழ முடியாது என்பதை அத்தலைவி நயமாகச் சொல்கிறாள்! இல்லறம் நடத்த, விருந்ினரை ஓம்ப, பொருள் வேண்டுமல்லவா? அப்பொருளைச் சேர்த்ததும் விரைவில் வருவேன் என்ற தலைவனிடம் "சென்றோர் முகந்துகொண்டுவர - அதாவதுபோன உடனே திரும்ப, அங்குப் பொருள் என்ன கொட்டியா கிடக்கிறது? பொருள் இல்லாததனால் யாரும் இறந்து போய்விடவும் மாட்டார்கள். பொருள் இல்லாத ஏழைகளாக - ஒரே ஆடையைக் கிழித்து இருவருமாக உடுத்திக்கொள்கின்ற ஏழ்மை நிலை இருந்தாலும் காதலனும், காதலியும் இணைந்து வாழ்கின்ற வாழ்க்கையே உண்மையான வாழ்க்கையாகும். பொருளை எப்போது வேண்டுமானாலும் தேடிக்கொள்ளலாம். இளமை போனால் போனது தான் - திரும்பப் பெறமுடியாது. இளமை இன்பம் துய்ப்பதே இல்லறப் பயன். ஆதலின் பொருள்வயிற்

1. பாரதிதாசன், குறிஞ்சித் திட்டு, பக். 49
2. திருக்குறள் 1151

பிரிவு கூடாது" எனக் கலித்தொகைத் தலைவி ஒருத்தி பேசிடக் காணலாம்.

சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது:
ஒழிந்தவர் எல்லாரும் உண்ணாதும் செல்லார்;
ஒரோஒகை தம்முள் தழீஇ ஒரோஒகை
ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை; அரிதரோ
சென்ற இளமை தரற்கு.[1]

பிரிவுத் துன்பத்தைப் பாடாத இலக்கியம் எதுவுமே இராது என்னலாம். பிரிவின் கொடுமையைச் சீதையின் உரை வாயிலாகக் கம்பர் வெளிப்படுத்துவார். கைகேயி சொன்னதும் காடேக இருந்த இராமன் சீதையைக் கண்டு "என் தம்பி பரதன் நாடு ஆள்வான். நான் என் தாய் தந்தையர் கட்டளையை ஏற்றுக் காட்டுக்குப் போய் வந்திடுவேன்; நீ வருந்தற்க" என்றான்.

பொரு இல் எம்பி புவிபுரப் பான்; புகழ்
இருவர் ஆணையும் ஏந்தினென்; இன்றுபோய்
கருவிமா மழைக்கல், கடம் கண்டு நான்
வருவென் ஈண்டு; வருந்தலை நீ என்றான்.[2]

சீதை வருந்தாதிருத்தற் பொருட்டு ஏதோ இன்றுபோய் நாளை வந்துவிடுபவன் போல இராமன் பேசினான். கணவன் அரசை இழந்தான் என்பதற்கோ, கானகம் செல்கிறான் என்பதற்கோ சீதை வருந்தவில்லை. 'நீ வருந்தலை நீங்குவென் யான்' என்ற தொடர் அவள் செவியைச் சுட்டது. 'என்னையா இருக்கச் சொல்கிறீர்

1. கலித்தொகை, பாலைக்கலி, 17
2. கம்பராமாயணம், நகர் நீங்கு. பாடல் 217

கள்' என்று சொல்லிச் சொல்லி விம்மினாள். இராமன் 'கானகத்தின் வெம்மையை உன் கால்கள் தாங்கா' என்றான். சீதையோ 'பரிவில்லாமல் பேசுகின்றீர்களே! வெப்பத்தால் சூரியன் எரிப்பான் என்பதும் ஒரு பேச்சா? உங்களைப் பிரிந்திருக்கும் கொடுமையைவிடவா அந்தக் காடு சுட்டுவிடும்?' எனக் கேட்டாள்.

பரிவு இகந்த மனத்துஒரு பற்று இலாது
ஒருவு கின்றனை; ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது? ஈண்டு, நின்
பிரிவினும் சுடுமோ பெருங்காடு என்றாள்.[1]

'பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்பது இராமாயணத்தின் உயிர்ப்புள்ள தொடர்களுள் ஒன்று. பிரிவின் கொடுமையை அறிவிக்கின்ற அரிய தொடர்.

பிரிவுத் துயர் பற்றிப் பாரதிதாசனும் பாடுகிறார். கணவனைப் பிரிந்த மனைவியின் நிலை என்ன என்பதை நெஞ்சம் கொள்ளை கொள்ளும் வகையில் பாடுகிறார். வேலன் என்பான் மனைவியைப் பிரிந்து சென்றவன்; சின்னாட்கள் கழித்துத் திரும்பிய அவன், வீடடைந்ததும் ஏதும் பேசாமல், தெருக் கதவில் தன் இரண்டு விரல்களை மட்டும் ஊன்றினான். தட்டவில்லை; தொட்டான்; அவ்வளவுதான். உள்ளேயிருந்து 'திறந்தேன்' என்ற சொல் வரக் கேட்டான். என்ன விந்தை? மரக்கதவும் பேசுமோ? என்று அவன் வியந்து நிற்கையிலேயே தாழ்ப்பாளைத் திறக்கும் சின்ன ஒலியைக் கேட்டதுடன் அதே வேளை தன் மனைவியின் கை தாவி வருவதையும் கண்டான். கதவைத் திறந்தவுடன் 'என்னேடி! தட்டும் முன்னர் தாழ் திறந்துவிட்டாயே!

1. கம்பராமாயணம், நகர் நீங்கு., 222

வியப்பாக அல்லவா இருக்கிறது? என்றான். அவளோ நான் உங்களை விட்டுப் பிரியாதிருந்தவள் இப்போது பிரிந்து சென்றீர்கள்! நீங்கள் பிரிந்ததும் நானே இந்தக் கதவாக அல்லவா நின்று கொண்டிருந்தேன்? என்றாள்.

காதல் தூத்தக் கடிதுவந்த வேல்முருகன்
ஏதும் உரையாமல் இருவிரலை வீட்டுத்
தெருக்கதவில் ஊன்றினான்; 'திறந்தேன்'
என்றோர்சொல்
வரக்கேட்டான்; ஆ ஆ! மரக்கதவும் பேசுமோ?
என்ன புதுமை எனஏங்க, மறுநொடியில்
சின்னக் கதவு திறந்த ஒலியோடு
தன்னருமைக் காதலியின் தாவுமலர்க் கைநுகர்ந்தான்!
புன்முறுவல் கண்டுள்ளம் பூரித்தான்; 'என்னேடி
தட்டும்முன்பு தாழ்திறந்து விட்டாயே' என்றுரைத்தான்;
விட்டுப் பிரியாதார் மேவுமொரு பெண்நான்
பிரிந்தார் வரும்வரைக்கும் பேதை, தெருவிற்
கருமரத்தாற் செய்த கதவு.'[1]

பிரிவுத் துன்பத்திலும் பெரிய துன்பம் வேறெதுவும் இல்லை என்பார் கம்பர். தலைவன் பிரிந்த நிலையில் அவன் வரவை எதிர்பார்த்து, தலைவி வீட்டு வாயிற் கதவாகவே ஆகிவிடுகிறாள் என்கிறார் பாரதிதாசன். உணர்ச்சிகளைப் பாடுவதில் ஒருவரையொருவர் விஞ்சு கின்ற நிலையை இங்குக் காண்கிறோம்.

## 11. கொப்புளம் பொடித்த வானம்

நிலவொளி கூடிய காதலர்க்குக் குளிர்ப் பொய்கை. பிரிந்தவர்க்கோ அது கொதிக்கும் நெய்க்கலம். புகார் நகரில் மதி தோன்றியது. அம் மதி அரசனின் வெண்

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 2, பாடல் 22

கொற்றக் குடையை ஒத்திருந்ததாம்! அரசனின் குடை அண்டியவர்களை ஆதரிக்கும், விலகிச் சென்றவர்களை வருத்தும். மதியும் அவ்வாறே! காதலரோடு கூடியிருப் போர்க்கு மகிழ்வையும் பிரிந்திருப்போர்க்குத் துயரையும் உண்டாக்கும். கோவலனோடு கூடியிருந்த மாதவிக்கு நிலா குளிர்ச்சி தந்தது; பிரிந்திருந்த கண்ணகிக்கோ துயரைச் சேர்த்தது. சிலப்பதிகாரம் அந்திமாலை சிறப்புசெய் காதையின் இறுதியிலுள்ள வெண்பா இவ்வாறு கூறுகிறது.

கூடினார் பால், நிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்க்
காவலன் வெண்குடைபோல் காட்டிற்றே—கூடிய
மாதவிக்கும் கண்ணகிக்கும் வான்ஊர் மதிவிரிந்து
போதவிழ்க்கும் கங்குற் பொழுது.[1]

இராமன் சீதையைப் பிரிந்திருக்கிறான். அவளைத் தேடிச் செல்லும் வழியில் இராம இலக்குவனர் நீர் பருகி ஒரு மலையில் தங்கினர். நிலவு தோன்றியது. காதலி அருகில்லாததால் நிலவொளி இராமனைச் சுடுகிறது. உடுக்கள் நிறைந்து கிடந்த விண்ணைப் பார்த்து "வானமே! நிலவு தன் நெருப்புக் கதிர்களை வீசியதால் அவ்வெப்பம் தாங்காது உன் உடல் முழுதும் கொப்புளம் கொண்டதோ? என்று கேட்கிறான். நிலவு தன்னைச் சுடுவதுபோல விண்ணையும் சுடுகிறதோ? சூடு தாங்க முடியாமல் விண்ணின் மேனியில் தோன்றிய கொப்புளங் கள்தான் நட்சத்திரங்களோ? என்று கேட்கிறான் இராமன்.

அப்புடை அலங்குமீன் அர்ந்ததாம் என
உப்புடை இந்துஎனறு உதித்த ஊழித்தீ

1. சிலப்பதிகாரம், அந்திமாலை சிறப்புசெய் காதை, வெண்பா.

வெப்புடை விரிகதிர் வெதுப்ப மெய்எலாம்
கொப்புளம் பொடித்ததோ கொதிக்கு வானமே![1]

விண்மீன்களை பல்வேறு வகையாகக் கற்பனை செய்து பாடியுள்ளார்கள் கவிஞர்கள். நிலவைச் சுற்றி விண்மீன்கள் படர்ந்துள்ள தோற்றம் தாய்ப் பூனையை அதன் வெண்ணிறக் குட்டிகள் சூழ்ந்திருப்பது போன்ற தாயிற்று என்கிறது அகநானூற்றுப் பாடல் ஒன்று.

எழுதி அன்ன கொடிபடு வெருகின்
பூளை அன்ன பொங்குமயிர்ப் பிள்ளை
மதிசூழ் மீனின் தாய்வழிப் படூஉம்.[2]

தாய்ப் பூனை - நிலவு; குட்டிகள் - விண்மீன்கள். வெள்ளைப் பூனையைச் சுற்றி வெள்ளைக் குட்டிகள்.

கான்எலாம் மலர்ந்த முல்லை
ககனம்மீது எழுந்த தென்ன
வான்எலாம் வயங்கு தாரை
நிரைநிரை மலர்ந்து தோன்ற.[3]

காட்டிலே மலர்ந்த முல்லைக் கூட்டம் வானின் மேல் எழுந்து ஒன்றாக விரிந்தாற்போல, வானகமெங்கும் மீன்கள் ஒளிவீசுகின்றன என்கிறார் வில்லிப்புத்தூரார்.

வானம் எழுதிய காதல் வரிகளின்
அச்சுக் குலைந்த எழுத்துச் சிதறல்......
இரவுப் பெண்ணாள் நிலாப் பானையில்
கடைந்த தயிரின் சிதறல் துளிகள்......

---

1. கம்பராமாயணம், அயோமுகி., பாடல் 100
2. அகநானூறு 297 : 13-15
3. வில்லிபாரதம், கிருட்டிணன் தூதுச் சருக்கம், 163

நிலாவி ளக்கில் நெருங்கிப் படிக்கும்
வான வகுப்பு மாணவர் கூட்டம்......

என்றெல்லாம் உடுக்களை உருவகப்படுத்திக் கூறுகிறார் இன்றைய கவிஞர் தமிழன்பன்.[1]

நிலாப் பெண்ணாளைக் கதிரவன் கூடும்போது அவளுடைய நீல நிற முகிற் கூந்தல் கட்டவிழ்ந்ததால் அக் கூந்தலில் இருந்து பொலபொல என உதிர்ந்து கிடக்கும் மலர்கள் தாமோ இந்த விண்மீன் கூட்டங்கள் என்கிறார் கவிஞர் முடியரசன்.

நிலவணங்கே! உனைக்கதிரோன் கூடுங் காலை
நீலமுகிற் குழல்தளரக் கட்ட விழ்ந்து
பொலபொலவென் றுதிர்ந்தநறு மலர்கள் தாமோ?
பூத்திருக்கும் விண்மீன்கள்?[2]

கவிஞர் தமிழழகனோ நிலவைக் கோலப் பொடிக் கிண்ணியாகவும் உடுக்களைக் கோலப்புள்ளிகளாகவும் காண்கிறார்.

புள்ளிமட்டும் வைத்துவிட்டுக்
கோலம் போடவே—மறந்து
போனதும் யார் கிண்ணிமட்டும்
தனியில் வாடவே?[3]

'நீல் உடையினைப் போர்த்து நிற்கின்றாள் வானப் பெண்ணாள். வெண்மதி வாலிபன் அவளைக் கண்டான். அவள் முத்துமாலையைப் பிடித்திழுத்தான். அது

1. தமிழன்பன், தமிழன்பன் கவிதைகள், பக். 29-31
2. முடியரசன், முடியரசன் கவிதைகள், பக். 6
3. தமிழழகன், தமிழழகன் கவிதைகள், பக். 22

நாற்புறமும் சிதறி விழுந்த விண்மீன் குப்பையாயின' என விண்ணைப் பெண்ணாகவும், நிலவைக் காதலனாக வும் கற்பனை செய்கிறார் பாதிதாசன்.

நீல உடையினைப் போர்த்தே —அங்கு
நின்றிருந் தாள்உயர் விண்ணாள்!
வாலிப வெண்மதி கண்டான்—முத்து
மாலையைக் கையி லிழுத்து
நாலு புறத்திலும் சிந்தி—ஒளி
நட்சத்திரக் குப்பை யாக்கி.[1]

நிலாக் காதலன் இன்பம் துய்க்கிறான்.

இவ்வாறு விண்மீன்களைப் பல்வேறு வகையில் கவிஞர்கள் கண்டனர். ஆனால் அவற்றை விண்ணின் கொப்புளங்களாக முதலில் கூறியவன் கம்பன். புகழேந்தி பின்னர் இக்கருத்தை எடுத்தாள்கிறார். தமயந்தி நளனைக் கண்டாள். தன் உள்ளமிழந்தாள். காம வயப்பட்டுக் கலங்கித் தவிக்கிறாள். இந்நிலையில் மீன் நிறைந்த வானத்தைக் காண்கிறாள். தோழியரிடம் "தோழியரே! வெண்ணிலவின் வெப்பத்தைத் தாங்க முடியாமல் வானம் கொப்புளம் கண்டது. இது தெரியாமல் நீங்களோ விண்மீன்கள் நிறைந்துள்ளன என்று கூறிக் கொண்டிருக்கிறீர்கள்! கொப்புளங்களை மீன்கள் என்று சொல்கிறீர்களே - இது வேடிக்கையே!" என்கிறாள்.

செப்பிளங் கொங்கைமீர்! திங்கட் சுடர்ப்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்

---

1. பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 2, பக். 40

மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயால் தெரிந்து.[1]

என்பது நளவெண்பாப் பாடல்.

உடம்பில் தோன்றிய கொப்புளங்கள் என்னும் கற்பனையைச் செயங்கொண்டாரும் காட்டின் வெம்மையைப் பாடுகையில் கையாள்கிறார். கணுக்கள் வெடித்த மூங்கில்களிலிருந்து முத்துகள் வேகமாகத் தெறித்துப் பாலை நிலத்தில் சிதறிக் கிடக்கின்றன. அவை, பாலை நிலம் வருந்தி வெதும்பியமையால், அதன் உடம்பில் தோன்றிய வியர்வைப் புள்ளிகளைப் போன்று - கொப்புளங்களை ஒத்து இருந்தன என்கிறார்.

வெடித்த கழை, விசை தெறிப்பத் தரைமேல் முத்தம்
வீழ்ந்தன, அத்தரை புழுங்கி அழன்று, மெய்ம்மேல்
பொடித்த வியர்ப் புள்ளிகளே போலும் போலும்
போலாவேல், கொப்புளங்கள் போலும் போலும்![2]

உடுக்களை விண்ணின் கொப்புளம் என்று முன்னையோர் கருத்து பாவேந்தரிடம் மேலும் வலிவு பெறுகிறது. காதலால் வெதுப்புண்டவன் நிலவைப் பார்த்த பார்வை கம்பன் பார்வை. உழைப்பாளர்களின் உள்ளக் குமுறல் பாவேந்தர் பார்வை. வானத்தின் மேனியெலாம் கொப்புளம். ஏன் தெரியுமா? உலகில் நடக்கின்ற கொடுமைகளைப் பகலெல்லாம் பார்த்திருந்த வானின் உள்ளம் கொதிக்கின்றது. நடந்த கொடுமை என்ன? உலகில் உழைப்பவன் ஏழை; உழைத்த பின்னர் எவனிடம்

---

1. நளவெண்பா, 111
2. கலிங்கத்துப் பரணி, தாழிசை 93

சென்று கூலி கேட்கின்றானோ-எவன் அவன் உழைப்பின் பயனைத் துய்க்கின்றானோ அவன் பணக்காரன். கூலி கேட்கும்போது கூலியைக் கொடுக்காவிட்டாலும் பரவாயில்லை! கொடுமையான சொற்களைப் புண்ணில் வேல் பாய்ச்சுவதுபோல அள்ளி வீசுகின்றானே. இதைவிட வேறு கொடுமையும் உண்டோ? இக் கொடுமையைக் கண்டு கண்டு வானம் கொதிப்புக் கொண்டதால் தோன்றிய கொப்புளங்களே விண்மீன் களாம்!

மண்மீதில் உழைப்பார் எல்லாம்
வறியராம்! உரிமை கேட்டால்
புண்மீதில் அம்பு பாய்ச்சும்
புலையர் செல்வராம், இதைத்தன்
கண்மீதில் பகலில் எல்லாம்
கண்டுகண்டு அந்திக் குப்பின்
விண்மீனாய்க் கொப்ப ளித்த
விரிவானம் பாராய் தம்பி![1]

எனப் பாடுகிறார் பாவேந்தர். பாட்டாளி மக்கள்பால் பாவேந்தர் கொண்டுள்ள பரிவை இப் பாடல் நன்கு புலப்படுத்துகிறது.

தொழிலாளர்களை இயற்கையோடு இணைத்துப் பாடுவது பாவேந்தர் இயல்பு. ஒருநாள் பாவேந்தர் நண்பர்களுடன் மாலை 4 மணிக்குச் சென்னை பக்கிங்காம் கால்வாயில் தோணி ஏறி மறுநாள் காலை 9 மணிக்கு மாவலிபுரம் போய்ச் சேர்ந்தார். அப் பயணம் பற்றிய அருமையான பாடல் ஒன்றைப் பாடியுள்ளார். அன்று முழு நிலவு நாள். நிலவு தோன்றுகிறது. நிலவு

1. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, பக். 34

தோன்றும்போது சிவந்த நிறத்தில் இருக்கும். பின்னர்ச் சிறிதுசிறிதாகப் பால்நிறமடையும். சிவந்த தோற்றத்தில் நிலவைக் கண்ட கவிஞர்,

முத்துச் சுடர்முகம் ஏனோ—இன்று
முற்றும் சிவந்தது சொல்வாய்!
இத்தனை கோபம் நிலாவே—உனக்கு
ஏற்றியது யார்என்று கேட்டோம்!

நிலவே! உன் முகம் சிவந்திருக்கிறதே! சினமோ? இச் சினத்தை ஊட்டியவர் யாரோ? - நிலவைக் கேட்கிறார்.

நிலவு மறுமொழி சொன்னதாகக் கவிஞரின் நினைவில் ஒன்று தோன்றியது. திரும்பிப் பார்த்தார். தோணியின் கயிற்றை ஒர் ஆள் தோளோடு சேர்த்து நடந்து தன் வலுக்கொண்ட மட்டும் இழுத்தவண்ணம் கரையோடு நடந்தான். மற்றொருவன் தோணியுள்ளிருந்து தன் முதுகை நன்றாக வளைத்து ஒரு கோல் கொண்டு தோணியைத் தள்ளித் தொல்லையுற்றான். படகில் செல்பவருடைய இன்பப் பயணம் அத் தொழிலாளர்களின் உடலுழைப்பாலல்லவா?

இந்த உலகினில் யாரும்—நல்
இன்ப மெனும் கரை யேறல்
சந்தத மும்தொழி லாளர்—புயம்
தரும்து ணையன்றி வேறே
எந்த விதத்திலும் இல்லை—இதை
இருபதுதரம் சொன்னோம்!
சிந்தை களித்த நிலாவும்—முத்துச்
சிந்தொளி சிந்தி உயர்ந்தான்.[1]

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 2, பக். 39, 40

நிலவு தோன்றும்போது செந்நிறத்ததாயிருந்தது. சிறிது போதில் முத்தொளி பெற்றது. தொழிலாளர்கள் படும் வேதனையைக் கண்டதால் ஏற்பட்ட சினத்தால் அதன் முகம் சிவந்ததாம்! 'தொழிலாளர்களால் தான் இவ்வுலகம் இயங்குகிறது என்பதை ஒப்புக்கொண்டோம்-தொழிலின் மேன்மையை உணர்ந்தோம்' என்று சொன்னதும் நிலவு சினம் மாறி இயல்பு நிலை பெற்ற தாம்!தொழிலை - கடின உழைப்பைப் பற்றிச் சொல்வ தால் நிலவைப் பொதுவாகப் பெண் என உரைக்கும் நிலையை மாற்றி இங்கே கவிஞர் ஆண் எனப்பாடு கிறார்.

## 12. கண்வழி நுழைந்த கள்வன்

மிதிலை வீதியில் விசுவாமித்திர முனிவரொடும், தன் தம்பி இலக்குவனுடனும் நடந்து செல்கின்ற இராமன் கண்களும், கன்னிமாடத்தில் நின்றிருந்த சீதை யின் கண்களும் சந்தித்தன; ஒன்றையொன்று கவ்வின; இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர். சித்தையைச் சீதையிடத்து விட்டு இராமன், முனிவன் பின் நடந்து மறைந்தான். சீதை காதல் நோய்வாய்ப்பட்டாள். அவள் கண் வழியே புகுந்த காதல் நோய் பாலில் பொருந் திய பிரைபோல உடம்பு முழுவதும் பரவிவிட்டது.

மாலுற வருதலும் மனமும் மெய்யும், தன்
நூலுறு மருங்குல்போல் நுடங்கு வாள்; நெடுங்
காலுறு கண்வழிப் புகுந்த காதல்நோய்,
பாலுறு பிரையெனப் பரந்தது எங்குமே![1]

கண்வழியே காதல் நுழைந்து உடலெங்கும் பரவியது. சீதையைத் தோழியர் மலர் அமளியில் சேர்த்தனர்.

1. கம்பராமாயணம், மிதிலைக் காட்சி., பாடல் 41

இராமனையே நினைந்து சோர்ந்த அவள், 'வீதியிலே நடந்து சென்றவன் என் கண்வழியே நுழைந்து உள்ளத்தில் தங்கிவிட்ட கள்வனாகி விட்டானோ? என உருகினாள்.

மண்வழி நடந்து, அடி வருந்தப் போனவன்,
கண்வழி நுழையும் ஓர் கள்வனே கொலாம்?[1]

இராமன் சீதையின் கண்வழியே நுழைந்து அவள் உள்ள வீட்டில் குடிபுகுந்து விட்டான்.

இராமன் மிதிலை வீதியிலே உலா வந்தனன். அவனைக் கண்ட மகளிர் அடைந்த நிலையைப் பல பாடல்களில் கம்பன் பாடுகின்றான். ஒருத்தி தோழியிடம் 'இராமன் என் நெஞ்சிலே வந்து புகுந்துவிட்டான். உள்ளே நுழைந்த கண் வழியாகத்தானே அவன் வெளியே செல்லமுடியும். அவன் வெளியே போக முடியாதவண்ணம் என் கண்களை நன்றாக அடைத்துக் கொண்டேன். ஆதலால் என்னை அழைத்துச் சென்று பஞ்சணையில் சேர்ப்பாய்!' என்று வேண்டுகிறாள்.

மைக்கருங் கூந்தல் செவ்வாய்
வாள்நுதல் ஒருத்தி, உள்ளம்
நெக்கனள் உருகு கின்றாள்;
'நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன், போகா வண்ணம்
கண்எனும் புலம்கொள் வாயில்
சிக்கென அடைத்தேன்; தோழி!
சேருதும் அமளி' என்றாள்.[2]

---

1. கம்பராமாயணம், மிதிலைக் காட்சி., பாடல் 56
2. ல்டமேலது, உலாவியல்., பா 14

கண் வழியே நுழைந்து நெஞ்சிலே சேர்ந்த வஞ்சன் வெளியே சென்று விடாதிருக்கச் சிக்கெனக் கண்ணை அடைத்த மங்கையைக் காட்டுகிறார் கம்பர்.

கண்வழியே நுழைந்து நெஞ்ச வீட்டில் உலாவுகின்ற காதலனைப் பாரதிதாசனும் பாடுகிறார்.

கொழிக்கும் ஆணழகன்—அவன்
கொஞ்சி வந்தே எனது
விழிக்குள் போய்ப் புகுந்தான்—நெஞ்ச
வீட்டில் உலாவு கின்றான்.[1]

'இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர்' எனும் கம்பர் கூற்றைப் பாவேந்தர் ஓர் அழகிய சொல்லோவிய மாகவே விவரித்துக் காட்டுகிறார். காதலுக்கு அடிப்படை காட்சி இன்பம். ஒருவரையொருவர் காணும்போது காதலர் கவரப்படுகின்றனர். காதல் கொண்டோர் கண்கள் 'ஒன்றையொன்று கவ்வி உண்பன'. காதலர் ஒருவரையொருவர் காணுகின்ற காட்சி, அவர்கள் உள்ளத்தே இன்ப ஊற்றைப் பெருக்கெடுக்கச் செய்கிறது. காதலனுக்குக் காதலி கண்டதும் தேனாக இனிக்கிறாள். மலரில் உள்ள தேன் உண்டால்தான் இனிக்கும்; ஆனால் காதலியாகிய தேனோ பார்க்கும்போதே இனிக் கிறதாம்!

உண்டாலே தேன் மலரின் தேன்—இவள்
கண்டாலே தித்திக்கும் தேன்[2]

என்கிறார் பாரதிதாசன். திருக்குறள் இதை

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 78
2. பாரதிதாசன், காதல் பாடல்கள், பக். 69

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று[1]

என்று குறிப்பிடும். மணிமேகலை வெண்பாவில் மணிமேகலையின் அழகைக் கூறுமிடத்தில் பாரதிதாசனார் இதே கருத்தை

குன்றத்துக் கொம்புத்தேன் முல்லைவா ழைப்பழத்தேன்
மன்றத்து மாப்புலவர் செந்தமிழ்த்தேன்—என்றமுத்தேன்
உண்டாலே தேன்! இம் மணிமே கலைஒருத்தி
கண்டாலே தித்திக்கும் தேன்.[2]

என்பார். பெண் ஒரு புதுமைத் தேனாக இருப்பதற்குக் கண்டால் தித்திப்பது என்ற ஒரு காரணம் மட்டுமன்று; மற்றொரு காரணமும் இருக்கிறது. தேனை உண்டால் அதன் சுவை சிறிது நேரம் மட்டுமே நீடிக்கும். ஆனால் காதலியை நினைப்பதோ எப்போதும் இனிக்கும்.

செந்தேன் உண்ட நினைவு சிறிதுநேரம் இருக்கும்
சேயிழை இன்ப நினைவு எப்போதும் இருக்கும்.[3]

அவன் பார்த்தான்; அவளும் பார்த்தாள்; முல்லைப் பற்கள் வெளிப்படப் புன்முறுவல் பூத்தாள். அவன் காதலை அவள் ஏற்றுக் கொண்டதற்கு அஃது அடையாளம்.

விழியினால் எழுதினாள் ஒப்பந்தம்
வெண்நகையால் இட்டாள் கையெழுத்தும்.[4]

---

1. திருக்குறள், 1090
2. பாரதிதாசன், மணிமேகலை வெண்பா, 41
3. பாரதிதாசன், காதல் பாடல்கள், பக். 133
4. பாரதிதாசன், காதல் பாடல்கள், பக். 34

காதலர் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வது காதலுக்காக எழுதப்பட்ட ஓர் ஒப்பந்தப் பத்திரமாம்! கையெழுத்திடாத பத்திரத்திற்கு மதிப்பில்லை. பத்திரம் எழுதப்பட்டால் மட்டும் போதாது. கையெழுத்திட்டுப் பதிவும் செய்யப்பட வேண்டும். புன்சிரிப்பாகிய கையெழுத்திடப்பட்டதும் காதல் ஒப்பந்தம் நிறைவேறிப் பதிவாகிறது.

என்விழி அங்கொரு பொன்மலர் நோக்கி
விரைந்தது; பின் அது மீள வில்லை.
பின்னர் அவன்விழி என்னைக் கொன்றது;
என்னுளம் அவனுளம் இரண்டும் பின்னின.
நானும் அவனும் தேனும் சுவையும்
ஆனோம்—இவைகள் அகத்தில் நேர்ந்தவை[1]

இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்துகின்றனர். இரண்டு உள்ளங்களும் பின்னிக் களிக்கின்றன! ஆனால் உடல் கள்...? 'இவைகள் அகத்தில் நேர்ந்தவை' என்பதால் புறத்தில் நேரவில்லை என்னும் ஆசைத்துடிப்பினை நயமாகப் புலப்படுத்திவிடுகிறார்.

## 13. புலால் மறுத்தல்

சங்க நூல்களில் மது அருந்துதலும், புலால் உண்ணுத லும் குற்றமாக யாண்டும் சொல்லப் பெறவில்லை. இவ் விரண்டையும் தவறு எனக் கண்டித்த முதற்புலவர் திருவள்ளுவரே யாவர்.

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்[2]

---

1. பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 2, பக். 60
2. திருக்குறள், 260

என்றார் திருவள்ளுவர். கம்பன் தன் காவியத் தலைவன் இராமனைப் புலால் உண்ணாதவனாகப் படைத்துக் காட்டுகிறான். வால்மீகி, இராமனைப் புலால் உண்பவனாகக் கூறுகிறார். வான்மீகத்தில் "கானகம் புக்க இராமனும் இலக்குவனும் சீதையும் விலங்கு,' பறவை, மீன் ஆகியவற்றின் இறைச்சியினை உண்டனர்... இராமனும் இலக்குவனும் சீதையோடு கங்கையைக் கடந்து காட்டில் நுழைந்தனர். அன்று மாலை பசிமிக்க இராமனும் இலக்குவனும் பெரிய விலங்குகள் நான்கையும் செம்மறிக் கடா ஒன்றையும், வெவ்வேறு இனத்தைச் சேர்ந்த மான்கள் மூன்றையும் கொன்று இரவு உணவுக்காக எடுத்துக் கொண்டு ஒரு மரத்தடியைச் சார்ந்தனர். பின்னர் அவர்கள் பரத்துவாச முனிவன் உறைவிடத்தில் தங்கி, தங்கள் பயணத்தைத் தொடர்ந்தனர். சித்திர கூடம் நோக்கிச் செல்லும் வழியில் யமுனை ஆற்றைக் கடந்தனர். அங்கு இராம இலக்குவர்கள் பல தூய விலங்குகளை வேட்டையாடி எடுத்துச் சென்று ஆற்றங் கரையில் ஓர் இடத்தையடைந்து இரவைக் கழித்தனர்"[1] என்று கூறப்பட்டுள்ளது. கம்பன் வள்ளுவர்வழி நின்று காப்பியத் தலைமக்களிடம் புலால் மறுத்தலாகிய ஒழுக்கத்தை நிலை நிறுத்துகிறான்.

கம்பனின் இராமன் மரக்கறி உணவினன். இராமனும் சீதையும் இலக்குவனும் கங்கைக் கரையை அடைந்தனர். அங்கிருந்த முனிவர்கள் அவர்களை வரவேற்றனர். பின்னர் "பெரியீர்! காட்டிலே தேடிக் காய்களையும், கிழங்குகளையும், கனிகளையும் கொண்டு வந்துள்ளோம்! தாங்கள் கங்கையிலே நீராடி இவற்றை

1. தெ. ஞானசுந்தரம், காப்பிய விருந்து, பக். 14, 15

உண்டு இளைப்பாறுங்கள்'' என வேண்டிக் கொண்டனர்.

காயும், கானில் கிழங்கும், கனிகளும்,
தூய தேடிக் கொணர்ந்தனர்; 'தோன்றல்! நீ
ஆய கங்கை அரும்புனல் ஆடினை,
தீயை ஓம்பினை, செய்அமுது' என்றனர்.[1]

இராமனைக் காண வந்த குகன் தன் அன்பின் மிகுதியால் இராமன் உண்பதற்கு நல்ல மீனையும் தேனையும் கொண்டு வந்தான். இராமன் குகனைப் புன்முறுவலுடன் நோக்கி "அன்பினால் கொண்டு வந்த இது அமுதத்தினும் சிறந்தது. நான் இதை இனிமையாக உண்டது போன்றது ஆகும்''[2] என நயமாகக் கூறிக் குகனுக்கு மகிழ்ச்சியூட்டினான். மீனை உண்ணாது - ஆயினும் கொண்டு வந்தவன் மனம் கோணாதவாறு இனிய மொழி கூறியவனாய் இராமன் புலால் மறுத்த பாங்கைக் கம்பன் நிலைநாட்டுகிறான்.

"இராமன் உண்ட பச்சிலை, கிழங்கு, காய்களின் மீதத்தையே நான் உண்பது. இவைதவிர நான் வேறெதையும் விரும்புவதில்லை'' என இலக்குவன் கூறுகிறான்.

பச்சிலை கிழங்கு காய், பரமன் நுங்கிய
மிச்சிலே நுகர்வது; வேறுநான் ஒன்றும்
நச்சிலேன்.........[3]

---

1. கம்பராமாயணம், கங்கை. பாடல் 15
2. மேலது, குகம்.. பாடய் 15
3. மேலது கிட்கிந்தைப்., பாடல் 114

கம்பன் காலத்திலும் மக்களில் மது அருந்துபவர்களும், புலால் உண்பவர்களும் இருக்கவே செய்தனர். அவனது காப்பியத்திலேயே தலைமாந்தர்களைத் தவிர மற்றவர்கள் மது அருந்திக் களிப்பதையும், புலால் உண்பதையும் காணமுடிகிறது. மக்கள் மதுவுண்டு களித்த காட்சியை ஒரு படலமாகவே (உண்டாட்டுப் படலம்) வருணித்திருக்கிறார். நாட்டு நிலை எதுவாயினும் பொது அறத்தை - ஒழுக்கத்தை நிலைநிறுத்த வேண்டும் என்னும் நியதியில் கதையின் தலைமாந்தர்களைப் புலால் மறுத்தவர்களாக - மதுவை ஒதுக்கியவர்களாகப் படைத்துக் காட்டியிருக்கிறார்.

கவிஞர்கள் தங்கள் சொந்தப் பழக்க வழக்கங்களே கூட, பொதுத் தன்மைக்கு மாறுபட்டிருப்பின், தம் பழக்க வழக்கங்களை வற்புறுத்தாது, பொது அறத்தை - எல்லோர்க்கும் பொதுவானதைப் பாடுகின்றவர்களாகவே உள்ளனர். பாவேந்தர் பாரதிதாசனே இதற்குத் தக்க எடுத்துக்காட்டாவார்.

பாரதிதாசன் புலால் உணவை விரும்பி உண்பவர். ஒருநாள் கூட புலால் இல்லாமல் அவரால் உண்ண முடியாது. புலால் உணவையே விரும்பி உண்டவர் - மற்றவர்களிடமும் புலால் உணவு உண்பதுதான் உடலுக்கு வலிமை தரும் என்று வற்புறுத்திப் பேசியவர், தம் பாடல்களில் உணவைச் சொல்லும்போது மரக்கறி உணவு வகைகளையே சொல்கிறார்.

உணவு உடலை வளர்க்கும்; தமிழோ உயிரை வளர்க்கும் என்பதைக் கூறவரும் பாவேந்தர்,

செந்நெல் மாற்றிய சோறும்—பசுநெய்
தேக்கிய கறியின் வகையும்,
தன்னிகர் தானியம் முதிரை—கட்டித்
தயிரொடு மிளகின் சாறும்,
நன்மது ரஞ்செய் கிழங்கு—காணில்
நாவில் இனித்திடும் அப்பம்,
உன்னை வளர்ப்பன தமிழா!—உயிரை
உணர்வை வளர்ப்பது தமிழே![1]

என்பார். அரிசிச் சோறு, பசுநெய்யால் பொறிக்கப்பட்ட கறிவகை, முதிரை, கட்டித் தயிர், மிளகின் சாறு, அப்பம் ஆகியவையே அவர் காட்டுகின்ற உணவு. அயோத்தி மக்கள் விருந்தோடுண்டதைக் கம்பரும் கூறுவார். மா, பலா, வாழை என்ற முக்கனிகளுடன் பல வகைப் பருப்புகளுடனும், அப்பருப்புகளை முழுகச் செய்யும் நெய்யுடனும், கண்டக் காய்ச்சிய பாலில் உண்டாக்கிய செந்நிறத் தயிர்க் கட்டி, கண்ட சர்க்கரை ஆகிய இவற்றுடனே இடையிடையே கலக்கப் பெற்ற சோற்றுடனும் விருந்து அமைந்ததாம்.

முந்துமுக் கனியின், நானா
முதிரையின், முழுத்த நெய்யின்,
செந்தயிர்க் கண்டம், கண்டம்,
இடைஇடை செறிந்த சோற்றின்
தத்தம்இல் இருந்து, தாமும்,
விருந்தொடும், தமரி னோடும்,
அந்தணர் அமுத உண்டி
அயிலுறும் அமலைத்து எங்கும்.[2]

1. பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 1, பக். 88
2. கம்பராமாயணம், நாட்டுப்., பாடல் 22

கம்பரின் நாளா முதிரை, முழுத்த நெய்—பாவேந்தரிடம் பகநெய் தேக்கிய கறியின் வகையாகவும், தன்னிகர் தானியம் முதிரையாகவும் உருப்பெற்றுச் சுவை கூட்டு கின்றன.

தாலாட்டும் தாய்,

.........நீ கேட்டால்
ஆணை அடிபோல் அதிரசத்தைச் சுட்டடுக்கித்
தேனில் துவைத்தெடுத்து தின்என்று தாரேனா?
கொட்டித் தும்பைப்பூக் குவித்ததுபோல் உன்னெதிரில்
பிட்டு, நறு நெய்யில் பிசைந்துவைக்க மாட்டேனா?
குப்பை மணக்கக் குடித்தெருவெல் லாம்மணக்க
அப்பம் நிலாப்போல் அடுக்கிவைக்க மாட்டேனா?
மீன்வலைசேந் தும்கயிற்றை வேய்ந்த வளையம்போல்
தேன்குழல்தான் நான்பிழிந்து தின்னத் தாரேனா?
விழுந்துபடும் செங்கதிரை வேல்துளைத்த தைப்போல்
உழுந்துவடை நெய்யொழுக உண்ணென்று தாரேனா?
தாழையின் முள்போன்ற தகுசீ ரகச்சம்பா
ஆழ உரலில் இடித்த அவலைக்
கொதிக்கும்நெய் தன்னில்தான் கொட்டிப் பொரித்துப்
பதக்குக்கொரு பதக்காய்ப் பாகும் பருப்புமிட்டே
ஏலத்தைத் தூவி எதிர்வைக்க மாட்டேனா?[1]

குழந்தைக்குப் புலால் கலப்பற்ற தின்பண்டங்களைப் பாடலில் அடுக்கிச் சுவை கூட்டுகிறாள்.

பாவேந்தரின் குடும்ப விளக்கில் 'விருந்தோம்பல்' ஒரு பகுதியாகும். வந்த விருந்தினரை வரவேற்பது, விருந்து படைப்பது, உரையாடி மகிழ்வது ஆகியவற்றை

1. பாரதிதாசன், இசையமுது 1, பக். 55, 56

விரிவாக அதில் பாடியுள்ளார். வீட்டுக்கு வந்த விருந்தின ரைத் தலைவி வரவேற்று, விருந்து வந்துள்ள செய்தியை வயது முதிர்ந்த மாமன் மாமிக்குத் தெரிவித்தாள். அவர் களும் மகிழ்ந்து 'உற்ற விருந்தை உயிரென்று பெற்று வப்பதே நற்றமிழர் சேர்த்த புகழ்' எனச் சொல்லி வந்தவர்களை அன்புடன் பேணச் சொன்னார்கள். மாமி மருமகளிடம் வீட்டிலுள்ள பொருள்களைச் சொல்லுகிறாள். தயிர், பண்ணியங்கள், பழமை படாத வெண்ணெய், பசுவின்பால், சேலத்து அங்காடியில் வாங்கிய இலந்தை வடை, நாகர்கோயில் பலாச்சுளை வற்றல், தேய்பிறை போல் கொத்தவரை வற்றல்; இவை மட்டுமா - ஊறுகாய் வகைகள் :

உற்றிடச்செய் ஊறுகாய்
    ஒன்றல்ல கேட்பாய்நீ
இற்றுத்தேன் சொட்டும்
    எலுமிச்சை—வற்றியவாய்

பேருரைத்தால் நீர்சுரக்கும்
    பேர்பெற்ற நாரத்தை
மாரிபோல் நல்லெண்ணெய்
    மாறாமல்—நேருறவே
வெந்தயம் மணக்க அதன்
    மேற்காயம் போய்மணக்கும்
உந்துசுவை மாங்காயின்
    ஊறுகாய்—நைந்திருக்கும்

காடி மிளகாய்
    கறியோடும் ஊறக்கண்
ணாடியிலே இட்டுமேல்
    மூடிவைத்தேன்—தேடிப்பார்

என்கிறாள். இன்னும் இஞ்சி முறைப்பாகு, எலுமிச்சை சார்பத்து, பிஞ்சுக் கடுக்காய் பிசை துவக்கு இவை யெல்லாம் நிறையவுண்டு. இவற்றையெல்லாம் கொண்டு நன்கு விருந்து படைக்கச் சொல்கிறாள்.

சோற்றை அள்ளுங்கால்
துவள்வாழைத் தண்டில்உறும்
சாற்றைப்போ லேவடியத்
தக்கவண்ணம்—ஊற்றுநெய்யை

வாழை இலையின்அடி
உண்பார் வலப்புறத்தில்
வீழ விரித்துக்
கறிவகைகள்—சூழவைத்துத்

தண்ணீர் வெந்நீரைத்
தனித்தனியே செம்பிலிட்டு
வெண்சோ றிடுமுன்
மிகஇனிக்கும்—பண்ணியமும்

முக்கனியும் தேனில்
நறுநெய்யில் மூழ்குவித்தே
ஒக்கநின்றே உண்டபின்பால்
சோறிட்டுத்—தக்கபடி

கேட்டும் குறிப்பறிந்தும்
கெஞ்சியும் மிஞ்சும்அன்பால்
ஊட்டுதல் வேண்டும் தாய்போல்
ஒண்டொடியே![1]

---

1. பாரதிதாசன், குடும்ப விளக்கு, விருந்தோம்பல்.

என மருமகளுக்கு மாமி விருந்து படைக்கும் முறையை விரிவாக எடுத்துரைக்கிறாள். கம்பன், பாரதிதாசன் இருவருமே விருந்து படைப்பதில் மிகு சமர்த்தர்களாக விளங்குகிறார்கள். நெய்யிலே பருப்பு மிதக்கும்படி நெய் வார்க்க வேண்டுமென்கிறார் கம்பர். பாரதிதாசனோ, சோற்றைப் பிசைந்து கையை மேலே தூக்கினால் ஊற்றிய நெய் வழிந்து வந்து முழங்கையிலே சொட்டுச் சொட்டாக வடிய வேண்டுமென்கிறார்! தயிரின் இடையிடையே சோறு சிறிது இருக்கிறது கம்பரிடம். பாவேந்தரா பண்ணியத்தையும் முக்கனியையும் தேனில் நறுநெய்யில் மூழ்குவிக்கிறார்.

விருந்திலெல்லாம் புலால் நீங்கிய உணவையே பாவேந்தர் பேசுகிறார். ஆனால் அவர் தான் உண்ட உணவைச் சொல்லுகையில் புலால் உணவைச் சொல் வார். பீறிட்டடிக்கும் உடற்குருதி கண்டால் சோரா திருந்திடப் பழகுதலே போர் வீரர்க்கு அழகு என்று பாடுகின்ற பாட்டில்

மீன் உண்ணத்தான் வேண்டும் தேடு—நீ
மிக உண்ணத்தான் வேண்டும் ஆடு!
நான் உண்டதுண்டு புலிக்கறியி னோடு
நல்ல கரடிக் கறியை! உயர்வென்று பாடு[1]

எனத் தான் புலிக்கறி உண்டது பற்றிக் கூறுகிறார்.

ஒருமுறை குன்றூர் சென்றிருந்தார். அங்கு ஐந்நூறு காணிப் பரப்பை 'அழகு' மொய்த்து விளையாடக் குத்தகை பிடித்திருந்ததைக் கண்டார். வீட்டின்

1. பாரதிதாசன், பண்மணித் திரள், பக். 273

திண்ணையில் அமர்ந்து அழகின் சிரிப்பை அள்ளி உண்டிருந்தார். அப்போது ஒருவர் வந்து அவரை உணவுண்ண அழைத்தாராம்!

விழிகள் அழகை உண்ணச், செவிகள்
எழும்இன் னிசையினை உண்ண, மூக்கு
நறுமணம் உண்ண, நல்லுடல் குளிரை
உண்ணக் கிடந்த என்னை, உடனே
'உண்ண வருக' என்றான் ஒருமகன்;
இன்னும் என்ன உண்பது என்றேன்!

ஐம்புலனும் உண்டுகொண்டிருக்க வேறு உணவென்ன வேண்டியிருக்கிறது?

கொத்துக் கறியின் குழம்பும், வறுத்த
மத்தி மீனும் வாய்க்குஅமுது அன்றோ?
அங்குப் போகலாம் வருகஎன் றழைத்தான்;
அவைகளும் இங்கே இருந்தால், அடடா!
குறைவிலா இன்பக் கொள்ளை அன்றோ?
மெய்விழி மூக்குச் செவிகள் விழுங்கும்
ஊறுஒளி நாற்றம் ஒலிஅமுது துறந்து
வாய்க்குச் சுவையமுது நோக்கிச் சென்றேன்![1]

தன் வாய்க்குக் கொத்துக் கறியின் குழம்பும், வறுத்த மத்தி மீனும் சுவையாய் இருந்ததைச் சொல்லும் அவர் விருந்தோம்பலிலோ, மற்ற இடங்களிலோ புலாலைச் சுட்டவில்லை. அது மட்டுமன்று. உணவைத் தென்பாங்கு, வடபாங்கு என்றுகூடப் பிரித்துக் காட்டுகிறார். எது தென்பாங்கு? எது வடபாங்கு? அவர் மொழியிலேயே சொல்வோம்.

---

1. பாரதிதாசன், பண்மணித் திரள், பக். 191

வேளையொடு சோறு சமைப் பாயே—அந்த
வெள்ளரிப் பிஞ்சைப் பொரிக்க வேண்டும்;

காளிமுத்து தோட்டத்தினில் பாகல்—உண்டு
கட்டி வெல்லம் இட்டுவை குழம்பு;

கார்மிளகு நீர் இறக்கி வைப்பாய்—நல்ல
கட்டித்தயிர் பாலினில் துவைப்பாய்;

மோரெடுத்துக் காயமிட்டுத் தாளி—நல்ல
மொச்சை அவரைப் பொரியல் வேண்டும்;

சீருடைய தாகிய தென்பாங்கு—கறி
செய்து விடுவாய் இவைகள் போதும்.

நேரில் வடபாங்கு மிகவேண்டும்—நல்ல
நீள்செவி வெள்ளாட்டுக் கறி ஆக்கு;

பாண்டியனின் வாளையொத்த வாளை—மீன்
பக்குவம் கெடாது வறுப்பாயே;

தூண்டிலில் வரால் பிடித்து விற்பார்—பெரும்
தூணை ஒத்ததாய் இரண்டு வாங்கு......[1]

சோறு, வெள்ளரிப் பிஞ்சுப் பொரியல், பாகல் குழம்பு, மோர், மொச்சை அவரைப் பொறியல் - இவை தென்பாங்கு உணவு. வெள்ளாட்டுக் கறி, வாளை மீன் வறுவல், வரால் மீன் குழம்பு - இவை வடபாங்கு உணவு.

வேளை தவறினாலும் புலால் உணவில் தவறாத பாரதிதாசன் புலால் உணவை வடபாங்கு உணவு எனக் கூறுகிறார். தான் விரும்பியுண்ணுகின்ற உணவைத் தான் விரும்பாத வடக்குடன் இணைத்திருப்பது விந்தை

1. பாரதிதாசன், தமிழச்சியின் கத்தி, பக். 16, 17

யல்லவா? இங்கே பேசுவது பாரதிதாசன் அன்று; கவிஞனுடைய பொது மனம். இந்தப் பொது மனம்தான் கம்பனையும் வான்மீகத்திலிருந்து வேறுபடுத்திக் கதைத் தலைமாந்தர்களைப் புலால் மறுத்தவர்களாக ஆக்கச் செய்தது.

## 14. புறப்புண் நாணுதல்

போரில் மார்பிலும் முகத்திலும் படும் புண் விழுப் புண்; முதுகிற் படும் புண் புறப்புண். விழுப்புண் பெறுவது புகழுக்குரியது. தோற்றோடுவதோ, புறப்புண் ஏற்பதோ நாணி இகழத்தக்கது. விழுப்புண் பெறாத நாள்களை வீரன் வீணான நாள்களாக எண்ணுவான். பகைவர் வேல்கொண்டு எறிய அதைக் கண்ட கண், இமைக்குமாயின் அதுகூடப் புறங்கொடுத்தலாம் எனத் திருக்குறள் வீரச் செருக்கினைக் கூறுகிறது.[1]

சேரமான் பெருஞ்சேரலாதன் சோழ நாட்டை யாண்ட கரிகால் வளவனொடு 'வெண்ணி' என்னுமிடத்தில் பெரும்போர் செய்தான். போரில் வளவன் செலுத்திய நெடுவேல் சேரலாதன் மார்பில் பட்டு முதுகின் புறத்தே உருவிச் சென்று புண் செய்தது. மார்பில் பட்டு ஊடுருவிப் புறம் போந்ததால் உண்டான புண் என்றாலும், அதனையும் புறப் புண்ணாகக் கருதிப் பெரு நாணங்கொண்டு, மானம்பொறாது அச்சேரமான் வடக்கிருந்து உயிர் துறந்தனன் எனப் புறநானூறு புகல்கிறது.

1. திருக்குறள், 775, 776

தன்போல் வேந்தன் முன்புகுறித்து எறிந்த
புறப்புண் நாணி மறத்தகை மன்னன்
வாள்வடக்கு இருந்தனன்.[1]

மார்பில் தைத்து உருவிய புண்ணும் புறப்புண்ணாதலை ஒக்கும் என அப்பெருமகன் நாணினன். வெற்றிகொண்ட கரிகால் வளவனை வாழ்த்திப் பாடுகிற வெண்ணிக் குயத்தியார், வடக்கிருந்து உயிர் துறந்த சேரலாதனையும் அதே பாடலில் சேர்த்துப் புகழ்கிறார்.

கரிகால் வளவ!
சென்று அமர்க் கடந்த, நின் ஆற்றல் தோன்ற
வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே![2]

"வளவ! நீ போரில் வென்றமையால் வெற்றிப் புகழ் பெற்றனை. உனக்கு அப்புகழைத் தந்து, வேல் முதுகுருவிச் சென்றதால் ஏற்பட்ட புண்ணைப் புறப் புண்ணாக நாணி வடக்கிருந்து உயிர் துறந்து பெரும் புகழ் பெற்றனன் சேரமன்னன். நின் வெற்றிப் புகழினும் அவன் இறப்புப் புகழ் பெருமையுடையதன்றோ?" என வென்றானையும் தோற்றானையும் ஒருசேரப் புகழ்கின்ற நயத்தகு நாகரிகத்தை இங்குக் காண்கிறோம்!

புறப்புண் நாணும் தமிழர் வீரப் பண்பைக் காட்டக் கம்பர் ஓர் அரிய காட்சியைப் படைத்துக்கொள்கிறார். இராமன் அம்பால் இராவணன் வீழ்ந்துபட்டிறந்தான்.

1. புறநானூறு 65 : 9-11
2. மேலது 66 : 3-8

வீரப் பெருமிதம் வெளிப்பட இராமன், இராவணன் வீழ்ந்து கிடந்த இடத்திற்குச் சென்று அவன் உடல் முழுவதையும் உற்று நோக்கினான். திக்கு யானைகளின் கொம்புகள் இராவணன் மார்பை ஊடுருவி முதுகில் ஏற்படுத்திய புண் குறிகளைக் கண்ட இராமன் அவற்றைப் புறப்புண் எனக் கருதினான். புறப்புண் கொண்ட ஒருவனை வென்றதென்பது தன் வீரத்துக்குப் பெருமையாகாதே என வருந்தினான். இராவணன் கைலாய மலையால் கை நசுக்குண்டவன். தெய்வ மலையால் நசுக்குண்டது இழிவில்லை என்று அதற்காவது அமைதி சொல்லலாம். இவ்விராவணன் கார்த்தவீரியனால் கண்டுண்டவன் என்றொரு சொல் உண்டு. முன்னரே ஒருவனிடம் தோற்ற ஒருவனை வென்றதில் பெருமையில்லையே என நாணம்கொண்டு நிற்கும் எனக்கு அவனுடைய புறப்புண்ணையும் காணுமாறு நேரிட்டுவிட்டதே! முதுகில் புண்கொண்ட இவனை வென்றதுவா வீரம் என இராமன் மனம் புழுங்கினான். அருகிலிருந்த வீடணனிடம் "புறமுதுகிட்ட ஒருவனைத் தானே வெற்றி கொண்டான் என்ற பழிச்சொல் உண்டாகுமே தவிர, தூய வீரனொருவனை மாய்த்த பெருமை எனக்கு இல்லாது போய்விட்டதே" என்றான்.

'மாண்டுஒழிந்து உலகில் நிற்கும்
வயங்குஇசை முயங்க மாட்டாது,
ஊண்தொழில் உகந்து தெவ்வர்
முறுவல்என் புகழை உண்ண,
பூண்தொழில் உடைய மார்பா!
போர்ப்புறம் கொடுத்தோர்ப் போன்ற
ஆண்தொழி லோரின் பெற்ற
வெற்றியும் அவத்தம்' என்றான்.[1]

---

1. கம்பராமாயணம், இராவணன் வதை., பாடல் 207

என் வெற்றி வீணாயினதே என இராமன் வருந்தினான். தன் அண்ணனின் வீரம் பழிக்கப்படுவதைப் பொறுக்க மாட்டாத வீடணன் 'ஐய! சீரிய அல்ல செப்பலை' என இராமனை மறுத்து இராவணனுக்கு முதுகுப் புண் ஏற்பட்ட காரணத்தை விளக்கினான். "மேலோய்! கார்த்தவீரியனும், வாலியும் இராவணனிடம் கொண்ட வெற்றி, தேவர்கள் அளித்த சாபத்தின் விளைவால் நேர்ந்தது. சீதையிடம் அவன் கொண்ட காமம் காரணமாக உன்னிடம் தோன்றிய சினம் அன்றி அவனை உலகில் வேறு எந்தச் சக்தியாலும் வென்றிருக்க முடியாது. போர் செய்யும் ஆவலால் அவன் உலக எல்லைவரையும் சென்றபோது அவனை எதித்தார் எவருமிலர். ஆதலால் திக்கு யானைகளை அவற்றின் கொம்புகளைத் தன் மார்பிலே குத்தச் செய்தான். அக்கொம்புகள் நீளம் உள்ளவரை மார்பில் பதிந்து இவன் முதுகின் புறத்தே தொட்டு நின்றன. அக்கொம்பு களன்றி வேறு படைக்கலங்கள் இவன் முதுகில் படவும் முடியுமோ? பாய்ந்த கொம்புகள் பிடுங்க முடியாமற் போகவே முறிந்து இவன் மார்பிலேயே அணியாகப் பதிந்திருந்தன. முதல்நாள் போரில் அனுமன் இவன் மார்பில் குத்தியபோது நெஞ்சில் பதிந்திருந்த கொம்புகள் முகுது வழியாக வெளிப்போந்தன. அதனால் ஏற்பட்ட அடையாளங்களே அவன் முதுகில் இருப்பவை" என வீடணன் கூறினான். இராமன் ஐயமும் நாணமும் நீங்கின. தக்க வீரனுடனேயே போரிட்டுள்ளோம் என்ற மகிழ்ச்சியோடு தன் வீரத் தோள்களிரண்டையும் பார்த்துப் பெருமிதம் கொண்டான்.

பாவேந்தரின் 'பாண்டியன் பரிசு' காப்பியத்திலும் புறப்புண் நாணும் காட்சி ஒன்று இடம் பெறுகிறது.

கதிர்நாட்டு மன்னன் கதிரைவேலன் வேழ நாட்டு மன்னனுடன் கடும்போர் புரிந்தான். அப்போது கரிய உடையால் உடலை மறைத்த ஒருவன் கதிரைவேலன் முதுகில் ஈட்டியைப் பாய்ச்சிவிட்டு ஓடி மறைந்தான். கதிரை மன்னன் பொத்தென வீழ்ந்து இறந்தான். வேழ நாட்டான் ஈட்டியைப் பாய்ச்சியது யார் எனத் தெரியாது திகைத்தான். கதிரைவேலன் மனைவி கண்ணுக்கினியாள் கொலைவாளும் கையுமாக அங்கே வந்தாள்; கொண்டவனைப் பிணமாகக் கண்டாள்.

கலைந்ததுவோ என்காதல் ஓவி யந்தான்
எனக்கூறி கட்டழகன் உடலை அள்ளி
அணைத்திட்டாள்! மலர்க்கையால் கன்னம் உச்சி
அணிமார்பு தடவினாள்! ஈட்டி யாலே
தணல்போலும் புண்பட்ட முதுகு கண்டாள்;
தலைகுனிந்தாள்; அப்பிணத்தை நிலத்திற் போட்டாள்.
'இணைபிரியா மானமதும் எம்மை விட்டே
ஏகிற்றோ? ஐயகோ! முதுகு காட்டத்
துணிந்ததுவோ தமிழாநின் தமிழ நெஞ்சம்!

தூயநின் மூதாதை, என்மூ தாதை
அனைவருள்ளும் எவரேனும் பகைவன் வாளை
அருமார்பில் முன்தோளில் ஏற்ற தின்றித்
தினையளவும் திரும்பிப்பின் முதுகில் ஏற்ற
சேதியினை இவ்வையம் கேட்ட துண்டோ?'
எனக்கூவித் திரும்புங்கால் எதிரில் நின்ற
இளவேழ நாட்டரசன் இரக்கம் மிஞ்ச,
மனைவிளக்கே! நின் துணைவன் கதிரைவேலன்
வாட்போரை என்னோடு நிகழ்த்துங் காலை

முகம்மறைத்த ஒருதீயன் எவனே பின்னோ
முடுகிவந்து நடுமுதுகில் எறிந்தான் ஈட்டி;

நகைத்தேன்நான்! சாய்ந்தான்அம் மறவோர் மன்னன்!
நிகழ்இமய மலைபோலும் அவன்கொண் டுள்ள
புகழ்க் கென்ன? உன்குடிக்கு வாய்த்த மானம்
போனதெனப் புலம்புவதும் என்ன? பெண்ணே!
அகத்துன்பம் நீங்கியிரு! செல்க, உன்றன்
அரண்மனைக்கே என்றுரைத்தான், சென்றாள்
பெண்ணாள்![1]

பகைவன் வாளை மார்பில் ஏற்றதன்றி முதுகில் ஏற்ற செய்தி தமிழர் வரலாற்றில் கிடையாது என்ற வீரப் பெருமிதத்தைத் தோற்றுவிக்கிறார் பாவேந்தர். புறமுதுகிட்டவனோடு போரிட்டது நாணத்தக்கது என்கிறான் இராமன். மாண்டவன் கணவனேயாயினும் முதுகுப்புண் கண்டதும் மானம் போயிற்றே என மாழ்கிப் பிணத்தைத் தொடவும் கூசிக் கீழே போடுகிறாள் கண்ணுக்கினியாள். இராமன் வீரத்துக்கு இழுக்கு நேர்ந்ததென நாணுகிறான்; கண்ணுக்கினியாளோ மானமழிந்ததெனத் துடிக்கிறாள்.

## 15. பழமொழிகள்

ஒரு கருத்து பலகாலம் திரும்பத் திரும்பச் சொல்லப் பட்டு அது பழமொழியாக நிலைத்து விடுகிறது. மக்களால் பெரிதும் அறிந்த செய்தியே பழமொழியாகும். இராமாயணத்தை ஒட்டியே ‘இராமன் ஆண்டாலென்ன, இராவணன் ஆண்டாலென்ன’, ‘இராமன் உள்ள இடம் அயோத்தி’, ‘படிப்பது இராமாயணம்; இடிப்பது பெருமாள் கோவில்’ என்பன போன்ற பழமொழிகள் உருவாகியுள்ளன. கம்பர் பல இடங்களில் பழமொழி களைக் கையாண்டுள்ளார். கம்பர் கையாண்டுள்ள

1. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, பக். 12, 13

பழமொழிகளில் சிலவற்றைப் பாரதிதாசனும் கையாண்டிருக்கக் காண்கிறோம்!

சீதையை இராவணன் தேரில் ஏற்றி விண்ணிலே சென்றதைக் கண்ட சடாயு, ‘யாரடா போவது, நில் நில்’ என்று இடிக் குரலிலே தடுத்தான். ‘உத்தமன் தேவியை ஓங்குதேர் வைத்து எங்குச் செல்கிறாய்’ எனத் தன் இரு சிறகுகளையும் பரப்பி வழி மறைத்தான். சீதையிடம் ‘அஞ்சல்’ என ஆறுதல் சொற்கூறி இராவணனிடம் ‘என் செயத் துணிந்தனை? இராமன் தேவியை விட்டுவிடு. இன்றேல் குலத்தோடு நீ அழிவாய்! இராமனை வெல்வார் உலகில் எவருமிலர். இராமன் வந்து மீட்ப தென்ன? நானே இவளை இருந்த இடத்திற் கொண்டு சேர்ப்பேன். வீணே அழிவைத் தேடிக் கொள் ளாதே;’ என்று அறிவுரை கூறினான். இராவணன் கனன்று, ‘எதிர்த்து நிற்கும் கழுகே’ என் அம்பு உன் மார்பைப் பிளக்கும்முன் நீ ஓடிவிடு. பழுக்கக் காய்ச்சிய இரும்பில் பட்ட நீர் ஒருவேளை மீண்டாலும் மீளும்; ஆனால் இவள் என்னிடமிருந்து ஒருபோதும் மீள முடியாது. இதை நீ உணர்ந்துகொள்’ என உரைத்தான்.

வரும் புண்டரம்! வாளிஉன் மார்பு உருவிப்
பெரும் புண் திறவா வகை பேருதி நீ;
இரும்பு உண்டநீர் மீளினும் என்னுழையின்
கரும்பு உண்ட சொல் மீள்கிலள் காணுதியால்[1]

அகப்பட்டால் மீள முடியாததற்கு—ஒன்று வந்து சேர்ந்தால் அதனை மீட்க முடியாதவாறு தன்னிடம் ஐக்கியப்படுத்திக்கொள்வதற்கு ‘இரும்புண்ட நீர்’ எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

---

1. கம்பராமாயணம், சடாயு உயிர்., பாடல் 18

'இரும்புண்ட நீர்' என்னும் இப்பழமொழியை ஆழ்வார்களும் வைணவப் பெரியார்களும் சிறப்புற ஆண்டுள்ளனர் நம்மாழ்வார்.

போரவிட் டிட்டு என்னை நீ'' புறம்
போக்கல்உற்றால் பின்னை யான்
ஆரைக் கொண்டு எத்தை? அந்தோ!
எனது என்பதுஎன்? யான்என்பது என்?
தீர இரும்புண்ட நீர்அது
போலஎன் ஆர்உயிரை
ஆரப் பருக, எனக்கு
ஆரா அமுது ஆனாயே![1]

எனத் 'திருவாய்மொழி'யில் சொல்வார். நெருப்பிலே நன்கு கடப்பட்ட இரும்பு, நீரை முற்றும் உண்ணுவது போல, நீ என் ஆன்மாவை முற்றிலுமாக உண்டு, எனக்கு உன்னுடைய எல்லையில்லாத இனிமையைக் காட்டி அகப்படுத்தினாய் என்பது பாடலின் கருத்து. 'தீர இரும்புண்ட நீரதுபோல் ஆனாயே' என்பதற்கு இரு வகையாகப் பொருள் சொல்வர் ஆன்றோர். முதற் பொருளில் மேலே சொன்னவாறு அது எம்பெருமானுக்கு உவமையாகிறது. உயிரை என்ற இரண்டாம் வேற்றுமையை முதல் வேற்றுமையாகக்கொண்டு 'என் ஆருயிரானது உன்னை ஆரப் பருக என்னவும் ஆம் அப்போது, காய்ந்த இரும்பு அக் காய்ச்சல் தீரும்படி நீரைப் பருகுவதுபோல என் ஆருயிரின் விடாய் எல்லாம் தீரப் பருகுவதற்கு நீ எனக்கு ஆரா அமுதாய் இருக் கின்றாய் என்பது கருத்தாம்.[2]

1. நம்மாழ்வார், திருவாய்மொழி - பத்தாம் பத்து, 5
2. புருசோத்தம நாயுடு, ஈட்டின் தமிழாக்கம்

திருமங்கையாழ்வார், திருக்குறுந்தாண்டகத்தில்

இரும்பு அனன்று உண்ட நீர்போல்
எம்பெருமா னுக்கு என்றன்
அரும்பெறல் அன்பு புக்கிட்டு
அடிமைபூண்டு உய்ந்து போனேன்[1]

என 'இரும்புண்ட நீரை' உவமையாக்கிப் பாடுகிறார்.

தூர இரும்;புண் தரிக்கும், இக் காயத்தைச் சூழ்பிணிகாள்!
நேர் அவிரும் புண்டரர்க்கு அருள்வான்நெடு வேங்கடத்தான்
ஈர இரும்புண்டரீகப் பொற்பாதங்கள் என்உயிரைத்
தீர இரும்பு உண்ட நீர்ஆக்குமாறு உள்ளம் சேர்ந்தனவே[2]

எனத் திருவேங்கடத்தந்தாதி கூறுகிறது. மேல்நோக்கி ஊர்ந்த திருமண் காப்பை உடையவரான வைணவர்க்கு அருள்வானாகிய நெடுவேங்கடத்தானின் குளிர்ச்சியான செந்தாமரைப்பொற்பாதங்கள் இரும்புண்ட நீர் ஆமாறு என் உள்ளத்திற் சேர்ந்து உயிரை உண்டது என்பது பாடற்பொருள். கமலப் பாதம் உள்ளத்தில் சேர்ந்து இரும்புண்ட நீர்போல உயிரைத் தன்னுள்ளே சேர்த்துக் கொண்டது.

அரும் புண்டரீகத்து அடிஇணைக்கு என் நெஞ்சம்
இரும்பு உண்ட நீர்ஆவது என்றோ?—விரும்பி
அறம் திருந்துங் கோயில் அரங்கா உனைநான்
மறந்திருந்து மேற்பிறவா மல்.[3]

இனிப் பிறவியுண்டாகாதவாறு, பழுக்கக் காய்ச்சிய இரும்பில் படியும் நீர் இரண்டறக் கலப்பதுபோல என்

---

1. திருக்குறுந்தாண்டகம், 5
2. திருவேங்கடத்தந்தாதி, 6
3. திருவரங்கக் கலம்பகம், 95

நெஞ்சம் உன் திருவடித் தாமரையில் இரண்டறக் கலப்பது எந்நாளோ? என்னும் அடியவர் ஏக்கத்தைப் பாடல் அறிவிக்கிறது.

பாவேந்தரும் 'காய்ச்சிய இரும்பிற் கலந்த நீர்' எனும் பழமொழியை ஆள்கிறார்! இயற்கையில் பறவைகளும், விலங்குகளும் கட்டுப்பாடின்றி இன்பம் துய்த்துக் களிக்கின்றன; மனிதனுக்கு அது வாய்க்கவில்லையே! ஒருவேளை அவனுடைய வஞ்சகத் தன்மைதான் இதற்குக் காரணமோ! இது அவருடைய வினா!

மஞ்சம் திருத்தி—உடை
மாற்றி அணிந்தே—கொஞ்சம்

கொஞ்சிக் குலாவிட நாதன் வரும்படி
கோதை அழைக்கையிலே,

மிஞ்சிய சோகம்—மித
மிஞ்சிய அச்சம்—என்

வஞ்சியும் பிள்ளையும் நானிறந்தால் என்ன
வாதனை கொள்வாரோ?

நெஞ்சில் இவ்வாறு—நினைந்து
அங்குரைக் கின்றான்—அடி

பஞ்சைப் பரம்பரை நாமடி—பிள்ளைகள்
பற்பலர் ஏதுக் கென்பான்

கஞ்சி பறித்தார்—எழுங்
காதல் பறித்தார்—கெட்ட

வஞ்சகம் சேர்சின்ன மானிடச் சாதிக்கு
வாய்ந்த நிலை இதுவோ?

மக்களுக்குத்தான் இந்த நிலை. பறவைகளுக்கும், விலங்குகளுக்கும் காதல் பறிக்கும் நிலை இல்லை என்பதைக்

கூறுகையில் பாரதிதாசன் அணிலின் காதல் விளையாட்டை நமக்குக் காட்டுகிறார்.

கீச்சென்று கத்தி அணில்
கிளையொன்றில் ஓடிப்—பின்

வீச்சென்று பாய்ந்து தன் காதலன் வாலை
வெடுக்கென்று தான் கடிக்கும்

ஆச்சென்று சொல்லி—ஆண்
அணைக்க நெருங்கும்—உடன்

பாச்சிய அம்பெனக் கீழ்த்தரை நோக்கிப்
பறந்திடும் பெட்டை அணில்

மூச்சுடன் ஆணோ—அதன்
முதுகிற் குதிக்கும்—கொல்லர்

காய்ச்சும் இரும்பிடை நீர்த்துளி ஆகக்
கலந்திடும் இன்பத்திலே!

ஏச்சுக்கள் அச்சம்—தம்மில்
எளிமை வளப்பம்—சதிக்

கூச்சல் குழப்பங்கள் கொத்தடி மைத்தனம்
கொஞ்சமும் இல்லை அங்கே![1]

அணில்கள் காய்ச்சிய இரும்பிலே பட்ட நீர்த்துளியாகப் பிரிக்கமுடியாத இன்பத்தில் கலந்து திளைக்கின்றனவாம்.

இயற்கையைக் கூர்ந்து நோக்கி அதனை வாழ்வோடு இணைத்துக் காட்டுவதில் கம்பரும், பாரதிதாசனும் ஒத்த போக்கினராயிருக்கின்றனர். 'இரும்புண்ட நீர்' எனக் கம்பர் கூறினார். பாரதிதாசன் 'கொல்லர்

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 61-63

காய்ச்சிய இரும்பிற்பட்ட நீர்' என அதனைத் தெளிவுப் படுத்திக் கூறுகிறார். 'மீளாது' எனக் கம்பர் தன் காட்சிக் கேற்பச் சொன்னார். பாரதிதாசன் தான் காட்டும் காட்சியைக் 'கலந்திடும்' என நயப்படுத்து கிறார். பெரும் புலவர்கள் 'சொல்லாட்சியில்' எத்துணை விழிப்போடு இருக்கின்றனர். என்பதை எண்ணியெண்ணி மகிழ இடமளிக்கின்றன—'மீளாது' 'கலந்திடும்' எனும் இவ்விரு சொற்களும்!

அனுமன் இலங்கையை எரியூட்டிச் சென்ற பிறகு அதனைப் புதுப்பித்த இராவணன், மேல் நடவடிக்கை குறித்துத் தன் அமைச்சர், படைத்தலைவர், தம்பிமார் முதலியவர்களை அழைத்து மந்திராலோசனை நடத் தினான்.

அனைவரும் 'போர் தொடங்க வேண்டுவதே! வேற்று எண்ணத்திற்கே இடமில்லை' என்று ஒரே குரலில் கூறினர். புற்றில் கிடந்த நாகம்போல அவர்கள் அனைவரும் உள்ளம் புழுங்கியிருந்தனர் என்கிறார் கம்பர்.

மற்றுஅவன் பின்னுற மற்றை யோர்களும்—
'இற்றிது வேலம்; எண்ணம்மற்று இல்என்று
உற்றன உற்றன உரைப்பது ஆயினார்—
புற்றுஉறை அரவுஎனப் புழுங்குநெஞ்சினார்![1]

புற்று உறை அரவு எனும் பழமொழியை இங்கே கம்பர் கையாள்கிறார்.

சொர்ணம் ஒரு விதவை. பக்கத்தே உள்ள சுந்தரன் வீட்டுத் தோட்ட வாசல் வழியாக வந்து அவன்

---

1. கம்பராமாயணம், இராவணன் மந்திரப்., பாடல், 46

தாயிடம் கொஞ்சநேரம் பேசிச் செல்வது அவள் வாடிக்கை. ஒரு நாள் அவள் வந்த நேரம் சுந்தரனின் தாய் கடைக்குச் சென்றிருந்தாள். தனித்திருந்தான் சுந்தரன். சுந்தரனும், சொர்ணமும் ஒருவரையொருவர் விரும்பிக் காதல் கொண்டனர். காதல் உலகில் அவர்கள் களித்திருக்கையில் சுந்தரன் தாய் வந்தாள்: அங்குச் சொர்ணத்தின் தாயும் வந்துவிட்டாள்.

பெற்ற இளந்தலைக் கைம்பெண்ணடீ—என்னை
பேதமை? என்றனள் மங்கையின் தாய்;
'சிற்சில ஆண்டுகள் முற்படவே—ஒரு
சின்னக் குழந்தையை நீ மணந்தாய்.
குற்றம் புரிந்தனை இவ்விடத்தே—அலங்
கோல மென்றாள்' அந்தச் சுந்தரன் தாய்
புற்றரவு ஒத்தது தாயர்உள்ளம்—அங்குப்
புன்னகை கொண்டது மூடத்தனம்![1]

சுந்தரன்—சொர்ணத்தின் நிலை கண்ட தாயர் உள்ளம் புற்று அரவு ஒத்தது என்கிறார் கவிஞர் பாரதிதாசன். உணர்ச்சிகளை, கம்பனின் 'புற்றுறை அரவெனப் புழுங்கும் நெஞ்சமும்', பாரதிதாசனின் 'புற்றரவு ஒத்த தாயர் உள்ளமும்' தெற்றென விளங்குகின்றன. உணர்ச்சிகளை வடிக்கையில் பெரும் கவிஞர்கள் ஒன்று போலவே நினைக்கின்றனர் என்பதற்கு இஃது ஒரு சான்றெனலாம்.

## 16. தன்மை—உயர்வு நவிற்சி

சங்க இலக்கிய வருணனைகள் தன்மை நவிற்சியின வாக இருக்கும். கம்பருடைய வருணனைகள் உயர்வு நவிற்சிக்குச் சிறப்பிடம் தந்தன. பாரதிதாசனின்

1. பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 1, பக். 73

வருணனைகள் சங்க இலக்கியப் போக்கையொட்டித் தன்மை நவிற்சியனவாகவும், அதேவேளை கம்பரின் உயர்வு நவிற்குச் சாயல் பூசியனவாகவும் அமைந்துள்ளன. இளங்கோவடிகள் பேரியாறு ஓடிவந்த மலையைப் பாடுகிறார். மலையில் ஆறு வளைந்து ஓடிய காட்சி மன்னன் மார்பில் முத்தாரம் புரண்டது போன்றிருந்தது. குன்றக் குரவையோடு கொடிச்சியர்கள் பாடும் ஒலி, வெறியாட்டுச் செய்கின்ற வேலன் ஒலி, குறத்தியர்கள் தினை குத்துகின்ற ஒலி, புனங்களில் பல்வேறு புட்கள் எழுப்புகின்ற ஒலி, தேனை அழிக்கும் குறவர்கள் எழுப்பும் ஒலி, பாறைமீது அருவி வீழ்கின்ற ஓசை, புலியோடு யானை பொருதுவதால் உண்டாகும் முழக்கம், பரண்மீதிருந்தோன் விலங்குகளைத் துரத்தும் ஓசை, யானைகளைப் பிடிக்க அமைக்கப்பட்டிருந்த பொய்க் குழிகளில் வீழ்ந்த யானைகள் எழுப்புகின்ற பிளிறல் என மலை முழுதும் ஒலி மயமாயிருந்தது. இரு பெரும் வேந்தர்கள் போரிடுகின்ற போர்க்களத்தே எழுந்த ஒலியையொத்து மலையெங்கும் பேரொலி நிறைந்திருந்தது.

குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியும்
தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியும்
நறவுக் கண்ணுடைத்த குறவர் ஓதையும்
பறையிசை அருவிப் பயங்கெழும் ஓதையும்
புலியொடு பொருஉம் புகர்முக ஓதையும்
கலிகெழு மீமிசைச் சேணோன் ஓதையும்
பயம்பில்வீழ் யானைப் பாகர் ஓதையும்
இயங்கு படைஅரவமொடு யாங்கணும் ஒலிப்ப[1] .

---

1. சிலப்பதிகாரம், காட்சிக் காதை, 24-32

மலை இருந்ததாக இளங்கோ இயம்புகிறார். இவை அனைத்தும் மலையில் நாம் காணுகின்ற இயல்பான நடப்புகளே!

கம்பரோ தன் கற்பனைகளை வெளிப்படுத்த வரைக் காட்சியை வரைகிறார். தயரதன் தன் சுற்றத்தோடும் சேனையோடும் இராமன் திருமணம் காண மிதிலைக்குச் சென்றபோது வழியிடையே அனைவரும் சந்திரசயில மலையில் தங்கினர். அம் மலை எத்தகையது? அங்குள்ள ஆண் யானைகள் கைகளை நீட்டி, தேவருலகத்திலிருக்கும் கற்பக மரத்தின் கொம்புகளை ஒடித்துத் தம் உயிரேயன்ன பெண் யானைகள் உண்ணக் கொடுக்கின்றனவாம். வேங்கை மரத்தில் பூத்த மலர்களில் தேனுண்டுகொண்டிருந்த தும்பிகள், வானத்திலுள்ள உடுக்களைக் கண்டு அவை புதிய தேன் நல்கும் சுரபுன்னை மலர்களௌன அவற்றை நோக்கித் தாவினவாம். களிறுகள் தங்கள் கொம்புகளால் தேவருலகத்திலுள்ள தேன் கூடுகளைக் குத்தவே, தேன் சிதறி ஆறாகப் பெருக்கெடுக்கவே அம் மலையிலுள்ள குறவர்கள் அத்தேனாற்றின் மடையை மாற்றித் தங்கள் தினைப் புனத்தில் பாய்ச்சினார்களாம்! சந்திரசயிலம் உயர்ந்த மலையாதலால் நிலவு அதைத் தாண்ட முடியாமல் அதிலே சிக்கிக் கொண்டதாம்! அந் நிலவுக் கண்ணாடியின் ஒரு புறத்தில் சந்திரசயிலத்திலுள்ள குறத்தியர்களும், மறுபுறத்தில் தெய்வ உலக மங்கையர்களும் தங்கள் தங்கள் அழகைப் பார்த்துக் கொள்வார்களாம்.

குப்புறற்கு அருமை யான
குலவரைச் சாரல் வைகி,
ஒப்புறத் துளங்கு கின்ற
உடுபதி ஆடி யின்கண்,

இப்புறத் தேயும் காண்பார்
குறத்தியர் இயைந்த கோலம்;
அப்புறத் தேயும் காண்பார்
அரம்பையர் அழகு மாதோ![1]

மலைவாழ் குறவர்களோ நிலாவைப் பிடித்துத் தம் குறத்தியருடைய நெற்றியைப்போல இருக்கிறதா என ஒப்பிட்டுப் பார்ப்பார்களாம்.

மலைக் குறவர் இல்லங்களின் முன்னே புலிக்குட்டிகள் யானைக் கன்றுகளோடு மகிழ்ந்து விளையாடுகின்றன. இள நிலாவும் குறத்தியரின் குழந்தைகளோடு ஒன்றாகத் தானும் தவழ்ந்து விளையாடுகிறது. அம் மலையின் ஒரு பக்கத்தே குறத்தியர் கூந்தல் பனையின் பாளைகளிலே மலர் மாலையை அணிந்து அது தங்கள் கூந்தலோடு ஒத்திருப்பதைக் காணுகின்றனர். மற்றொரு பக்கம் அரம்பையர்கள் தங்கள் மணிக் கடங்களைக் கழற்றிக் காந்தள் பூவில் அணிந்து அம் மலர் தம் கையோடு ஒத்திருப்பதை நோக்குகின்றனர். தேவருலகில் அரம்பை யர்கள் வெறுத்து, தாம் அணிந்திருந்த மணிமாலை களைக் கழற்றி வீசுகின்றனர். அவை அம் மலையில் விழ அவற்றை அங்குள்ள ஆண் குரங்குகள் அணிந்துகொள்ள அக்கடுவன்களின் அழகைக் கண்டு மந்திகள் பூரிப்படை கின்றன. இவ்வாறு மலைக் காட்சிகளை நம் உள்ளம் இனிக்க உயர்வு நவிற்சியாற் பாடுகிறார் கம்பர்.

பாரதிதாசன், பழைய சங்கப் புலவர்களைப் போல, இயற்கையைத் தன்மை நவிற்சியாகப் பாடுவதே பெரும் பான்மைத்தாயுள்ளது. அவருடைய மலை வருணனையைக் காண்போம்.

---

1. கம்பராமாயணம், வரைக்காட்சி., பாடல் 5

குயில்கூவிக் கொண்டிருக்கும்; கோலம் மிகுந்த
மயில்ஆடிக் கொண்டிருக்கும்; வாசம் உடையநற்
காற்றுக் குளிர்ந்தடிக்கும்; கண்ணாடி போன்றநீர்
ஊற்றுக்கள் உண்டு; கனிமரங்கள் மிக்கவுண்டு;
பூக்கள் மணங்கமழும்; பூக்கள்தோறும் சென்றுதேன்
ஈக்கள் இருந்தபடி இன்னிசைபாடிக் களிக்கும்;
வேட்டுவப் பெண்கள் விளையாடப் போவதுண்டு;
காட்டு மறவர்களும் காதல்மணம் செய்வதுண்டு;
நெஞ்சில் நிறுத்துங்கள், இந்த இடத்தைத்தான்
சஞ்சீவி பர்வதத்தின் சாரல்என்று சொல்லிடுவார்[1]

சஞ்சீவி மலை பற்றிப் பாரதிதாசன் பாடியுள்ள பாடல் இது.

இயற்கை வருணனையில் கற்பனையைக் கலந்து பாடினாலும் அங்கும் தன்மை நவிற்சியே தலைதூக்கி நிற்கச் செய்வது பாவேந்தர் வழக்கம். மிகு கற்பனையை உவமை அல்லது உருவகத்தில் செலுத்தி, நிகழ்ச்சியை இயல்புடையதாக்கிவிடுவது அவருடைய போக்கு. குன்றினைப் பற்றிய அவருடைய மற்றொரு பாடல் :

தங்கத்தை உருக்கிவிட்ட
வானோடை தன்னி லேஓர்
செங்கதிர் மாணிக்கத்துச்
செழும்பழம் முழுகும் மாலை,
செங்குத்தாய் உயர்ந்த குன்றின்
மரகதத் திருமே னிக்கு
மங்காத பவழம் போர்த்து
வைத்தது வையம் காண!

---

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 1

அருவிகள், வயிரத் தொங்கல்!
அடர்கொடி, பச்சைப் பட்டே!
குருவிகள் தங்கக் கட்டி!
குளிர்மலர், மணியின் குப்பை!
எருதின்மேற் பாயும் வேங்கை,
நிலவின்மேல் எழுந்த மின்னல்,
சருகெலாம் ஒளிசேர் தங்கத்
தகடுகள் பார டாநீ!

தலைக்கொன்றாய்க் கதிரைக் கொத்தித்
தழைபசுஞ் சிறக டித்து
மலைப்புன்னை மரத்தின் பக்கம்
வந்திடும் கிளிக் கூட்டத்தில்,
சிலைப்பெண் ணாள்கவண் எறிந்து
வீழ்த்தினேன் சிறகை என்றாள்;
குலுக்கென்று சிரித்தொ ருத்தி
கொழும்புன்னை இலைகள் என்றாள்!

பதட்டமாய்க் கிளிஎன் றெண்ணி
ஆதொண்டைப் பழம்பார்த் தானை
உதட்டினைப் பிதுக்கிக் 'கோவை'
உன்குறி பிழைஎன் றோதும்!
குதித்தடி மான்மான் என்று,
குறுந்தடி தூக்கு வானைக்
கொதிக்காதே நான் அம்மானே
என ஓர்பெண் கூறி நிற்பாள்![1]

இங்கு வளமான கற்பனை இருக்கிறது. கதிரவன் மறைவு, தங்க ஓடையில் மாணிக்கப் பழம் முழுகுவது போல இருக்கிறது. நீலமலை மேல் மாலை வெயில் படுவது உலகமானது மலையின் மரகதமேனிக்குப்

---

1. பாரதிதாசன், அழகின் சிரிப்பு (குன்றம்), பக். 18—19

பவழப் போர்வையைப் போர்த்தியதுபோல இருக்கிறது. அருவிகள் வயிரங்களைச் சேர்த்துத் தொங்கவிட்டது போலக் காட்சி தருகின்றன. கொடிகள் அடர்ந்து வளர்ந்திருப்பது பச்சைப் பட்டாடை விரித்ததொத்துளது. கதிரைக் கொய்து புன்னை மரம் நோக்கிச் செல்லும் கிளிக்கூட்டத்தின் மீது குறப்பெண் கவண்கல் எறிந்தாள். கல் புன்னையில் பட்டு இலை ஒன்று விழுந்தது. கல்லெறிந்தவள் கிளியின் சிறகை வீழ்த்திவிட்டேன் எனக் குதிக்கிறாள். அருகிலிருந்தவளோ 'இல்லை' அது புன்னை இலை என்றாள்! புன்னை இலை கிளிச் சிறகு போன்றிருந்தது என்பதைக் குறிக்கும் அரிய கற்பனை. அதே போல்தான் ஆதொண்டைப் பழம் கிளி போன்றது, கோவைப் பழம் பெண்ணின் உதடு போன்றது, மான் குதிப்பது மங்கை குதித்ததை ஒத்தது—என்பன நயமாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளன. கற்பனையாயினும் இங்கும் இயல்புத் தன்மையே பேசப்பட்டுள்ளது என்பதை உணர முடிகிறது.

பாலை நிலத்தை வருணிப்பதிலும் இப் போக்கை அறியலாம். விசுவாமித்திர முனிவன் தன் வேள்வியைக் காக்க இராம இலக்குவனர்களை அழைத்துச் சென்ற போது வழியிலே இருந்த ஒரு பாலைவனத்தின் தன்மையைக் கம்பர் பாடுகிறார். நிலத்தில் சிறிதும் பசையில்லாது கதிரவன் பருகிவிட்ட இடம் அது. அங்கு வேனிலைத் தவிர வேறு பருவமே இல்லை. நெருப்புக் கடவுளேயாயினும் அந்த இடத்தைக் கருதினால் உள்ளம் வேகும்; கண்டால் கண் வேகும். அதனுடைய வெம்மையைச் சொன்னால் சொன்ன நாக்கும் வெந்து விடும். அந் நிலத்தின் மேல் இருக்கின்ற வானமும் வேகும்; அங்கு வீசுகின்ற வெயிலும் மழையும் இடியும்

கூட வெந்துவிடும் என்னின் அங்கு வேகாத பொருள் வேறெது இருக்கமுடியும்?

படியின்மேல் வெம்மையைப் பகரினும், பகரும் நா
முடியவேம்; முடியமூடு இருளும்வான் முகடும் வேம்;
விடியுமேல், வெயிலும்வேம்; மழையும்வேம்;
மின்னினோடு
இடியும்வேம்; என்னில், வேறு யாவை? வேவாதவே?[1]

பாலையை வருணிக்கின்ற இந்த உயர்வு நவிற்சியைக் கம்பருக்குப் பின் வந்த செயங்கொண்டாரிடமும் காண முடிகிறது. 'இப் பாலைநிலத்தில் உள்ள ஒரு மணலை எடுத்துப் போய்ப் போட்டால் ஏழு கடலும் வற்றி விடுமே! அது தெரியாமல் அன்று குரங்குகள் இராமன் கடலைக் கடக்க அணை கட்டியபோது மலைகளைத் தூக்கிப்போட்டு வீணே வருந்தினவே' எனப் பாலைக் கொடுமையைப் பாடுகிறார் அவர்.

அணி கொண்ட குரங்கினங்கள்
அலை கடலுக்கு, அப் பாலை
மணல் ஒன்று காணாமல்
வரை எடுத்து மயங்கினவே,[2]

பாரதிதாசன் இந்த உயர்வு நவிற்சிகளிலுள்ள நயத்தைத் தன்னுடைய தன்மை நவிற்சியிலேயே காட்டி விடுகிறார்.

ஒட்டும் பொடிதாங்காது—எடுத்து
ஊன்றும் அடியும் சுடும்;

1. கம்பராமாயணம், தாடகை வதை., பாடல் 6
2. கலிங்கத்துப் பரணி, தாழிசை, 96

விட்டும் புறங்குதித்தால்—அங்கும்
வேகும்! உளம்துடிக்கும்!
சொட்டுப் புனல்அறியேன்—ஒன்று
சொல்லவும் யாருமில்லை!
கட்டுடல், செந்தணலில்—கட்டிக்
கந்தக மாய்எரியும்.

முளைத்த கள்ளியினைக்—கனல்
மொய்த்துக் கரியாக்கி
விளைத்த சாம்பலைப்போய்—இனி
மேலும் உருக்கிடவே
கொளுத்தி டும்கானல்!—உயிர்
கொன்று தின்னும் கானல்!
களைத்த மேனி கண்டும்—புறங்
கழுத்த றுக்கும் வெளி![1]

## 17. புறாவின் ஒழுக்கம்

அயோத்தியில் நான்கு திசைகளிலும் ஓங்கிய கோபுர வாயில்கள் உள்ளன. அக்கோபுரங்களில் சுதை மண்ணில் புறாக்கள் உயிருள்ளனவெனத் தோற்றும்படியாகச் செய்யப்பட்டுள்ளன. கோபுரங்களில் புறாக்கள் கூட்டங் கூட்டமாய்க் குடியிருப்பது இயற்கை. கோபுரத்தில் குடியிருந்த ஓர் ஆண் புறா, அங்குச் சுதையால் செய்து வைக்கப்பட்டிருந்த பெண் புறா ஒன்றினைத் தன் பேடை என மயங்கி அருகே சென்று அமர்ந்திருந்தது. உண்மையான பெண் புறா ஆண் புறாவைக் கூவி அழைத்தது. ஆனால் ஆண் புறாவோ அருகிருந்த

1. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 59

கதைப் புறாவைத் தன் பேடையென மயங்கி, அழைத்த குரலுக்குச் செவி சாய்க்காமல் நின்றிருந்தது. கூவி யழைத்த பெண் புறாவும் தன் ஆணின் அருகேயிருந்த பொம்மைப் புறாவை உண்மைப் புறாவென நம்பி விட்டது. தன் சேவல் வேறொரு பெண் புறாவைக் கண்டு மயங்கிக் காதல்கொண்டதாகக் கருதி வருந்தியது. தான் இருக்கத் தன் சேவல். வேறொரு பெண் புறாவை விரும்பியதே; இது என்ன வாழ்வு என உலகையே வெறுத்தது. அருகிலுள்ள கற்பகச் சோலையிலே அது நுழைந்து ஒதுங்கியது. அக்காட்சி அப்புறா இவ்வுலக வாழ்வை வெறுத்து, தேவருலகின் கற்பகப் பூங்காவில் தவம் செய்து கொண்டிருக்கும் முனிவர்களோடு சேர்ந்து தானும் தவம் செய்யச் சென்றதை ஒத்திருந்ததாம்!

தா இல் பொன் தலத்தின்நல் தவத்தினோர்கள்
தங்கு தாள்
பூ உயிர்த்த கற்பகப் பொதும்பர் புக்கு ஒதுங்குமால்—
ஆவி ஒத்த அன்பு சேவல் கூவ வந்து அணைந்திடா
ஓவியப் புறாவின் மாடு இருக்க ஊடு பேடையே,[1]

எனக் கம்பர் பாடுகிறார். ஓவியப் புறா உயிர்ப் புறாவை மயங்க வைக்கும் அளவிற்குக் கலைவண்ணம் பெற்றுத் திகழ்கிறது. கோபுரத்திலிருந்த புறா தெய்வ உலகக் கற்பகச் சோலையில் ஒதுங்கும் என்பதால், கோபுரம் விண்ணைத் தொடும்படி கட்டப்பட்டிருந்தது என்பதைக் கவிஞர் உணர வைக்கிறார். தெய்வ உலகத்துக் கற்பகச் சோலை, கோபுரத்தை ஒட்டியிருந்தது. கோபுரத்தில் அமைக்கப்பட்ட சிற்பம் உயிர்த் தன்மையுடன் செய்யப் பட்டிருந்தது என்பதை உயர்வு நவிற்சியாகக் கூறும்

1. கம்பராமாயணம், நகரப்படலம், பாடல் 23

கம்பர், புறாவின் கற்பொழுக்கத்தை நிலை நிறுத்து கிறார்.

பாரதிதாசன் புறாவின் ஒழுக்கத்தைத் கம்பனை ஒத்துச் சிறப்பாகத் தன்மை நவிற்சியில் பாடியிருக்கக் காண்கிறோம். புறாக்கள் உணவுண்ணும்போது ஒன்றை யொன்று விரட்டுவதில்லை. தாமரைப் பூ இதழ் விரித்ததுபோல வட்டமாய்க் கூடி உண்ணுகின்றன. அவை நீரருந்துவதும், நடப்பதும் தனியழகு. நீர் உள்ள சட்டியின் விளிம்பைப் பற்றி நிற்கும்; கழுத்தை வளைத்து நீரைமொண்டு தலையை மேலே நிமிர்த்திடும்; இமை களைச் சிமிட்டி நாற்புறமும் பார்க்கும்; பின்னர்ச் சட்டியை விட்டிறங்கி அரச நடை நடக்கும்.

இட்டதோர் தாமரைப்பூ
    இதழ்விரிந் திருத்தல் போல
வட்டமாய்ப் புறாக்கள் கூடி
    இரையுண்ணும்; அவற்றின் வாழ்வில்
வெட்டில்லை; குத்தும் இல்லை;
    வேறுவே றிருந்து அருந்தும்
கட்டில்லை; கீழ்மேல் என்னும்
    கண்மூடி வழக்கம் இல்லை

அகன்றவாய்ச் சட்டி ஒன்றின்
    விளிம்பினில் அடி பொருந்தப்
புகும்தலை; நீர்,வாய் மொண்டு
    நிமிர்ந்திடும்; பொன் இமைகள்
நகும்;மணி விழிநாற் பாங்கும்
    நாட்டிடும்; கீழ்இ றங்கி
மகிழ்ச்சியாய் உலவி, வைய
    மன்னர்க்கும் நடை கற் பிக்கும்!

புறா உணவுண்ணும் நேர்த்தியையும் நடைபயிலும் அழகையும் சுட்டிய பாவேந்தர் அடுத்து அதன் ஒழுக்கத்தை உரைக்கின்றார். புறாவின் பேடு தன் ஆண் அன்றி மற்றொன்றுக்கு இணங்காதாம்! ஒரு பெண் புறா எவ்வளவுதான் கவர்ச்சியைக் காட்டினாலும், அதற்குத் தொடர்பில்லாத ஆண் திரும்பியும் பார்க்காதாம். இணையில் ஒன்று இறந்தால்தான் மற்றது வேறொன்றை நாடுமாம்! காதல் வாழ்க்கையை, கற்பு நெறியைப் புறா வைக்கொண்டு அருமையாக விளக்குகிறார் பாவேந்தர்.

ஒருபெட்டை தன் ஆண் அன்றி
    வேறொன்றுக்கு உடன்பட டாதாம்;
ஒருபெட்டை மத்தாப் பைப்போல்
    ஒளிபுரிந்திட நின்றாலும்
திரும்பியும் பார்ப்ப தில்லை
    வேறொரு சேவல்! தம்மில்
ஒருபுறா இறந்திட்டால் தான்
    ஒன்றுமற் றொன்றை நாடும்!

'அவள் தனி; ஒப்ப வில்லை;
    அவன், அவள் வருந்தும் வண்ணம்
தவறிழைக் கின்றான்' இந்தத்
    தகாச்செயல் தன்னை, அன்பு
தவழ்கின்ற புறாக்கள் தம்மில்
    ஒருசில தறுதலைகள்
கவலைசேர் மக்க ளின்பால்
    கற்றுக்கொண் டிருத்தல் கூடும்![1]

புறாவினத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நியதியில், எங்காவது ஒன்றிரண்டு தவறு நடக்குமாயின் அத் தவற்றினைப் புறாக்கள் மனிதனிடத்திலிருந்து கற்றுக்

1. பாரதிதாசன், அழகின் சிரிப்பு (புறாக்கள்), பக். 42-44

கொண்டிருக்குமாம்! ஒருவனுக்கு ஒருத்தி என்பதில் மனிதன் தவறுகிறான்; ஆனால் புறாக்கள் தவறுவதில்லை. மனித இனத்தின் ஒழுக்கக் கேட்டைப் புறாவைக் காட்டி நையாண்டி செய்கிறார் பாவேந்தர்.

## 18. உருவெளித் தோற்றம்

ஒன்றை ஓயாது மனத்தில் நினைத்திருந்தால் எதுவும் அப்பொருளாகவே காட்சிதரும் என்பது உளவியற் கொள்கை. சூர்ப்பணகை சீதையின் அழகைப் பற்றிக் கூறியதும் இராவணன் காமவெறியன் ஆனான். தன் தங்கையின் மூக்கை அறிந்த மானிடர்களின் வலிமை யினையும் மறந்தான்; தன் குலத்திற்கேற்ற பழியையும் மறந்தான். ஆயினும் கேட்ட மங்கையை மறந்திட முடியாதவன் ஆனான். சீதை என்ற பெயரே அவன் சிந்தை முழுதும் நிறைந்தது. காம வயத்தனான அவன் இருளிடையே வெட்டவெளியில் எதிரே ஏதுமில்லா திருந்தும் ஓர் உருவம் நிற்பதாக எண்ணுகிறான். அவ்வுருவம் சீதை தானோ? முன்னர் அவன் சீதையைக் கண்டவன் அல்லன். ஆதலின் தன்முன் நிற்பதாக நினைக் கும் அவ்வுருவம் சீதை தானா என்று துணிய, சீதையை முன்னரே கண்டிருந்த சூர்ப்பணகையை அழைத்து வரச் செய்தான். சூர்ப்பணகை வந்து சேர்ந்தாள். அவளிடம் "தங்காய்! வாள் போன்ற கண்களுடன், மயில் போன்று என் எதிரில் வந்து நிற்கும் இவள்தான் நீ சொன்ன அச்சீதையோ" என்று கேட்டான். அவளோ, "தாமரைக் கண்ணும், செம்பவள வாயும், தடந் தோள்களும், தாழ்ந்து நீண்ட கைகளும், மாலை பூண்ட மார்பும் கொண்டு, அஞ்சனக் குன்றம் போன்று நிற்கின்ற இவன் அந்த இராமனே!" என்றாள்.

வெட்டவெளி; அங்கு உருவம் ஏதுமில்லை; என்றாலும் ஒரு பெண் நிற்பதாகக் கருதிய இராவணன் அவள் சீதையோ எனக் கருதுகிறான். உருவமே இல்லாத அந்த இடத்தைக் காட்டி, 'இவள் சீதையா' என்ற இராவணனிடம் 'அவனே இராமன்' என்றாள் சூர்ப்பணகை. இராவணன் உள்ளத்தில் சீதையையே நினைத்திருக்கிறான்; சூர்ப்பணகையால் தன் உள்ளத்திலிருந்து இராமனை அகற்ற முடியவில்லை. தன் மனம் கொண்ட சீதையே எதிரில் நிற்பதாக இராவணன் எண்ண, சூர்ப்பணகையோ இராமனே அங்கு நிற்பதாக உணருகிறாள். வெட்ட வெளியில் உருவம் ஏது மின்றியிருக்க. அவரவர் உள்ளத்தே நிறைந்திருப்போர், எதிரில் நிற்பதாக உணருகின்ற உள்ள நிலையை - உருவெளித் தோற்றத்தைக் கம்பர் நயம் சொட்டப் படைத்துள்ளார். இராவணன் சூர்ப்பணகையிடம்,

பொய்ந் நின்ற நெஞ்சின் கொடியாள்
புகுந்தாளை நோக்கி,
நெய்ந் நின்ற கூர் வாளவன்,
'நேர் உற நோக்கு; நங்காய்!
மைந்நின்ற வாள்-கண் மயில்
நின்றென வந்து, என் முன்னர்
இந்நின்றவள் ஆம்கொல்,
இயம்பியசீதை?' என்றான்.[1]

அவளோ,

"செந்தாமரைக் கண்ணொடும்,
செங்கனி வாயினோடும்,
சந்துஆர் தடந் தோளொடும்,
தாழ் தடக் கைகளோடும்,

1. கம்பராமாயணம், சூர்ப்பணகை சூழ்ச்சி., பாடல் 148

அம்தார் அகலத் தொடும்
அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவன் ஆகும்,
அவ் வல் வில் இராமன்" என்றாள் [1]

கம்பன் படைத்துக் காட்டிய உருவெளித் தோற்றப் படைப்பைப் பாரதிதாசனும் கையாள்கிறார். மகிணன் என்பான் கிள்ளை என்பாளைக் காதலிக்கிறான்' அவளையே நினைந்து வாடலானான், அவன் கண்ணெதிரில்,

வெயில் தழுவியதோர் வெறுவெளி தனில், அவ்
அயில்விழிக் கிள்ளை அழகு காட்டினாள்,
மங்கா உடலெனும் மாற்றுயர் பொன்னையும்,
பொங்கும் சிரிப்புப் புத்தொளி முகத்தையும்

வகைபெறு கழுத்து வலம்புரிச் சங்கையும்
விழிநீ லத்தையும், மொழிஅமு தத்தையும்
இதழ்ப்பவ ளத்தையும், 'இந்தா' என்றே
எதிரில் வைத்தே, எழிலுறு கிள்ளை தன்
அன்பெனும் நீர்வார்த்து அளித்து நின்றாள்.
இன்பத்தை மகிணன் இருகையால் தாவினான்.
இருவிழி ஏமாந்து போக இஃதுஅவள்
உருவெளித் தோற்றம்என்று உணரலானான்.[2]

எதிர்பாராத முத்தம் என்ற நூலிலும் பொன்முடி தன் காதலி பூங்கோதையின் உருவெளித் தோற்றத்தைக் காண்பதைப் பாரதிதாசன் பாடியிருக்கிறார்.

---

1. கம்பராமாயணம், சூர்ப்பணகை சூழ்ச்சி, பாடல் 149
2. பாரதிதாசன், காதலா கடமையா, பக். 33

சிந்தையில் தெரிவாள்; கையால்
தீண்டுங்கால் உருவம் மாறி
அந்தரம் மறைவாள்; கூவி
அழும்போதும் அலதயே செய்வாள்.[1]

ஒன்றைப் பார்த்து, பார்க்கும் அப்பொருளைத் தான் நினைத்துள்ள பொருளாகக் காண்பது ஒரு நிலை. மிதிலை வீதியிற் சென்ற இராமன் கன்னிமாடத்தில் சீதையைக் கண்டான்; உளம் கொண்டான். முனிவனுட னும் தம்பியுடனும் மாளிகை சேர்ந்தான். அவன் இரு கண்ணினுள்ளும் கருத்துள்ளும் சீதையையே கண்டான். காணும் பொருள் யாவும், சீதையாகவே அவனுக்குக் காட்சி தந்தது.

தெருள்இலா உலகில், சென்று, நின்று வாழ்
பொருள்எலாம், அவள் பொன்உரு ஆயவே![2]

இராமன் தான் காணுகின்ற பொருளிலெல்லாம் சீதை யின் தோற்றத்தைக் காண்கிறான்.

பொன்முடி என்பான் பூங்கோதையை நினைந்தவ னாகவே இருந்தான். ஆதலால்

வட்டநன் மதியில் எல்லாம்
அவள்முக வடிவம் காண்பான்!
கொட்டிடும் குளிரில், அப்பூங்
கோதைமெய் இன்பம் காண்பான்!
எட்டுமோர் வானம்பாடி
இன்னிசை தன்னில் எல்லாம்

---

1. பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், பக். 16
2. கம்பராமாயணம், மிதிலைக் காட்சி., பாடல் 142

கட்டிக் கரும்பின் வாய்ச்சொல்
கவிதையே கண்டு செல்வான்.[1]

எனப் பொன்முடியின் நிலையைப் பாவேந்தர் எதிர்பாராத முத்தம் என்னும் நூலில் பாடுகிறார். இங்கே, காதலன் ஒருவன் தான் உணரும் பொருள்களின் இயல்பைத் தன் காதலியோடு இணைத்து நினைக்கும் தன்மையைக் கவிஞர் சுட்டுகிறார்.

அன்னம் என்னும் அரச மகளைக் காதலிக்கும் வேலன் என்பான் தான் பார்க்கும் அனைத்திலும் அவளையே காணுகின்றான்.

ஆடப்போம் புனலில்எல்லாம் அவளே! காற்றில்
அசையப்போம் பொழிலில்எல்லாம் அவளே! கண்ணால்
தேடப்போம் பொருளில்எல்லாம் அவளே! நேரில்
தின்னப்போம் சுவையில்எல்லாம் அவளே! வண்டு
பாடப்போம் மலரில்எல்லாம் அவளே! மேற்கில்
படுகதிரில் அவள்வடிவே காண்பேன் என்று
வாடக், கண் துயிலாமல் இருந்தான் வேலன்;
மலர்ந்திட்ட காலையிலும் அவளைக் கண்டான்![2]

'பொருள் எலாம் அவள் பொன்உரு ஆயவே' எனும் கம்பன் கூற்றுக்கு விளக்கவுரைபோல இப்பாடல் அமைந் திருக்கிறது. பார்க்கும் பொருளை தான் நினைத்துள்ள பொருளாகக் காண்பது இந்நிலை. உருவெளித் தோற்றம் இதனின்று மாறுபட்டது. ஒன்றுமேயில்லாத வெட்ட வெளியில் தனது உள்ளத்தில் உள்ள உருவத்தைக் காண் பதாக எண்ணுவது உருவெளித்தோற்றம். இதற்கான

1. பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், பக். 52
2. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, பக். 145

இலக்கணத்தை "அவன் வடிவழகன், அவ்வடிவழகு தானே நெஞ்சிலே ஊற்றிருக்க, அதனையே பாவித்த காரணத்தாலே, அப்பாவனையின் மிகுதியாலே, கண் கூடாகக் காண்பதே போன்றதாய், பின்பு கண்கூடாகவே பார்ப்பதாக நினைத்து, அணைக்கக் கணிசித்துக் கையை நீட்டி - அப்போதே பெறாமையாலே, தமக்குப் பிறந்த ஆற்றாமையை, எம்பெருமானோடே கலந்து பிரிந்து உருவு வெளிப்பாட்டாலே நோவுபடுகிறாள் ஒரு பிராட்டி" எனத் திருவாய்மொழி உரை தெளிவுபடுத்து கிறது.

நம்மாழ்வார் திருவாய்மொழி 5ம் பத்து 5ஆவது பதிகமும், 7ம் பத்து 7ஆவது பதிகமும் 'உருவெளிப் பாடு' காட்சியில் அமைந்துள்ளன. இந்த இரு பதிகங்களின் சுருக்கமாக, மணவாள மாமுனிகள் பாடிய திருவாய் மொழி நூற்றந்தாதி இவ்வுண்மையைத் தெள்ளிதாக வெளிப்படுத்துகிறது.[1]

எங்ஙனே நீர்முனிவது என்னை இனி நம்பிஅழகு
இங்ஙனே தோன்றுகின்றது என்முன்னே—அங்ஙன்
உருவெளிப் பாடா உரைத்த தமிழ்மாறன்
கருதுமவர்க்கு இன்பக் கடல்.[2]

உருவெளித் தோற்றக் கருத்தை இவை கொண்டிருந் தாலும் இதனை நாடக வடிவில் தெளிவாக முதலில் அமைத்துத் தந்தவன் கம்பனே எனலாம். கம்பன் காட்டிய முறையிலேயே பாரதிதாசனும் உருவெளித் தோற்றக் காட்சியை உருவாக்கிச் செல்கிறார்.

1. நம்மாழ்வார், திருவாய்மொழி, 7ம் பத்து 7வது பதிகத்து முன்னுரை
2. திருவாய்மொழி நூற்றந்தாதி, 5.5.

## 19. தமிழ்க் காதல்

கம்பர் தமிழிடத்துக் கொண்டிருந்த மிகுபற்றை அவர் காப்பியத்தின் வாயிலாக அறிய முடிகிறது. தேன் - தமிழைப் போன்று சுவையானது[1]; தென்றல் - தமிழைப் போன்று குளிர்ச்சியானது[2] என உளங் குளிர்ந்து பாடுகிறார். தென்திசையைத் தமிழ் வழங்கும் பெருமையுடைய திசையெனப் போற்றுகிறார்.[3] வண்டொலியைத் தமிழ்ப் பாட்டெனவும்[4], யாழினைத் தமிழ் யாழெனவும் இசைத்து மகிழ்கிறார்[5]. தமிழ் எல்லை காணாப் பரப்புடையது[6]; உலகளாவியது[7]; என்றும் நிலைத்திருப்பது[8] எனப் பாடிப் பரவுகிறார்.

கம்பர் தமிழ்க் கவிஞர்களிடம் கொண்டிருந்த மதிப்பு அளவிடற்கரியது. சங்கப் புலவர்களைச் சான்றோர் என அழைத்துப் பெருமை கொள்கிறார். 'அவி அகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவிய...சான்றோர் கவி'[9] எனும் கம்பர் பாடலில் 'சான்றோர்' என்ற சொல் சங்கப் புலவர்களைக் குறிக்கிறதெனலாம். தன் சமகாலத்திய

---

1. தமிழ் நிகர் நறவம் (பிலம்புக்கு., 37)
2. தண்தமிழ்ப் பசுந்தென்றல் (ஊர்தேடு., 210) தண்தமிழ்த் தென்றல் (அயோமுகி., 6)
3. வண்தமிழுடைத் தென்திசை (பிலம்புக்கு., 2)
4. வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரை (பம்பை வாவி., 28)
5. தண்தமிழ் யாழ் (சித்திரகூட., 28)
6. தமிழ் எனும் அளப்பரும் சலதி (தாடகை., மிகை. 20 - 14)
7. நீண்ட தமிழ் (அகத்திய., 36)
8. என்றுமுள தென்தமிழ் (அகத்திய., 47)
9. கம்பராமாயணம், சூர்ப்பணகை, பாடல் 1

புலவர்களை அவர் 'முத்தமிழ்த் துறையின் முறை நோக்கிய உத்தமக் கவிஞர்'[1] என்கிறார். கவிஞர் களுடைய சொற்கள் அழகும், சுவையும், பொருட் சிறப்பும், நுட்பமும், இனிமையும் ஒருங்கு சேர்ந்தவை என்பதை.

செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளின்
    சீரிய கூரிய தீம்சொல்
வவ்விய கவிஞர்......[2]

என்னும் தொடரால் புலப்படுத்துகிறார்.

பல்வேறு இயல்பமைந்த மொழிகளில் சிறந்த அறிவமைந்து, எல்லையிலாத நூல்களை நுணுகி ஆராய்ந்து, குறை நீக்கி, நிறை நன்மை பொருந்திய கவிஞர்கள் சொல்வளக் குறைவால் கவலமாட்டார்கள். சொற்கள் அவர்களுக்குப் பணி செய்து நிற்கும். அவர் களுடைய சொற்களை வெல்லும் சொற்கள் இருக்க முடியாது என்பதை கவிஞர்களிடமிருந்து வெளிப்படும் சொற்களைப் போல எடுக்க எடுக்கக் குறையாத அம்பு களைக்கொண்ட தூணியை இராமன் முதுகில் அணிந் தான் என்று சொல்வதன் வாயிலாக உணர வைக்கிறார்.

பல்இயல் உலகுறு பாடை பாடுஅமைந்து,
எல்லைஇல் நூற்கடல் ஏற நோக்கிய,
நல்இயல், நவைஅறு, கவிஞர்நா வரும்
சொல்எனத் தொலைவுஇலாத் தூணி தூக்கினான்.[3]

---

1. கம்பராமாயணம், பாயிரம். பாடல் 8
2. மேலது, நகரப் படலம், பாடல் 1
3. மேலது, முதற்போர் , பாடல் 114

கவிஞர்கள் முடிவிலாச் சொற்பெருக்கமும், கூரிய சொல் லாட்சியும் உடையவர்கள் என்பதைப் பாடல் தெளிவு படுத்துகிறது.

'கம்பன் பிறந்த தமிழ்நாடு' எனப் பாரதி பெருமை கொள்கிறார், கம்பரோ இத் தமிழ்நாட்டைத் தேவர் உலகினும் சிறந்ததெனப் போற்றிப் புகழ்கிறார்.

அத்திருத் தகுநாட்டினை அண்டர் நாடு
ஒத்திருக்கும் என்றால்,உரை ஒக்குமோ—
எத்தி றத்தினும் ஏழ்உலகும் புகழ்
முத்தும் முத்தமிழும் தந்து முற்றலால்?[1]

இப்பாடலுக்கு, "அந்தப் பாண்டிய நாடானது முத்துக் களையும், முத்தமிழாகிய மூவகை அமிழ்தங்களையும் தருகின்றதனால், ஒருவகை அமிழ்தத்தை மாத்திரமே கொடுக்கின்ற தேவ உலகத்தைப் 'புலவர் நாடு' என்ற பெயர் ஒற்றுமையால் (புலவர் - தேவர்களும் வித்துவான் களும்) அந்தப் பாண்டிய நாட்டிற்கு ஒப்பாகும் என்று சொல்லுதல் சிறிதும் தகாது" என உரை விளக்கம் தருகிறார் வை.மு. கோபாலகிருட்டிணமாச்சாரியார்.[2]

முத்தமிழ் தேவர் உலகில் இல்லாதது. அதனால் தான், "தமிழே! நான் உன்னாலேயே வாழ்கிறேன். உண்டவர்களை என்றும் வாழச் செய்யும் அமிழ்தமே யாயினும் நீயிருக்க நான் அதனை வேண்டேன்" என்கிறார் தமிழ்விடு தூது ஆசிரியர்.

---

1. கம்பராமாயணம், சம்பாதி., பாடல் 52
2. கம்பராமாயணம், வை.மு.கோ. உரை, கிட்கிந்தா காண்டம், பக். 772

இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்.[1]

"இவ்வுலகில் கல்வியிற் சிறந்த அறிஞர்களுடன் கூடியிருந்து அளவளாவி மகிழ்கின்ற இன்பத்தைவிட, தேவ உலக இன்பம் பெரிதாக இருந்துவிடமுடியாது"[2] என்கிறார் நாலடிப் புலவர் ஒருவர். மணிமேகலைக் காப்பியத்தில் ஒரு காட்சி. மாநிலத்தில் மன்னுயிரைப் பசிப்பிணியினின்று காத்த ஆபுத்திரன்முன் இந்திரன் தோன்றி, 'உனக்கு வரம்தர வந்துளேன். இந்திர உலக போகம் எதுவாயினும் கேள்' என்றான். ஆபுத்திரன் 'தேவர்கோனே! பயன் கருதாது நல்லறம் செய்வோர் இந்திர போகத்தையும் விரும்பார். தேவர் நாட்டில் என்ன உள்ளது? அறஞ்செய் மாந்தர், பிற உயிர் ஓம்புநர், நல் தவம் புரிவோர், பற்று அற முயல்வோர் இவர்கள் யாரும் அங்கில்லையே! என் கையிலுள்ள இப் பாத்திரம் வருந்தி வந்தவர் அரும்பசி தீர்க்கும்.

வருந்தி வந்தோர் அரும்பசி களைந்து, அவர்
திருந்துமுகம் காட்டும், என் தெய்வக் கடிஞை.

பசியால் சோர்ந்து வந்தோர் பசியாறியதும் பெறுகின்ற முகக் களையைக் காணுகின்ற இன்பத்தைவிடச் சிறந்த இன்பம் விண்ணுலகத்தில் என்ன இருக்கிறது?"[3] என நகைத்துக் கூறினான். இங்கே பசியைப் போக்குவதால் பெறும் இன்பமே பேரின்பம் என்பது சுட்டப்படுகிறது.

---

1. தமிழ்விடு தூது, 151
2. நாலடியார், 137
3. மணிமேகலை, 14 : 44-45

'தமிழிருக்க அமிழ்து எதற்கு?' எனக் கேட்கிறார் தமிழ்விடு தூது ஆசிரியர். கல்வியாளர்களுடன் கலந்து மகிழும் இன்பத்தைவிட தேவ உலக இன்பம் பெரிதல்ல என்கிறார் நாலடிப் புலவர். பசித்து வந்தோர் அரும்பசி களைந்து அவர் திருந்து முகம் காணுகின்ற வாய்ப்பு தேவர் உலகில் இல்லையாதலால் 'வேண்டேன் விண்ணுலகு' என்கிறான் ஆபுத்திரன். கம்பரோ முத்தமிழ் இல்லாத தேவர் நாடு தமிழ் நாட்டிற்கு ஒப்பாகாது என்கிறார்.

தமிழினிமையைப் பெண் இனிமையுடன் இணைத்துப் பாடுவது உண்டு. கன்னி மாடத்தே நின்ற சீதை பொன்னின் ஒளியாகவும், மலரின் மணமாகவும், தேனின் சுவையாகவும், தமிழின் இனிமையாகவும் திகழ்ந்தாள் எனக் கம்பர் பாடுகிறார்.

பொன்னின்சோதி, போதின்நாற்றம், பொலிவேபோல்
தென் உண் தேனின் தீம்சுவை, செஞ்சொற் கவி இன்பம்-
கன்னிம் மாடத்து உம்பரின் மாடே, களிபேடோடு
அன்னம் ஆடும் முன்துறை கண்டு, அங்கு
அயல்நின்றார்,[1]

பொன் உடல் - போதின் மணம் - தேனின் சுவை - கவிதை இன்பம் ஆகிய இவற்றின் கூட்டலே சீதை. இதே கருத்தை, தோழிமார் புடைசூழச் சீதை மன்னர் வீற்றிருந்த மண்டபத்தை அடைந்தாள் என்று சொல்லும்போதும் கம்பர் குறிப்பிடுகின்றார்.

---

1. கம்பராமாயணம், மிதிலைக் காட்சி., பாடல் 23

பொன்னின்ஒளி, பூவின்வெறி, சாந்துபொதி சீதம்,
மின்னின்எழில், அன்னவள்தன் மேனிஒளி மான,
அன்னமும், அரம்பையரும், ஆர்அமிழ்தும் நாண,
மன்அவை இருந்த, மணி மண்டபம் அடைந்தாள்.[1]

சீதை மின்னற் கொடியாகவும் பொலிந்தாள்.

சதகோடி
மின்சேவிக்க மின்அரசு என்னும்படி நின்றாள்.[2]

மின்னற்கொடிதான் பெண்ணுருக்கொண்டு மண் நிலத்தில் வந்து நிற்கிறதோ எனச் சீதையைக் கண்ட இராமன் வியக்கிறான்.

விண்ணின் நீங்கிய மின்உரு, இம்முறை
பெண்ணின் நல்நலம் பெற்றது உண்டேகொலோ?[3]

கம்பரின் இந்த வருணனைகளையெல்லாம் பாரதிதாசன் எளிமையாக்கி இனிமை கூட்டிச் சிறப்பிக்கிறார். அமுதவல்லியைப் பார்த்த உதாரன்,

மின்னற் குலத்தில் விளைந்ததோ?—வான்
வில்லின் குலத்தில் பிறந்ததோ?
கன்னல் தமிழ்க்கவி வாணரின்—உளக்
கற்பனையே உருப் பெற்றதோ?
பொன்னின் உருக்கிற் பொலிந்ததோ?—ஒரு
பூங்கொடியோ? மலர்க் கூட்டமோ?[4]

பெண் முத்தமிழ்க் கலவையாற் செய்யப்பட்டவள் என்கிறார் பாரதி.

---

1. கம்பராமாயணம், கோலங்காண்., பாடல் 28
2. மேலது, மிதிலைக் காட்சி., பாடல் 31
3. மேலது, மிதிலைக் காட்சி., பாடல் 140
4. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, பக். 23

கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே, பண்கூத்து எனும்இவற்றின் சாரம்எலாம்
ஏற்றி, அதனோடே இன்னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதுஅவளின் மேனி வகுத்தான் பிரம்மன்......[1]

இயற்றமிழ்ச் சாற்றில் - இசை, கூத்துத் தமிழின் சாரத்தை ஏற்றி, காதல் வெயிலில் காய வைத்த இனிமைக் கட்டியாம் பெண். பெண் தமிழ்போன்று இனிமையானவள் என்பதைப் பாவேந்தரும் பாடுகிறார்.

அமிழ்தைத் தந்தால் தமிழைத் தள்ளி
அதைநீ உண்பாயா?
அமிழ்தும் தமிழுக்கு அதிக இனிப்பா?
அதுவா எனை வளர்க்கும்?
தமிழ்தான் நீயோ நீதான் தமிழோ
தமிழப் பெண்ணே சொல்?
தமிழையும் பார் என்னையும் பார்
வேற்றுமையே இல்லை![2]

மங்கையர் தமிழ்போன்ற இனிமையுடையவர் என்று மற்றவர்களைப்போலப் பாடியுள்ள பாரதிதாசன் ஒருபடி மேலே போய்,

மங்கை ஒருத்தி தரும் சுகமும்—எங்கள்
மாத்தமிழ்க்கு ஈடில்லை என்றுரைப்போம்![3]

எனப் பாடுகிறார்.

---

1. பாரதியார் கவிதைகள் (குயிற் பாட்டு), பூம்புகார் பிரசுரம், பக். 418
2. பாரதிதாசன், இளைஞர் இலக்கியம், பக். 11
3. பாரதிதாசன், பன்மணித் திரள், பக். 85

பாரதிதாசன் கம்பருக்கு ஆயிரம் ஆண்டுகட்குப் பிறகு தோன்றியவர். அந்நிய ஆட்சிக்கு அடிமைப் பட்டுத் தமிழ் உரிமையிழந்திருந்த காலத்தில் பாரதிதாசன் தோன்றியதால் அவர் மொழி உரிமைக்குக் குரல் கொடுக்க வேண்டியவர் ஆனார். தமிழ்மொழியின் இனிமை, தொன்மை, சிறப்பு ஆகியவற்றைப் பாடுவதை விட, தமிழ் விடுதலைச் சிந்தனையை மிகுதியும் பாட வேண்டிய இன்றியமையாமை அவருடைய காலக் கட்டாயம் ஆயிற்று. ஆதலால் "தமிழனின் உயிர் தமிழே ஆகும்; தமிழ்ப் பற்றில்லாதவன் தமிழனே அல்லன்; அவன் உயிருடையவனும் அல்லன்"[1] என்பதை வலியுறுத்தினார்.

விந்தைத் தமிழ் மொழி எங்கள் மொழி—அது
வீரத் தமிழ் மக்கள் ஆவி என்போம்.[2]

விளக்கிடும் இயல் முதிர்ந்தும்
வீறுகொள் இசை அடைந்தும்
அளவிலா உவகை ஆடல்
தமிழே! நீ என்றன் ஆவி.[3]

உடலியக்கும் நல்லுயிரே
உயிரியக்கும் நுண்கலையே
மக்கள் வாழ்வாம்
கடலியக்கும் சுவைப்பாட்டே
கண்ணான செந்தமிழே![4]

---

1. பாரதிதாசன், பிசிராந்தையார் (நாடகம்), பக். 47
2. பாரதிதாசன், பன்மணித் திரள், பக். 85
3. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, பக். 62
4. பாரதிதாசன், தமிழியக்கம், பக். 6

நம்நாடு தமிழ்நாடு நாமெல்லாம் தமிழ் மக்கள்
இன்பம் கோரி இந்நிலத்தில் வாழ்வதெனில்
மூச்சாலே!
அம்மூச்சுத் தமிழே![1]

எனப் பாடுமிடந்தோறும் தமிழை உயிராகச் சொல்வதைக் காணமுடிகிறது. மேலும்,

நல்உயிர் உடம்பு செந்தமிழ் மூன்றும்
நான் நான் நான்[2]

எனத் தமிழ் உடலாகவும், உயிராகவும் விளங்குவதையும் காட்டுகிறார். தமிழ் உயிர் மட்டும் அன்று; உயிரற்ற எலும்புக் கூட்டுக்கும் உயிரூட்டும் ஒப்பற்ற தன்மை வாய்ந்தது என்பார் அவர். 'தமிழ் எனும் மருந்தைப் பூசியதும் உயிரற்ற எலும்புக் கூடாக இருந்த தமிழகம் உயிர்பெற்று உலவுகிறது' எனும் கருத்துக்கொண்ட ஒரு பாடல்வழி தமிழ்நாட்டை உயிர்ப்பித்துக்கொண்டிருப்பது தமிழே என்ற கருத்தை விளக்குகிறார்.[3]

தமிழ் வாழ, வளர, தளராது தொண்டாற்ற இளைஞர்களை அழைக்கிறார். வளர்ந்துவரும் வையத் தேவைகளுக்கேற்ப இந்நாட்டு இளைஞர்கள் துறைதோறும் துறைதோறும் தொண்டாற்றித் தமிழைச் செழிக்கச் செய்ய வேண்டுமென்பது அவர் ஆசை.

பண்டைநலம் புதுப்புலமை
பழம்பெருமை அனைத்தையும்நீ
படைப்பாய்! இந்நாள்
தொண்டு செய்வாய்! தமிழுக்குத்

---

1. பாரதிதாசன், குறிஞ்சித் திட்டு. பக். 198
2. பாரதிதாசன், இளைஞர் இலக்கியம், பக். 9
3. பாரதிதாசன், குயில் பாடல்கள், பக் 116—118

துறைதோறும் துறைதோறும்
துடித்தெ ழுந்தே[1]

என எப்பணிக்கும் முதற் பணியாய்த் தமிழ்ப் பணியைக் கொள்ள வேண்டுமென ஊக்கப்படுத்துகிறார்.

"கம்பர் காலம் வடமொழிக் கலப்பு மிகுந்த காலம்; எனினும் தமிழ் ஒலி வரம்பும் மயக்க வரம்பும் பெரும் புலவர்களால் புறநடையின்றிப் போற்றப்பட்டன. அங்ஙனம் போற்றியவருள் புலமை மிக்கவர் கம்பர். இராமாயணப் பாத்திரங்களை எள்ளளவும் தமிழ் மொழிமை குன்றாது செய்யுட்படுத்தினார். இராமன், இலக்குவன், அநுமன், சுக்கிரீவன், கும்பகருணன், வீடணன், இரணியன் என்றவாறு முதல் இடை இறுதி எழுத்துக்களை இலக்கணம் பொருந்த ஆண்டார். வச்சிர தந்தனை வச்சிரத்து எயிற்றவன் எனவும், மகா பார்சுவனை மாபெரும் பக்கன் எனவும், சூரிய சத்துருவைச் சூரியன் பகைஞன் எனவும் தூமி ராட்சனைப் புகைநிறக் கண்ணன் எனவும் பிறமொழிப் பெயர்களைக் கம்பர் பொருள் பெயர்த்துள்ளார்."[2] இவ்வாறு கம்பர் தமிழ் இலக்கணச் சிறப்பும் மொழிச் சிறப்பும் மேம்பட எழுதியுள்ளார் எனினும், பாரதிதாசன் தன் காலத்திய நிலையை மனத்திற்கொண்டு, பாரதியாரைப் போற்றிப் பாடுகின்ற பாடலில்

பன்னீ ராயிரம் பாடிய கம்பனும்
இப்பொது மக்கள்பால் இன்தமிழ் உணர்வை
எழுப்பியது உண்டா? இல்லவே இல்லை[3]

---

1. பாரதிதாசன், தமிழியக்கம், பக். 9
2. டாக்டர் வ.சுப.மாணிக்கம், கம்பர், பக். 58-59
3. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 2, பக். 75

என்கிறார். பாரதி தூண்டிய உணர்வைக் கம்பரிடம் காண முடியவில்லை என்கிறார்.

அடிமைப்பட்டிருந்த தமிழை - ஆட்சிச் சிறப்பிழந்திருந்த தமிழை உயர் நிலைக்குக் கொண்டுவர வேண்டுமெனும் உணர்வினால் பாரதி,

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்;
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு,
நாமம்அது தமிழரெனக்கொண்டுஇங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலகம்எலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்![1]

என்று பாடினார். நாமக்கல் கவிஞர் அவர்கள்.

திருமுடி சூட்டிடுவோம்
தெய்வத் தமிழ் மொழிக்கு -
திருமுடி சூட்டிடுவோம்

அன்னையை மீட்டும் அவள்
அரியணை மீதிருத்தி

அகிலம் முழுதும் அவள் மகிமை
விளங்கச் செய்வோம்![2]

என உரிமை இழந்திருக்கும் தமிழ் மொழி - தாய்மொழி உரிமை பெறவேண்டுமெனப் பாடுகிறார். இந்தி தமிழ் நாட்டில் நுழைக்கப்பட்டபொழுது பாவேந்தர்

---

1. பாரதியார் பாடல்கள், பூம்புகார் பிரசுரம், பக். 46
2. நாமக்கல் கவிஞர் பாடல்கள், லிப்கோ பதிப்பு, பக். 339

இந்திக்குத் தமிழ் நாட்டில் ஆதிக்கமாம்—நீங்கள்
எல்லோரும் வாருங்கள் நாட்டினிரே!
செந்தமிழ்க்குத் தீமை வந்த பின்னும்—இந்தத்
தேகம் இருந்தொரு லாபமுண்டோ[1]

எனக் கொதித்துக் குமுறினார். இந்த உணர்வுகளைக் கம்பன் எழுப்ப வேண்டிய வாய்ப்பில்லை - இன்றியமை யாமையும் இல்லை. இன்றைய நிலையைக் கருத்திற் கொண்டு அன்றைய கம்பரைப் பாவேந்தர் கருதிப் பார்க்க வேண்டியதில்லை.

அகத்தியர் பொதிய மலையிலிருந்து தமிழ் வளர்த்த தாகச் சொல்லப்படுகிறது. தமிழுக்கு இலக்கணம் செய்தவர் அகத்தியர் என்றொரு குறிப்பும் உண்டு. சிவபெருமான் வடமொழி இலக்கணத்தைப் பாணினிக் கும் தமிழ் இலக்கணத்தை அகத்தியர்க்கும் அருளிச் செய்தனன் என்பாருண்டு.

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி
அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை உலகமெலாம்
தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்...[2]

என்கிறார் சிவஞான முனிவர். அகத்தியர் கடலைக் குடித்தவர், விந்திய மலையை அழுத்தி நிலத்தினுள் புதையுண்ணச் செய்தவர் என்ற கதைகளும் உண்டு. இராமனை அழிக்கப் பரதனுடன் சென்ற சேனை வழியிடையே நீர் முழுதும் வற்றும்படிக் குடித்தலாலும்,

---

1. பாரதிதாசன், பல்மணித் திரள், பக். 85
2. காஞ்சிப் புராணம், தழுவக் குழைந்த படலம், பாடல் 248

அறத்தை நிலைநாட்டச் சென்றதாலும், எதிர்ப்பட்ட மலைகள் அழுந்துமாறு மிதித்துச் சென்றதாலும், அச்சேனை தமிழ்த் தலைவனாகிய அகத்தியனை ஒத்திருந்தது என்கிறார் கம்பர்.

அலை நெடும் புனல் அறக் குடித்தலால், அகம்
நிலைபெற நிலை நெறி நிறுத்தலால், நெடு
மலைகளை மண் உற அழுத்தலால், தமிழ்த்
தலைவனை நிகர்த்தது—அத் தயங்கு தானையே![1]

கம்பர் அகத்தியரைக் குறிப்பிடும் இடங்களி லெல்லாம் அவரைத் தமிழோடு இணைத்தே பேசுகிறார். திருமால் தன் அடியால் உலகம் முழுவதையும் அளந்தது போல அகத்தியர் தமிழால் உலகை அளந்தார்; சிவன் கொடுத்த தமிழை அகத்தியர் உலகிற்குத் தந்தார்; என்றும் நின்று நிலைத்திருப்பதாகிய தமிழைப் பரப்பி அகத்தியர் புகழ் கொண்டார் - என்பவை கம்பர் அகத்தியர்க்குச் சூட்டும் புகழாரங்கள்.

நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்.[2]
தழல்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் தந்தான்.[3]
என்றும்உள தென்தமிழ் இயம்பி இசை கொண்டான்.[4]

அகத்தியர் தமிழுக்கு இலக்கணம் செய்தவர் என்பதைப் பாவேந்தர் மறுக்கிறார். வட நாட்டிலிருந்து தென்னாட்டில் குடியேறிய ஆரியர்களில் இவர் முதன்மை யானவர். மதகுருவாக இருந்து மன்னன் மனத்தை

---

1. கம்பராமாயணம், ஆறுசெல் படலம், பாடல் 44
2. மேலது, அகத்திய, பாடல். 35
3. மேலது, பாடல் 41
4. மேலது, பாடல் 47

மாற்றி, பண்டைய பண்பாட்டினை அழித்துத் தன் இனப் பண்பாட்டைப் புகுத்திவிட்டவர் என்பதை 'அகத்தியன் விட்ட புதுக்கரடி' என்னும் தன் கதைபொதி பாடலில் விளக்குகிறார்.

"முதன் முதல் வடநாட்டிலிருந்து தென்னாடு வந்த அகத்தியர் வடபால் விந்தியத்தையடுத்தும் தென்பால் மகேந்திரத்தையடுத்தும் வதிதல் கூறிய வான்மீகத்தில் அவரைத் தமிழறிவுடையவராகக் கூறாமை ஈண்டைக்கு நினைக்கத் தகும். அனுமனுக்குத் தென்னாட்டு மொழியுணர்ச்சியும் வட மொழி யுணர்ச்சியும் கூறும் வான்மீகி முனிவர் அகத்தியரைச் சிறிதும் தென்மொழியுணர்ந்தவராகப் புகலாமை பெரிதும் வியப்பைத் தருவதாகும்"[1] என்கிறார் ரா. இராகவையங்கார். இராமாயணத்தில் குறிப்பிடப் படும் அகத்தியர் தமிழறிந்தவராக வான்மீகத்தில் இல்லை என்கிறார் இராகவையங்கார். ஆனால் பாரதிதாசனோ,

"தமிழகத்தை—திராவிட நாட்டைத் தம் வழிப் படுத்தற்கு முதன்முதல் தமிழகத்தை அடைந்த ஆரியர் கூட்டத்தின் தலைமைப் பாதிரிதான் அகத்தியன்.

அவன் தமிழகத்தில் வந்து, தமிழ்ப் புலவர்பால் தமிழைக் கற்றுக் கொண்டான்; வாலையவிழ்த்தான். முற்பிறப்பில் செய்த நல்வினைப் பயனே ஒருவன் அரசனாயிருப்பது என்றான்.

---

1. ரா. இராகவைங்யகார், தமிழ் வரலாறு, பக். 216

பலவாறு அந்நாள் ஆளவந்தாரைப் பிடிக்க ஏற்றவாறு புளுகினான். அரசனின் செல்வாக்கினால் நாளடைவில் பச்சைத் தமிழர் நூல்களை ஒழித்துத் தன் நஞ்சு கலந்த காப்பித்தூளைப் பரப்பினான். அதை அரசன் அருந்த அனைவரும் அருந்தலாயினர். இதையே 'அகத்தியன் விட்ட புதுக்கரடி'யின் சுருக்கமாகக் கூறியுள்ளேன்''[1] என அந்நூலுக்கு எழுதியுள்ள முன்னுரையில் குறிப்பிடுகிறார்.

பழைய திராவிடம் செழுமை மிக்கது;
வழுவா அரசியல் வாய்ப்பும் பெற்றது;
செந்தமிழ் இலக்கணச் சிறப்புற் றிருந்தது;
வையக வாணிகம் மாட்சிபெற் றிருந்தன;
ஓவியம் தருநரும், பாவியம் தருநரும்,
ஆடல் பாடல் வல்லுநர் அனைவரும்,
திராவிடர் தமக்குப் பெரும்புகழ் சேர்த்தனர்;
இராதது ஒன்றில்லை திராவிடர் நாட்டில்;
இந்த நிலையில் வந்தான் அகத்தியன்.

மக்களின் இப்போதைய நிலை முற்பிறவியின் பயன் என்னும் புதுக் கரடியை விட்டான். அரசனாயிருப்பதும், ஆண்டியாயிருப்பதும் அவனவன் வினைப்பயன் என்ற கருத்தைப் பரப்பினான்.

செல்வம் முற்பிறப்பில் செய்த நல் வினைப்பயன்;
சிறுமை முற்பிறப்பில் செய்த தீ வினைப்பயன்;
இக்கருத்து நாட்டில் எங்கும் பரவினால்
மக்கள் எதிர்ப்பரோ மன்னன் ஆட்சியை?
எதிர்க்க மாட்டார். தாங்கள் எய்திய

1. பாரதிதாசன், அகத்தியன்விட்ட புதுக்கரடி, என்னுரை.

'சிறுமை' முற்பிறப்பில் செய்த தீ வினைப் பயன்
என்று சும்மா இருப்பார் அன்றோ?

இப்பிறப்பு, மறுபிறப்பு, இருவினை, ஆன்மா என என்னென்னவோ உரைத்தான். நான்மறை வளர்த்தால் விண்ணை அடைந்து வாழலாம் என்று ஆசை காட்டினான். மன்னனின் சிந்தனையையும் மக்களின் சிந்தனையையும் மங்கச் செய்தான். படிப்படியாக அரசியல் செல்வாக்குப்பெற்று ஆட்சியுரிமை பெற்றான். அரசன், அகத்தியன் ஆட்டும் பாவையாய் அடிமை யானான் ஆரியம் வென்றது.

அரசனும் அகத்தியன் அடிமை யானான்;
தமிழர் கலை, பண்பு ஒழுக்கம் தகர்ந்தன;
பழந்தமிழ் நூல்கள் பற்றி எரிந்தன;
அகத்தியம் பிறந்ததே அருந்தமி ழகத்தில்![1]

என அகத்தியத்தை மறுக்கின்ற புரட்சிக் கவிஞர், தமிழ் பொதிய மலையில் தோன்றியது எனப் பாடுவது ஒரு முரணாக உள்ளது. இன அடிப்படையில் அகத்தியத்தைப் பழிக்கிறது அவருடைய புரட்சி உள்ளம்; ஆயினும் பொதிய மலையிற் பிறந்தது தமிழ் எனப் பெருமை கொள்கிறது அவருடைய மரபு உள்ளம்.

கமுகொடு நெடிய தென்னை
கமழ்கின்ற சந்த னங்கள்
சமைகின்ற பொதிகை அன்னை,
உனைத்தந்தாள்; தமிழைத் தந்தாள்;
தமிழ்எனக்(கு) அகத்தும் தக்க
தென்றல்நீ புறத்தும், இன்பம்

---

1. பாரதிதாசன் பாடல்கள், தொகுதி 3, பக். 109-113

அமைவுறச் செய்வ தைநான்
கனவிலும் மறவேன் அன்றோ?[1]

இங்கே கவிஞரிடம் மரபு, புரட்சியை - புதுமையை வென்றுவிடுகிறது.

முரண்பாடுகளின் ஒற்றுமையில்தான் வாழ்வியக்கம் இருப்பதாகத் தத்துவமேதைகள் கூறுகின்றனர். நீர்மம், உயிர்மம் இவற்றின் ஒற்றுமையில்தான் தண்ணீர் கிடைக்கிறது. இரவு, பகல் இவற்றின் ஒற்றுமையில்தான் நாள் கிடைக்கிறது. காவியக் கம்பனும் புரட்சிக் கவிஞருமான இணைவில் நமக்குக் கிடைத்துள்ள தமிழ்ச் செல்வத்தையும் இப்படி எண்ணிப் பார்க்கத் தோன்றுகிறது.

வெவ்வேறு வரலாற்று, சமூக, கருத்துச் சூழல்களில் இவர்கள் வாழ்வும் படைப்பும் அமைந்திருந்தபோதிலும் தமிழ் என்னும் மணிச் சரட்டில் ஒருசேரக் கோத்துப் பார்ப்பதற்கான வாய்ப்புகளை அவை வழங்கியிருப்பதை நாம் கண்டோம்.

காப்பியக் கம்பனும், புரட்சிக் கவிஞரும் தத்தம் தனித்துவ ஆளுமையின் ஆற்றலால் தனித்தனிப் பரம்பரைகளை உருவாக்கிக்கொண்டதைத் தமிழ் இலக்கிய வரலாறு பெருமிதத்தோடு சொல்லிக்கொண்டிருக்கிறது. வெளிப்படையாகவோ குறிப்பாகவோ பதிந்துவிட்ட இவர்களின் அடையாளங்களை விலக்கிவிட்டு, வெளியேறிச் சிறப்பதென்பது இவர்களின்

1. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, பக். 13

பரம்பரை முத்திரை இல்லாத படைப்பாளர்களின் ஆற்றலுக்கும் பெரும்பாலும் அப்பாற்பட்டதாகவே இருந்துவருகிறது.

புகழ்க் கவிஞராகிய கம்பனையும், 'புரட்சிக்' கவிஞராகிய பாரதிதாசனையும் இலக்கியப் படைப்பாளிகளும் இலக்கியத் திறனாளிகளும் போற்றுவதைவிட, மக்கள் மிகுதியாகப் போற்றுவர். காலம், மறதிதொடாத இடத்தில் இவர்கள் பெயர்களை எழுதி வைத்து விட்டது!





டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன்




தமிழ் வளர்ச்சி இயக்குநராகத் தன்னிகரற்றுப் பணியாற்றி, மணிவிழா ஆண்டினில் அடியெடுத்து வைக்கும் டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பனார், கரைகாணாக் கல்விக் காதலால் கணிதத்தில் இளங்கலைப் பட்டமும், தமிழில் முதுகலைப் பட்டமும், சட்டக் கல்வியும் பெற்ற அறிவுடையார்; அதனாலே எல்லாம் உடையார்.

கணக்கில் துல்லியம், தமிழின் தண்மை, சட்டத் தெளிவு என முத்துறையின் மாண்புகளையும் தம் கருத்திலும், காரியத்திலும் பளிச்சிடச் செய்யும் பண்புடையார். கல்வி அலுவலர், மக்கள் தொடர்பு அலுவலர், தமிழ் வளர்ச்சி அலுவலர், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் பதிவாளர், பதிப்பாசிரியர் என்று பல்வேறு பணிகளுக்கு மணி ஒளி ஊட்டிய பீடுடையார்.

குவிந்த செறிவும், குன்றாத நினைவும், கூறும் பொருளின் குலையாத முழுமையும் கூடியிருந்து குளிரக்குளிர நன்றான தமிழில் நறுக்கென்றுரைக்கும் நா வீறுடையார்; கவிதைகளில் ஆய்வு நடாத்தி கலைவிளக்கம் தந்த செம்புலமைக் கீர்த்தியுடையார்.

நெஞ்சையள்ளும் சிலம்பு மட்டுமின்றி சிந்தைக்கினிய சீறா, பெருங்கதை, நாலடியார், பாவேந்தர் பாரதிதாசன், புதுக் கவிதைகள் என இலக்கிய உலகின் எல்லாப் புறமும், மரபின் முதுமை தொட்டு மாறும் புதுமை வரையும், நுணுகிக் காணும் கூர்த்த நோக்குடையார்.

செந்தமிழ்ச் சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளையினால் "சிலம்பொலி" எனச் சிறப்புப் பெயரிடப் பெற்றதில் தொடங்கி, 'சீறாச்செல்வர்', 'இலக்கியச் செம்மல்', 'நூலறி புலவர்' எனத் தொடரும் மெய்க்கீர்த்தி பல உடையார்.

பத்துக்கும் மேற்பட்ட அருந்தமிழ் நூல்களை ஆக்கிய பெருமை உடையார். நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களுக்கு ஆராய்ச்சிக்கண் கொண்டு அணிந்துரையாய் முன்னுரைகள் வழங்கிய அருமையுடையார்; அதனாலே அத்துறையில் புதுமை படைக்கும் பெற்றி மட்டுமின்றி, பிறருக்கு வழிகாட்டி ஊக்கப்படுத்தும் உயர்நெறியும் நிரம்ப உடையார்.

இன்னருஞ் சோலையாய், இனிய நீர்ச்சுனையாய், பன்னரும் பாட்டிசையாய், படரும் குளிர்த் தென்றலாய் இலக்கியவுலகில் இலங்கும் இவர், 'சென்றடையாத திரு' உடைய 'தமிழ்ச் செல்ல அப்பர்'.